உ

சிவமயம்.

# திருவாப்பனூர்ப்புராணம்

திருப்பூவணம் கந்தசாமிப்புலவர்
இயற்றியது.

இஃது
காசிவாசி சுவாமிகள்
என்னும்
ஸ்ரீ. ஆவுடையப்ப தப்பிரான்சுவாமிகள்
வேண்டுகோளின்பேரில்
திருச்சிராப்பள்ளிஜில்லா துறையூர்
சிவப்பிரகாசசுவாமிகள் ஆதினம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சொக்கலிங்கசிவப் பிரகாச
பண்டாரச்சந்நதியவர்கள்
அடியார்குழாத்துள்
ஒருவராகிய
சிதம்பரம்
ப வசவலிங்கபுராணிகர்
செய்த புதய வுரையுடன்.

மதுரை
சவுத் இந்தியன்அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.
(முதற்பதிப்பு.)

ஜெய வரு .

உ

# உரைச்சிறப்புப்பாயிரம்.

இஃது - தமிழ்வித்துவான்

## அ. வேங்கடசுப்புப்பிள்ளை அவர்கள்

## இயற்றியது.

---

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

மணிகாட்டும் பணிலமெலாம் வயல்காட்டவயல்விளைவா வணங்கள்காட்ட, வணிகாட்டுமகளிர்நிறை மனைகாட்டத்தீந்தமிழினமிழ்தனார்கண், கிணிகாட்டுங்கழன்மைந்த ரிளங்குதலைமொழிகாட்டக்கிளர்நூற்சிறப்பட், டணிகாட்டு மாலயங்கள் கதிகாட்டவயங்குதிருப்பாண்டி நாட்டில்

பொன்மாலையொடு மலையத்துவசன்மகிழ்பூப்ப மகப்பூத்துப்பொற்பார், தன்மாலையம்போலுந் தழைத்தகருங்கயற்கணுமைந்தாயைவேட்டு, தன்மாலைவேம்பணிந்து முடிபுனைந்து கோலோச்சிஞாலங்காத்த, முன்மாலையனும்பரவச் சொக்கேசர்வாழ்மதுரைமூதூர்ப்பாங்கர்

சத்திக்குநீர்வையை வடகரைமேன் மன்னுசிவ தலமென்றோங்குமெத்திக்கும புழ்குரவங் கமழ்குழலா ளிடப்பாகத்திறைவர் சான்றோர், புத்திக்குண்மருவு மனன வினோதர் திருவாப்பனூர்ப்புராணந்தனைத், தித்திக்கும் பொருட்சுவைதேர்ந் தாய்ந்துணர்வோருவப்பவுரைசெய்கவென்று

பழிப்புரைதீரொழுக்கமுள்ளோ னுவுடையதம்பிரான் பதிஞானந்தேர், வழிப் புருடோத்தமனிகர் மாதவன் காசிவாசியெனுமேலோன் வேண்டக், கொழிப்புரையாதெந்தப்பாவலருமிகவியந்துமனங்குதுகலிப்ப, பொழிப்புரைசெய்தணிமதுரை வணிகர்தருமுபகாரப் பொருள் கைக்கொண்டு

எழுதாத வெழுத்திலுறப்பதிப்பித்துப் பிரதிபலவிப்பார்மீது,பழுதாத விலையெனத் தந்தனனவனொளிற்றில்லைப்பதியில் வந்தோன், றொழுதாதர்க் கருள்வீரசைவசிகாமணி பழனித்தோன்றலீன்ற, பொழுதாதவனைமதியைப்புதனொடுவியாழனையும் போன்றமைந்தன்.

முரசங்களதிர்வாயிலிடவபுரத் திருக்கோயின்முக்கணனைப், பரசங்கநெறிசிறந்தோன் றிருக்கூடலாடலுரைபாடோர்ந்து, சரசங்கத்தமிழில்வருபுராணத்தின் சாரமெலாமதித்துமாந்திப், பிரசங்கமழைபொழியு முகிலனையான் வசவலிங்கப்பேர் வல்லோனே.

---

உ

சிவமயம்.

## சாத்தூரைச்சேர்ந்த சிறுக்குளம்.

## க. தாமோதரம்பிள்ளை அவர்கள்

## இயற்றியது.

---

பூவிருக்குஞ் செழுங்கமலப் பொகுட்டிருக்குமின்சேர் பைம்புய
லூநாவிற், பாவிருக்கு மடந்தையுளம்பரிந்திருக்கும் புத்தேளும்
டணிதற்கெட்டாத், தேவிருக்குமுடியின் மிசை திகழ்ந்திருக்குங்
கடவுள் செங்கோல்செலுத்துஞ்செய்ய, மாவிருக்கும்பொதும்ப
ரெங்கு மலிந்திருக்குஞ்சிறப்பு மிகுவழுதிநாட்டில்

நன்னருறுதிவ்வியமாதலங்கள் பதினான்கவற்றுணலங்கூர் விண்
ணோர், பொன்னகரமெனுமதுராபுரிக்கு வடபால் விபவம்பொ
ருந்திநாளுஞ், சொன்னமகமேருவின் மேலேற்றுசெழுந் தீபமெ
னத் திலங்குந்தூய்மை, மன்னியபல்வளங்கண்மலிந்தோங்குதி
ருவாப்பனூர் மான்மியத்தை

இனியதிருத்தென்மொழியிற் பூவணமா நகரினுறை யிசைவலா
ன்முக்கனி யிரசமெனப் புலவர்களிப்புறநாற் கவிபகருங் கந்த
சாமிப் புனிதநன்னாவலனுரைத்த புராணமதற்கலகில் பெரும்
புகழ்சேர் காசி, நனிதவராசியெனு மாவுடைய தம்பிரான்முக
மனவின்று கேட்ப

பொருவிலுணாசெய்தவ னன்னவனியாவனெனி லுகந்தென்போ
லவார்சிந்தை, பெரிதுமகிழ்ந் தினிதுவப்பப் பிரசங்கமழைத்தா
னா பெய்யுங்கொண்மூ, கருதரியநூல்பலவுங் கரதலாமலகமெ
னக்கருத்தினோர்ந்து, பருவரலில்வாலறிவு படைத்துயர்ந்த பாவ
லனும் பழனியண்ணல்

செய்தபெருந்தவ மனைத்துமோருருக்கொண்டு தித்ததெனச் செ
னித்தசெம்மல், கைதவமில் வீரசைவ குலமணி விண்ணரமகளி
ரகமழ்நறும் பூக்கொய்தளிரார் பசும்பொழில்சூழ் தரும்பதிநீ
ள்சிதம்பரம்வாழ்சூரிசில் வாய்மை, மெய்தவறு வசவலிங்க புரா
ணிகரோதயநல்விபுலமாலை

சிவமயம்.

# தேவாரப்பதிகம்.

——:0*.*.0:——

## திரு ஆப்பனூர் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

முற்றுஞ்சடைமுடிமேன் முதிராவிளம்பிறைய
னொற்றைப்படவரவமது கொண்டரைக்கணிந்தான்
செற்றமில்சீரானைத் திருவாப்பனூரானைப்
பற்றுமனமுடையார்வினை பற்றறுப்பாரே. (௧)

குரவங் கமழ்குழலாள்குடிகொண்டு நின்றுவிண்ணோர்
விரவுந்திருமேனிவிளங்கும்வளையெயிற்றி
னரவமணிந்தானை யணியாப்பனூரானைப்
பரவுமனமுடையார் வினைபற்றறுப்பாரே. (௨)

முருகுவிரிகுழலார்மனங்கொளனங்கனைமுன்
பெரிதுமுனிந்துகந்தான் பெருமான்பெருங்காட்டி
னரவமணிந்தானை யணியாப்பனூரானைப்பரவு
மனமுடையார் வினைபற்றறுப்பாரே. (௩)

பிணியும்பிறப்பறுப்பான் பெருமான்பெருங்காட்டி
றுணியினுடைதாழச் சுடரேந்தியாடுவா
னணியும்புனலானை யணியாப்பனூரானைப்
பணியுமனமுடையார் வினைபற்றறுப்பாரே. (௪)

தகரமணியருவித்தடமால்வரைசிலையா
நகரமொருமூன்று நலங்குன்றவென்றுகந்தான்
அகரமுதலானை யணியாப்பனூரானைப்
பகருமனமுடையார் வினைபற்றறுப்பாரே. (௫)

ஓடுந்திரிபுரங்களுடனே யுலந்தவியக்
காடதிடமாகக் கனல்கொண்டு நின்றிரவி
லாடுந்தொழிலானை யணியாப்பனூரானைப்
பாடுமனமுடையார் வினைபற்றறுப்பாரே. (௬)

இயலும்விடையேறி யெரிகொண்மழுவீசிக்
கயலினைக்கண் ணாளொருபால்கலந்தாட
வியலுமிசையானை யணியாப்பனூரானைப்
பயிலுமனமுடையார் வினைபற்றறுப்பாரே. (எ)

கருக்குமணிமிடறன் கதனாகக்கச்சையினா
னுருக்குமடியவரை யொளிவெண்பிறைசூடி
யரக்கன்றிறலழித்தா னணியாப்பனூரானைப்
பருக்குமனமுடையார் வினைபற்றறுப்பாரே. (அ)

கண்ணன் கடிக்கமல மலர்மேலினிதுறையு
மண்ணற்களப்பரிதாய் நின்றங்கடியார்மே
லெண்ணில் வினைகளைவானெழி லாப்பனூரானைப்
பண்ணின்னிசைபகர்வார் வினைபற்றறுப்பாரே. (கூ)

செய்யகலிங்கத்தார் சிறுதட்டுடையார்கள்
பொய்யர்புறங்கூறப் புரிந்தவடியாரை
யையமகற்றுவா னணியாப்பனூரானைப்
பையனினைந்தெழுவார் வினைபற்றறுப்பாரே. (கo)

அந்தண்புனல்வைகை யணியாப்பனூர்மேய
சந்தமலர்க்கொன்றை சடைமேலுடையானை
நந்தியடிபரவு நலஞானசம்பந்தன்
சந்தமிவை வல்லார் தடுமாற்றறுப்பாரே. (கக)

திருச்சிற்றம்பலம்

பாண்டிநாட்டிலுள்ளது.

சுவாமி பெயர் - ஆப்பனூரீசர். தேவியார் - அம்பிகையம்மை.



உ

சுபமஸ்து.

கணபதிதுணை.

# திருவாப்பனூர்ப்புராணம்.

---

## விநாயகக்கடவுள்

### காப்பு

திருத்தன்மாக்கடன்மேனியஞ்செம்மலா
ரருத்தன்மாக்கமலந்திகழாப்பனூர்
கிருத்தன்மாக்கதைநூனிரம்பும்பொருட்
டொருத்தன்மாக்கழலுன்னு மென்னுள்ளமே.

(இதன் பொழிப்புரை)

இலக்குமியைத்தனது அழகிய கடல்போலுந் திருமேனியிலுடைய மஹாவிஷ்ணுவைப்பாதயாசவுடையவரும் வண்டுகள் மொய்க்கும் தாமரைகள் மலர்ந்த தடாகங்கள்சூழ்ந்ததிருவாப்பனூரில் எழுந்தருளி ஆனந்த திருநிருத்தஞ் செய்தருளுகின்றவராயுமுள்ள திருவாப்புடையீசரது பெருமைபொருந்திய சரிதமாகிய இவ்வாப்பனூர்ப்புராணம் இடையூறின்றி யினிது முடிதற்பொருட்டு யானையாகிய விநாயகக்கடவுளது மஹத்வமுள்ள திருவடிகளை என்னுள்ளம் தியானஞ்செய்துகொண்டிருக்கும் எ-று. (க)

விநாயகமூர்த்திக்கு உத்தமாங்கம் யானைமுகமாயிருத்தலின் யானையென்றே கூறியவாறு காண்க.

இவ்வணக்கம் ஏற்புடைக்கடவுள் வணக்கமென்றறிக

### நூற்பயன்

ஒருமையினோர்த் தபதிடதமுணர்த்துபரம்பரனாப்ப னூர்ப்புராண மருமையினோதினர்கேட்போ ரனைவருதிசயனுந்த மாமென்போகம், பருகுவர்வாழுனாளவுங்குறைதவிர்ந்து பிணியொழிந்துபகை வென்றோங்கித், தருமலாமாகத்துவர்ந்துவாலுலகமுழுவதுஞ் சஞ்சரிப்பர்மாதோ.

(இ-பொ-ரை)

வேதசிரசாகிய உபநிஷத்தினது உண்மையை அறிவிக்கும் சிவபெருமான் வீற்றிருக்கும் திருவாப்பனூர்ப்புராணத்தை மன வொருமையுடனுணர்ந்து அருமையாய்ப் பிறர்கேட்கப்பிரசங்கம் செய்வோர்களும் அவ்வாறே யதனைக்கேட்போர்களும் அன்னமு தல் அந்தலீருக்கக்கூறும் *எண்வகைப்போகங்களையும் அனுபவி த்து மரணாந்தம்வரையில் நிறைந்தசெல்வமுடையவர்களாய் அ ரோகதிடகாத்ரமுள்ளவர்களாயுடைய பகைவரின்றிப் புஷ்பவிமானத் திவர்ந்துகொண்டு தேவலோகமுழுவதும் உலாவித்திரிவர் (என்ற வாறு) (௨)

*எண் வகைப்போகமாவன—போஜனம், பெண், ஆடை, அணி கலன், தாம்பூலம், பரிமளம், பாட்டு, பூவமளி, என்பதாம்.

### திருவாப்புடையார்.

நீர்பூத்தசடைற்கணிந்த திங்களை நுதைபுரபுகத்தி னெறிபோலெண் ணில், பார்பூத்தவிலாண்டமுதித்தொடுங்குங் கருப்பொருளைப ரந்தமப்பர், கார்பூத்ததிருவுருவத் தரிபிரமாதியர்கருத்துங் கடந்தன்று, சீர்பூத்ததிருவாப்ப னூருடையதனிமுதலைச் சிந் தைசெய்வாம்.

(இதன் பொழிப்புரை)

ஜலம்நிறைந்த சமுத்திரத்தில் அலை-திவலை-நுரை-குமிழியா கிய இவைகளுண்டாகி மீண்டும் அதனிடத்தில் ஒடுங்குதல்போல ப் பூமியையுடைய அநேககோடி அண்டங்களுமவற்றிலடங்கிய சராசரங்களும் உற்பவித்து ஒடுங்குதற்கிடமாகிய நிமித்த காரண ப்பொருளாகியும் பரந்தாமமென்னு பெயரையுடைய நீலமே கசியாமளரூபராகிய விஷ்ணுமூர்த்தி பிரமதேவர் முதலியோரறி விற்குமடாற்பட்டு விளங்குபவராயுமுள்ள சிறப்புப்பொருந்திய திருவாப்புடையீசனைத் தியானிப்பாம் (என்றவாறு)

பிரபஞ்சமாகிய காரியத்திற்குத் திருவாப்புடையீசர் நிமித்த காரணம் என்றும் உபாதான முதற்காரணம் மாயையும் துணைக்காரணம் சிவசத்தியுமென்றறிக.

### அகிலாண்டம் உதித்தொடுங்குதலாவது.

பராபரத்திற் பரமும் பரத்திற் சிவமுஞ் சிவத்திற் சத்தியுஞ் சத்தியில் நாதமும் நாதத்தில் விந்துவும் விந்துவில் சதாசிவமும் சதாசிவத்தில் மகேசுரனும் மகேசுரனில் உருத்திரனும் உருத் திரனில் விஷ்ணுவும் விஷ்ணுவில் பிரமாவும் பிரமாவில் ஆகாச மும் ஆகாசத்தில் வாயுவும் வாயுவில் அக்கினியும் அக்கினியில் அ ப்புவும் அப்புவில் பிருதுவியும் பிருதிவியில் அன்னமும் அன்ன த்தில் நரமிருகபக்ஷிதாபரசங்கமாதிகளும் தோன்றின. மீண்டும் நரமிருகபக்ஷிதாபரசங்கமாதிகள் அன்னத்திலும் அன்னம் பிரு

துவியிலும் பிருதுவி அப்புவிலும் அப்பு அக்கினியிலும் அக்கினி வாயுவிலும் வாயுவு ஆகாசத்திலும் ஆகாசம் பிரமாவிலும் பிரமா விஷ்ணுவிலும் விஷ்ணு உருத்திரனிலும் உருத்திரன் மஹேசுரனிலும மஹேசுரன் சதாசிவனிலும் சதாசிவன் விந்துவிலும் விந்து நாதத்திலும் நாதம் சத்தியிலும் சத்தி சிவத்திலும் சிவம் பரத்திலும் பரம் பராபரத்திலும் ஒடுங்கியவாறு காண்க. (௩)

இதுவுமது

காப்புடையாரமரர்மணி மகுடகோடிகளுரிஞ்சிக் கழற்கால்சேக்குஞ், சேட்புடையார்கனகவரைச் சிலையுடையாரணிசருமந் திருத்தார்மூன்றும், பாப்புடையாரெனத்தரிக்கும் பண்புடையார் வையைவடபான்மிக்கோங்கு, மாட்புடையார்திருவடித்தா மரையையருட்டேன்றதம்ப வகத்துள்வைப்பாம்.

இ-பொ-ள்

கற்பகச்சோலையின் பக்கத்தில் வசிக்குந்தேவர்கள் சிரத்திற்றரித்திருக்கும் இரத்தினங்கள்பதித்த பலகோடி கிரீடங்கள் உராஞ்சி அதனல் தழும்பேறிச்சிவந்த வீரக்கழலையணிந்த திருவடியையுடையவரும் மஹாமேருவை வில்லாகவுடையவரும் ஆபரணத்தைப்பாம்பாகவும தோலை வஸ்திரமாகவும் மாலையை ஆத்தியாகவுமுடையவரும் வேகவதியின் உத்தரதீரத்தில் எழுந்தருளிவிளங்கும் திருவாப்புடையாரென்னுந் திருநாமமுடையவருமாகிய சிவபெருமானது அழகிய பாதபத்மங்களை கிருபையாகிய தேன்ததும்ப மனதில்வைப்பாம (என்றவாறு) (௪)

குரவங்கமழ்குழலம்மை.

கானேறுதருநீழல்வின மகளிர்குழம்சாரிருட்குங்கணவர்குழம், வானேறுமிளிர்தாவெண் மதியினுசகுங்குவியாது மலர்ந்துஞானர், தானேறுமன்பருளத் தடந்தோன்றித்தண்ணளிசூழ் தருநீன்வாசத, தேனேறுமலர்க்குரவங் கமழ்குழலாளடிக்கமலஞ் சிரமேல்வைப்பாம்.

(இ-பொ-ள)

வாசனைபொருந்திய கற்பகவிருக்ஷத்தின்நிழலில் வசிக்கும் தேவஸ்திரீகளது கூந்தலாகிய இருளுக்கும தமது கொழுநராகிய சிவபெருமான் ஜடாமகுடத்திற்றரித்திருக்கின்ற ஆகாயத்தில் சஞ்சரிக்கும் பிரகாசத்தையுடைய தாவளயமான சந்திரனுக்குங்குவியாமல் விகசிதமாகி சிவஞானம் பொருந்திய மெய்யன்பர்களுள்ளமாகிய தடாகத்திலுண்டாகிய தண்ணிய கிருபையையுடையதீண்ட பரிமளங்கமழுந்தேனிறைந்த மலர்களைத்தரித்த குரவங்கமழ்குழலமமையெனனுமஅம்பிகையினதுதிருவடித்தாமரைகளைச் சிரசின்மேல்வைத்துககொள்வாம்.

தேவஸ்திரீகள் அம்பிகையின் திருவடிகளில் காலந்தோறும் வழுவாதுசென்று நமஸ்கரித்தலின் குழற்குக்குவியாதென்றும்,

ஒருக்கால் சுவாமி தன்னிடத்துண்டான பிணக்கு நிவிர்த்தியாதற் பொருட்டு அம்பிகையின் பாதத்திற்பணிந்தாராதலின் கணவர் சூடும் மதிக்குக்குவியாதென்றும் கூறினார். உதாரணம் - பிரபுலிங்கலீலை (ஆதிபகவன்றனதூடறணிப்பான் பணியவவ்விடைறவன் பாதமிறைஞ்சமதற்கு நெற்றிப்பகையு மல்குற்பகையுமாஞ் சேதமதியு மரவும் விழுஞ்செயற்கு மூவகைசெயாமலலை மாதுபணியுமதற்கு மனமகிழுமுமையை வணங்குவாம்) மீனாக்ஷியம்மை பிள்ளைத்தமிழ் (கொழுதிமதர்வண்டுழக்கு குழற்கோதைக்குடைந்த கொண்டலும் என்னும் செய்யுளில்கூன பிறைக்கோடுழுதபொலஞ்சிறடிக்குடைந்த செந்தாமரையும் எனவும், ஒல்குங்கொடிச் சிறுமருங்கிற்கிரங்கி என்றசெய்யுளில் அம்மையுன்னடிக்கூன்பிறைதழீஇமல்குஞ்சுவட்டினை வலம்புரிக்கீற்றிதகொல் வாணியென்றசதியாடி எனவும் பெரியநாயகியம்மை விருத்தத்தில் முழுமணிமிடற்றன்கனன் மழுவீரன் முக்கணுண்டகை தினதெழில்கூர்முகம் புலர்தலைக்கண்டுடல் வளைந்தடியின்முனைப்பிறைக்கோடுகொண்டுழுத விழுமணியரவ துழைசடாடவியின் விண்ணதித் தண்புனல்வழப்ப விரைவொடு குளிர்ந்து முகமலர்தலினால் மென்கொடியென நினையுணர்ந்தேன் என்வும வருவனவற்றாற்காண்க. (ரு)

சபாபதி.

விரிசடைமின்னொளிவிரிப்பப் பகீரதிவெண்டிரைபுரட்டமிளிர்
பூங்கொன்றை, சொர்தறுஞ்செந்தேனுளிப்ப மலைமகள்கண்
விளங்களிப்பச் சுடர்க்கண்மூன்றும, புரிபவுரியினிற்கலவத் தமரு
கநாதங்கறங்கப் புவனம்வாழப்,பரிபுரவேதஞ்சிலம்பப் பொது
டஞ்செய்பரமபொருளைப் பணிந்துவாழ்வாம.

(இ-பொ-ள.)

மின்னற்பிரகாசத்தைப்போல் விரிந்தஜடைகள் ஒளியை வீசவும் பகீரதியெனனுங் காரணப்பெயரையுடைய கங்கை அலைகளைச்செய்யவும் அழகுவிளங்குங் கொன்றைமாலை நறிய செவ்விதான தேனைத்துளிக்கவும் பர்வதராஜகுமாரியாகிய உமாதேவி கண்டு உள்ளத்திலானந்தமடையவும் சந்திரன், சூரியன, அக்கினி யென்னும் பிரகாசம பொருந்திய மூன்றுகண்களும தமமாற்செய்தருளும் பரமானந்தத் தாண்டவத்தனவழியே சுழலவும் திருக்கரத்தற் றரித்திருக்கும்தமருகமுழங்கவும புவனவாசிகளெல்லாம மகிழ்வாழ்வை யடையுமபொருட்டுவேதங்களாகிய சிலம்புகள் சப்திக்கவும கனகசபையினிடத்துப் பஞ்சகிருத்தியத் திருநடனஞ்செயதருளும மேலான உண்மைபபொருளாகிய சபாபதி மூர்த்தியை வணங்கி வாழ்வாம. (எ-று) (சு

துர்க்காதேவி. வேறு.

கருநடங்கழிக்குமீசன் கழுமயலகன்மேற் றூன்செய்
திருநடமிசத் தொவ் வாமென செய்தும்மனதிருக்கவெற்பி

ருநடந் தலையமேதி யுயர்சிர நெரிய நின்று
பெருநடஞ் செய்யுந் தெய்வப் பிராட்டியை வணக்கஞ் செய்வாம்.

(இ-பொ-ரை)

ஆன்மாக்கள் ஜனன மரணமடைந்து வரும் சகலாவஸ்தை யினின்று நீக்கியருளும் சிவபெருமான் முயலகனென்னும் இராக்ஷதன் முதுகின்மேனின்று தான்செய்யுந் தாண்டவம் இதற்கு நிகராகாதே என்செய்வோமென் றேக்கியிருக்க மலைபோலும் பெரிய வடிவத்தோடு நடந்தாற்போல மகிஷாசுரனது உயர்ந்த தலை சிதையநின்று பெருமைபொருந்திய திருநடனத்தைச்செய் தருளும் துர்க்கா தேவியை வணங்குவாம். (எ-று) (எ)

விநாயகர்-வேறு.

திருநான்மறைச் சங்கிலிக் கொண்டு நில்லாத செகமேழுலாய்
வருஞான மதமூற மணியாக வுதயாத்த மனவெற்பையே
யிருபாலு மணியாப்ப னூரானை யானாதமிடையன்பொடு
மொருநூலினையாப்பின்கணிற்கின்ற திதுபோலு முளதியாதரோ

(இ-பொ-ரை)

அழகிய நான்கு வேதங்களாகிய சங்கிலியைக்கொண்டு கட்டியும் அக்கட்டிற் றடையுண்டு நில்லாததேழுலகங்களிலும் ஞானமென்னுந் தானநீரூற்றெடுப்பத் திர்ந்து உதயகிரி அஸ்தகிரியென்னு மிரண்டையுமே இருபக்கங்களிலும் மணிகளாகத்தரித்த ஆப்பனூரி லெழுந்தருளியிருக்கும் விநாயக மூர்த்தியாகிய யானையானது அடிமையாக வுடைய நமதன்போடும ஒப்பற்ற இப் புராணத்திலுள்ள இவ் வோர்செய்யுளில் நிற்கின்றது ஆதலாலிது போல் வேறென்ன ஆச்சரியமிருக்கிறது(எ-று) அரோ-அசை. (அ)

சுப்பிரமணியர் துதி. வேறு.

கருமாலை யரிவிழிப்பல் சயமாலைப் புணர்திருமால் கமலநாபிப்
பெருமாலை யகமபடைக்கும் பிரமாலை யுற்றுணராப் பிரணவத்தின், குருமாலை நுகர்வதுவே குணமாலை கலுமபுனஞ்செல் கோட்டுமாலைப், பொருமாலை வேற்குமான் புதலினைத்தாமரை மலர்த்தாள் போற்றல்செய்வாம்.

இ.பொ ரை.

வண்டுபோற் கறுத்த அழகிய செவ்வரிபரந்த கண்களையுடைய தாமரைமலரில் வீற்றிருக்கும இலக்குமியைப் புணரும் மகாவிஷ்ணுவினது உந்திக்கமலத்தில் நின்றும் உற்பவித்த மிகப்பெரிய இப்பூமிமுதலிய எவற்றையும சிருஷ்டிக்கும் பிரமதேவர் சந்தேகத்துணராத பிரணவப்பொருளை யுபதேசிக்கவல்ல ஞானாசாரியராயும தினைமாலை யுண்பவதத்தாலே குணமாகக்கொண்டு தாடோறந் தினைபுனத்திற் செகுறு கொம்புகளையுடைய மாமரவடிவு கொண்ட சூரபன்மாவோடு போர்செய்த பெருமை பொருந்திய கூரியவேலாயுதத்தைத் தரித்தருளிய வராயுமுள்ள

முருகக்கடவுளது அன்றலர்ந்தவாசனைபொருந்திய சரணாரவிந்தங்களைத் துதிப்பாம் (எ-று) (௬)

### திருநந்திதேவர்.

கரியமணி கண்டனைச்செங் கண்ணுதல்வானவனைமுனிக்கணஞ்சூழ்வெள்ளி, திருவரையிற்றனிமுதலைப் பசியநறுங் கொடியினொடுந்தெரிசித்தேத்து, மரியயனிந்திரனமரர்தமையு மடியாரெனத்தன்னடிக்குளாக்குங், குருமணியைத் திரத்தடக்கை நந்திதிருவடிமுடிமேற் கொண்டுவாழ்வாம.

### இ-பொ-ரை.

காளகண்டமூர்த்தியும் செவ்வியநெற்றிநேத்திரத்தையுடைய மஹாதேவம் முனிவர்கூட்டம் சூழ்ந்திருக்கும் அழகிய கைலையங்கிரியில் எழுந்தருளி விளங்குபவராயுமுள்ள சிவபெருமானைப் பசுமைநிறம்வாய்ந்த கொடிபோன்ற உமாதேவியாரோடுமெழுந்தருளியிருக்குந் திருக்கோலத்தைத் தெரிசனஞ்செய்து துதிகின்ற மகாவிட்டுணு பிரமதேவர் தேவேந்திரன முதலியமற்றைய தேவர்கள்யாவரையும் தொண்டர்களாகத் தமது திருவடிகளிலும் நமஸ்கரிக்கச்செய்தருளும் அழகிய இரத்தினங்கள்பதித்த பிரம்பைத்தரித்த திருக்கரத்தையுடைய திருநந்தித்தேவர் திருவடிகளைச் சிரசில் ஆபரணமாகச்சூட்டி வாழ்வாமென்றவாறு. (௭)

### கலைமகள். வேறு.

உரைத்தமிழ்மூவ நாவினூற்றெழுமமுதைச்சங்கத்
திருக்கும்வெண்முத்தைக்கரரேரனனுமீக்கூட்டுந்தேனை
வரைத்தமிழ்முனிவனெஞ்சமலர்சகமலப்பூஞ்சேக்கைத
திருத்தகுமரசவன்னப்பேட்டினைச்சிந்தைசெயவாம்.

### இதன் பொழிப்புரை.

யாவரும் புகழ்ந்து கூறும் இயல் இசை நாடகமென்னு முத்தமிழிலும்வல்ல திருஞானசம்பந்தசுவாமிகள், திருநாவுக்கரசுசுவாமிகள், சுந்தரமூர்த்திசுவாமிகளென்னும் மூவரது நாவினின்றும் ஊற்றெடுத்துப்பொங்கிவழியும் அமிர்தம்போல்வாளாகியும் தலை இடை கடையென்னும் மூன்று சங்கங்களிலும் நிலைபெற்றிருந்த ஆணிமுத்துப்போல்வாளாகியும் கல்விகேள்விகளால் நிறைந்த அறிஞர்களாகிய ஈக்கள் விரும்பியுண்ணும் தேன்போல்வாளாகியும பொதியமலையினகணெழுந்தருளி விளங்குந் தென்மொழித்தலைவராகிய அகஸ்தியமஹாரிஷியின் இருதயகமலத்தில வீற்றிருக்கும் பெண்ணரசவன்னம் போல்வாளாகியும் உள்ள சரஸ்வதியைச் சிந்திப்பாம என்றவாறு. (௮)

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார். வேறு.

பெருமுலைப்பாலகன் பிரமனகண்டறியாப்பெருந்தகைமேற்
பொருமுலைப்பாலைமெலுகினுளம்புனாந்திருகத்தமிழ்ப்பா

மருமுலைப்பால நம்பனையமணி முறுவன் மலைமகளார்
திருமுலைப்பானமணக்கமழ்வாய்ச்செல்வனையாம்பரவுவாம்

இ-பொ-ள்.

பெரியமுல்லைநிலத்திற்குரியவராகிய விஷ்ணுமூர்த்தியும் பிரமதேவருங் காணாதசரப்பாட்டையுடைய சிவபெருமான்மீது உலைவாய்ப்பட்டமெழுகுபோலக்கரைந்துருகத் தேவாரப்பாமாலை பாடியருளிய வாசனைவீசுகின்ற வெள்ளியமுல்லையரும்பையொத்த அழகியதந்தப்பந்திகளையுடைய இமோற்கிரியாசனும் பெற்றெடுத்த உமாதேவியாரது சிறந்த ஸ்தனங்களினின்றுசுரந்து கொடுத்தருளிய பால்மணம் வீசுகின்றவாயினையுடைய திருஞானசம்பந்தசுவாமிகளை யாந்துதிப்பாம் என்றவாறு (௧௨)

திருநாவுக்கரசுநாயனார். வேறு.

மண்ணாசை பெண்ணாசைமூன்றுநீத்து மனத்தாசையறவெறிந்தானந்த நீர்பாய், கண்ணாசைசிவபெருமான் காட்சிக்காக்கிக்கருத்தாசையவனருட்கே கைம்மாறாக்கி, யுண்ணாசைமருந்தனையார் புகலூர்மன்னுமுழவாரப்படையாளியுருகிப்பாடும், பண்ணாசைத் திருநாவுக்கரையனபாதம் பத்திடமுக்கொழுதெஞ்சிற் பதித்துவாழ்வாம்.

இ-பொ-ள்

மண், பொன், பெண் இம்மூன்றிலும் நிகழும் ஆசையையும் இவையல்லாத பலவேறுவகையான இச்சைகளையும் நீக்கிஆனந்தபாஷ்பம்பொழியுங் கண்களின்ஆசையைச் சிவபெருமானது திருக்கோலத்தைத்தெரிசனஞ்செய்வதற்கே யாக்கிக்கருத்திலுண்டாகும் ஆசைகளை அவரது திருவருளுக்கேகைமாறாகக் கொடுத்து சந்தோஷமாயுண்ணத்தக்க தேவாமிர்தம் போலவராகியும் திருப்புகலூரென்னும்புண்ணியஸ்தலத்தில் உழவாரப்பணிவிடைசெய்தவராயுமுள்ள பேரானந்தத்தால் மனமுருகியிசைபொருந்திய திருத்தாண்டகமென்னும் தேவாரத்தைப்பாடியருளிய திருநாவுக்கரசு சுவாமிகளது திருவடிகளை எமது மனதில் வைத்துவாழ்வாம் என்றவாறு (௧௩)

சுந்தரமூர்த்திநாயனார். வேறு.

ஏறுயர்கொடிநந்திருமுதுகுன்றத்திறைவனைப் பொருள்குறித்தேத்திச், சாற்றியபதகவலையெனத்தனக்குத்தரும்பொருண் முழுவதுமணிமுத்தாற்றினில்வீழ்த்திக் குளத்தினிலெடுத்துப் பரவையிலன்றுடக்களித்தான, சேற்றினில்விளையாச்செழுமலர்க் கமலச்சேவடிசென்னிச்சேர்த்துதும்.

இ-பொ-ள்

பெருமைபொருந்திய ரிஷபக்கொடியினையுடைய விருத்தாச

லத்தில் எழுந்தருளிவிளங்கும் பழமலைநாதனைப்பொன்னுக்காகப்பாடியருளிய தேவாரத்திருப்பதிகத்தின்விலையென்றுசொல்லத்தக்கதாய்த்தனக்குக்கொடுத்த பொருள்கள் யாவற்றையும் அவ்விருத்தாசலத்திலுள்ள திருமணிமுத்தாநதியிலோர் பெட்டியில் வைத்துப்போட்டுத்திருவாரூரில கமலாலயமென்னும் சிவதீர்த்தத்திற்பதிகம் பாடிப்பலரும்பார்க்க எடுத்துப்பரவைநாச்சியார்வீட்டில் அப்போதுகொண்டுபோய்ச்சேர்த்த சுந்தரமூர்த்திசுவாமிகளது சேற்றினின்றுமுண்டாகாததாமரைமலர்போன்ற சிவந்ததிருவடிகளைச்சிரசிலணிந்துகொள்வாம் என்றவாறு. (கச)

மாணிக்கவாசகசுவாமிகள். வேறு.

வார்மாலைமுலையுமையாண்மணவாளன்மலர்க்கழற்கீழ்த்
தார்மாலையெனஞானத்தமிழ்மாலைதம்பியக
ணீர்மாலையுடன்சாத்திநிகழ்வாதவூரடிகள்
சீர்மாலைபாடுமவர்சேவடியென்சிரமீதால்.

இ-பொ-ரை.

கச்சையும் மாலையையம் அணிந்தஸ்தனங்களையுடைய உமாதேவிநாயகராகிய சிவபெருமானது சரணாரவிந்தங்களின்கீழ் பூமாலையணிவதுபோலத் தமிழ்வேதமாகிய திருவாசகமென்னும பாமாலையைக்கண்களினின்றும் பொங்கிவழியும் ஆனந்தபாஷ்பமாகிய மாலையுடன் அணிந்துவிளங்கிய மாணிக்கவாசகசுவாமிகளுடையசிறப்பையொழுங்குடன புகழ்ந்துபாடுகின்ற மெய்யன்பர்கள் பாதங்கள் அடியேனது சிரசினமேற்று என்றவாறு. (கரு)

சோழாந்தகபாண்டியன். வேறு.

தெண்ணிலவின வழுத்தோனறிச்சயப்புதெரிசனவிரதசீலமேற்கொண், டெண்ணின மறைவித்தினையோர் முளையிடங்கண்டிடபபுரத்திறையோன்கோயி, லுண்ணிலவு மனமுதற்றிருப்பணிசெய்சுகுணனையினறுலகங்காத்த, தண்ணளிவெண்குடைச் செங்கோல்வழுதிசோழாந்தகன்றாடலைமேற்கொள்வாம்.

(இ-பொரை.)

தெளிவாகிய சந்த்ரவம்சத்திற்பிறந்து ஸ்வயம்பிலிங்கமூர்த்ததெரிசனஞ்செய்தன்றி போசனஞ்செய்வதில்லையென்கிற வைராக்கியமாகிய நல்லொழுக்கத்தை யுறுதியாகக்கொண்டு அளவில்லாதவேதங்கட்கெல்லாமாதாரமான சிவலிங்கப்பெருமானையோர் ஆபினிடத்துதிக்கும்படிசெய்து தெரிசித்து இடபபுரமென்னும் இப்புண்ணியஸ்தலத்தில் சாவலோகைகநாயகராகிய சிவபெருமான எழுந்தருளியிருப்பதற்கு ஆலயமும் உள்ளேவிளங்கும் விமானமுதலிய அனேகந்திருப்பணிகளைச்செய்த சுகுணபாண்டியமஹாராஜாவைப்பெற்று உயிர்களை மனுநீதியின்படிகாத்து குளிர்ந்த வெள்ளிய சந்திரவட்டகுடைநிழலிலிருந்து செங்கோல்செலுத்திய சோழாந்தகபாண்டிய மஹாராஜாவினது பாதங்களைச்சிரசிலணிவாம். (கசு)

சைவவேதியன். வேறு.

சோதியனைப்பொன்னிதழித்தொடையானை நிலவெறிக்கும்
பூதியனையாப்பனூர்ப் புண்ணியனைப் பெண்ணியலும்
பாதியனை யருந்தமணற் பாகச்சோறடுஞ்சைவ
வேதியனைப்பனிமலர்தூஉய்மெல்லடிப்போதிறைஞ்சுவாம்.

(இ-பொ-ரை.)

பரஞ்சோதி சொரூபரும் பொன்போலுங் கொன்றைமாலையைத் தரித்தவரும் சந்திரிகையைவீசும் விபூதியையுடையவருந் திருவாப்பனூரில்விளங்கும் புண்ணியஸ்வரூபரும் உமாதேவிபொருந்திய பாதித்திருவுருவத்தை யுடையவரும் ஆகிய திருவாப்புடையீசனைத் திருவமுதுசெய்விக்க வையையாற்றுமணலையே பக்குவமான அன்னமாகச்சமைத்த ஆதிசைவப்பிராமணராகு மிருந்தவாகிய தாமரை மலர்போலுந் திருவடிகளைக்குளிர்ந்தபுஷ்பங்களாலர்ச்சித்து வணங்குவாம் எ-று. (கஎ)

சூதமுனிவர் வேறு.

முப்பழுத்தாருஞ்சொல்வேதமுனிக்குழாந்தொழுதுகேட்பத்
தீப்பழுத்தனையவேணித்திகம்பரன்சிவபுராணம
காப்பழுத்துமிழுந்தெய்வக்கனித்திரள்சிவணவாய்மை
நாப்பழுத்துமிழுஞ்சூதநற்றவமுனிதாள்போற்றி.

இ-பொ-ரை.

மிகமுதிர்ச்சிபெற்று அரிதாயாவராலும் புகழும் வேதபாரகர்களாகிய நைமிசாரண்ய வாசிகள் வணங்கிக்கேட்கக் கற்பகக்காவிலுள்ளவிருக்ஷங்கள் தன்னிடத்துள்ள முதிர்ந்தபழத்தை வேண்டியவளவு விரும்பினவர்கட்குக் கொடுக்குந்தன்மைபோல் அக்கினியைநிகர்த்த அழகிய சிவந்தஜடாமகுடத்தையுந் திக்குக்களாகிய வஸ்திரத்தையுமுடைய சிவபெருமானது மகிமைகளையுள்ளவாறேசொல்லும் புராணங்களை உபதேசிக்குந் தவசிரேஷ்டராகிய சூதபுராணிகரது திருவடிகளை வணங்குவாம் எ-று. (கஅ)

சண்டேசர் வேறு.

புரிசடைமேன முடிக்கிடந்தகொன்றையர்தார்முடித்த சிரம்போற்றியீசன், திருவுடைநன சூடித்தமலனுண்டபரிகலத்தினுண்ணுந்தருவாய்போற்றி, கருவடைப்புகுழலு மெனையெநீக்காண்ட சண்டேசக்கடவுள்சோதி, மருவுமழுகரம்போற்றியருணிறைசெஞ்சரணமலர்வனசம்போற்றி.

இ-பொ-ரை.

பரமசிவனது ஜடாபாரததிற்றரித்த அழகியகொன்றை மாலையைய ணிந்த சிரசுக்குநமஸ்காரம் அச்சிவபெருமான் திருவரையிற்சாத்தியருளிய வஸ்திரத்தைத்தரித்து அந்திருமலராகிய ஈசுர

ண்திருவமுதுசெய்தருளிய பரிகலத்திலுண்ணத்தக்க அழகிய வா ய்க்கு நமஸ்காரம். கருப்பையிற்கட்டுண்டுழலும் நாயினுங்கடை யனாகிய அடியேனை மீண்டும் அதிற்புகாமலெடுத்துத் தமக்காட் கொண்டருளிய சண்டேசுரமூர்த்தியின் பிரகாசம்பொருந்திய மழுவாயுதத்தையுடைய கைகளுக்குநமஸ்காரம் கிருபைநிறைந்த திருவடிகளாகிய செந்தாமரைமலர்களுக்குநமஸ்காரம்எ-று (௧௯)

கடவுள் வாழ்த்து முற்றிற்று.

---

## பாயிரம்.

—:o:—

மறைமுழுதுமளப்பரியவாப்பனூருடையபிரான்மான்மியஞ்சிற் றறிவுடையயானளக்குந்தரத்ததோவத்தலத்தினுதிசைவ ரிறைகுலசேகரவழுதிநாமம்நடிமரபுசித்தோரின்னூறென்னூற் றுறைமுறையினியற்றெனவச்சொன் மறுக்கமாட்டாமைத் தொ டங்கினேனல்.

இ-பொ-ள.

வேதங்களாலுமளவிட்டறிதற்கரிய பெருஞ்சிறப்பினையுடை ய திருவாப்பனூரென்னுந் திவ்வியஸ்தலத்தில் எழுந்தருளிவின ங்குந் திருவாப்புடையீசரது மான்மியத்தைச் சிஞ்சிற்ஞனாகிய அடியேன்சொல்லத்தக்கதன்று ஆயினும் அந்நகரத்துள்ள மாட் சிமைதங்கிய ஆதிசைவராகிய குலசேகரபாண்டிப்பட்டர் மரபி ற்றோன்றிய பெரியோர்வடமொழியிலுள்ளஇச்சரித்திரத்தை எளி தில் யாவருமறியும்பொருட்டுத்தென்மொழியிற் சொல்வாயென அதைத் தடுத்துச்சொலலக்கூடாமல் சொல்ல ஆரம்பித்தேன் எ-று. (௧)

வேறு.

நற்கடவுள்வணக்கம்பாயிரஞ் சொலவையடக்க நயிமிசாரணிய வருணனைசூதர்காதை-பொற்கமலச்சடை மூர்த்தியாப்பனூரிடப புரமனவினோதன் சந்திரசேனனூலிற்-றர்க்கமுணர்பாட்களன்மெ ய்க்குபேரனுடுகதரிசனனரிச்சந்திரனீருச்சருக்கமோரெட்டாய்க் க-ற்கநிறைவிருத்தயாப்பைஞ்ஞூற்றீரழிகற்பிவிருரவைமுறுவலி ப்பக்கழறதலுற்றேனல்.

இ-பொ-ள.

நல்லகடவுள் வணக்கமும் பாயிரமும் அவையடக்கமும்நை மிசாரணிய வருணனையும சூதனாவினயகாதையும்அழகிய தாம ரைமலரைத்தரித்த சடாமகுடத்தையுடைய மூர்த்திமகிமையும் ஆ ப்பனூர்ச்சருக்கமும் இடபபுரச்சருக்கமும் அன்னவினோதச்சரு

ககமும் சந்திரசேனச்சருக்கமும் தர்க்கசாஸ்திரமுதலியசாஸ்திரங்களையறிந்த பாட்களச்சருக்க மும்குபேரச்சருக்கமும் சுதரிசனச்சருக்கமும் அரிச்சந்திரன் தீர்த்தயாத்திரைச் சருக்கமிறுதியாகக் கூறும் எட்டுச்சருக்கங்களாக யாவருமெளிதிற் கற்றுணரும்வண்ணம் ஐஞ்ஞூற்றுப்பதினன்குதிருவிருத்தங்களோடுங்கற்றோர்கள்சந்தோஷிக்கச்சொன்னேன். (உ

## வேறு.

கனியினைப்பிழிந்துசெந்தேன் கண்டெனவாப்பனூர்நம்
பனிமதிமிலைந்தநாதன்பன்னரும்புராணந்தன்னைப்
புனிதன்மெய்க்கந்தசாமிக்கவிஞன்பூவணத்தான்பார்மே
லினிதெனப்புலவர்கூறவின்றமிழ்ப்புணர்த்தினனே.

இ-பொ-ளா.

பலபழங்களை யொன்ருய்ச்சேர்த்துப்பிழிந்த அதின்ரசத்தைக் கண்டாற்போலத் திருவாப்பனூரில் வீற்றிருக்கும் நமதகுளிர்ந்த மூன்றும்பிறைச் சந்திரனைத்தரித்த திருவாப்புடையீசரது சொல்லுதற்கரிய இத்திருவாப்பனூர்ப்புராணத்தைத் திருப்பூவணமென்னும்ஸ்தலத்தில்வசிக்குமசத்தியசீலராகிய கந்தசாமிபபுலவர் இவ்வுலகிலுள்ள அறிஞர்கள்நன்றாயிருக்கிறதென்று சொல்லும்படி தமிழில் மொழிபெயர்த்தார் எ-று. (௩)

## பாயிரம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம். உஉ.

---

## அவையடக்கம்.

—:o:—

வடிதமிழ்க்கவிஞர்யார்க்கும்விண்ணப்பமணற்சோறெப்ப
தடியனேன்கவியின்குற்றம்பார்ப்பதுமழகோவேணி
யுடைதிமுடிக்குமாப்பனூருடையவரும்வையைக்
குடிஞையமணற்சோறந்நாட்கொண்டருள்வழக்கான்மனனே.

இ-பொ-ளா.

தெளிவாகியதமிழில்வல்லவர்களாகிய வித்துவான்கள்யாவர்க்குப்செய்துகொள்ளும் விண்ணப்பம்யாதெனின் அடியேனசெய்தஇச்செய்யுட்கள் மணற்சோற்றையொக்கும் ஆதலால் அதிற்குற்றமாய்தல் அழகல்ல வெனெனில் மணற்சோற்றிற் கல்லாராய்தல் போலாகும் அவ்வாறுபிழையாயுள்ளதைச் சொல்லலாமோ எனின் அக்காலத்தில் இக்காப்பியத்தலைவராகிய அத்திருவாப்புடை

யீசர்மணலையே அன்னமாகச்செய்து நிவேதிக்கஅதையும்வெறுப் பின்றியேற்றருளினர் ஆதலால் அதுவுங்கூடும் எ - று

ஆ திருவிருத்தம் உரு

---

## நைமிசாரணியவருணனை.

—:o:—

புன்னைபாடலந்தாடிமமரவம்பூங்குரவங்
கன்னிகாரமந்தாரமாப்பழுமரங்கடுக்கை
நன்னருமபலவருச்சுனம்வகுளம்வெண்ணாவல்
வன்னிகூவிளஞ்செறிநிழனைமிசவனமே

(இ-ள்.)

புன்னைமரங்களும் பாதிரிமரங்களும் தாதுமாதுளைமரங்களும் குங்குமமரங்களும் அழகியமருதோன்றிமரங்களும கோங்குமரங்களும் மந்தாரமரங்களும் மாமரங்களும் ஆலமரங்களும் கொன்றைமரங்களும் பலாமரங்களும் மருதமரங்களும் மகிழமரங்களும் வெண்ணாவல்மரங்களும் வன்னிமரங்களும் வில்வமரங்களும நெருங்கியிருப்பதாலுண்டாகிய நிழலையுடையதாயிருக்கிறது நைமிசாரணியம்.

வேதவித்தெனுமருந்தவவுழவர்கண்மிடைந்து
நீதகற்றுநன்காலமோர்ந்தறுபுலன்றிருத்தி
யாதிபத்திமைவித்தியானந்தநீர்பாய்ச்ச
மாதவப்பயிர்விளைநிலநைமிசவனமே

(இ-ள்.)

வேதங்களுக்குவித்தென்றுசொல்லும் அரியதவசிகளாகிய உழுநர்கள் நெருங்கிக குற்றமற்ற நல்லபக்குவகாலத்தையறிந்து பஞ்சப்புலன்களாகிய வயல்களிலுள்ள விருப்புவெறுப்பாகிய மேடு பள்ளங்களைச்சமனுசெய்து அதில் முதன்மையாகிய பத்தியென்னும் விதையை விதைத்து ஆனந்தமென்னும் ஜலத்தைப்பாய்ச்ச அதனுல் தவமென்னும் பெருமைபொருந்திய பயிர்கள்விளையும் விளைநிலமாகவுமிருக்கின்றது அந்நைமிசாரணியம் (எ-று.) (உ)

விதிமுனிசகணபுரிமகத்தவிநசைவிண்ணோர்க்
கதிகமுற்றமுதுணவயர்த்தனுதினமுறலா
லெதிரில்கற்பகநறுநிழலேக்கறவெய்த
வதியுதன்னிழலளிப்பதுநைமிசவனமே

(இ-பொ-ள்)

முனிவர்கள்வேதோக்தமாகச்செய்யும் யாகத்திற் கொடுக்கிற அவிர்ப்பாகம் அதிகருசியாயிருப்பதால் தாங்களெப்போது முன்

னும் தேவாமிர்தத்தில் வெறுப்புத்தோன்றவும் அத்தேவர்கள்இங்கேயுள்ள விருக்ஷங்களின் நிழலிலே தங்கியிருந்து அனுபவிக்கும் சுகம் அதிகமாயிருத்தலின் இங்கேயேதங்கியிருக்கவும் அதைப்பார்த்துக் கற்பகவிருக்ஷங்கள் ஏக்கமடையவும் செய்வது நைமிசாரணியம் (எ-று.) (௩)

உரியவேள்விவாயவிவிழைந்தயன்வரவுடன்செல்
பிரிவிலோதிமமெனும்பணைவதிந்துநாற்பெருநூ
றெரியவோதுவதனையுறிற்றனையறத்திருத்தும்
வரிகொள்பூம்பொழிற்கிளிகள்சூழ்நைமிசவனமே

(இ-பொ-ள.)

முனிவர்கள் செய்யும் யாகத்திற்கொடுக்கிற அவிர்ப்பாகத்தையிச்சித்துப்பிர்ம்மதேவர் வர அவர் ஏறிவந்தவாகனமாகிய அன்னமானது நீண்ட கிளைகளிலிருந்துகொண்டு பெருமைதங்கிய நான்குவேதங்களையும் ஓதும் அவ்வாறோதுங்கால் எங்கேனுந் தவறினால் அத்தவறையெடுத்துக்காட்டித்திருத்திக்கற்றுக்கொடுக்கும் தன்மைவாய்ந்த அநேகங்கிளிகளையுடையதாயிருக்கின்றது அந்நைமிசாரணியம் (எ-று) (௪)

கரியவண்டெனுங்கண்டிபூண்டலர்முகங்கண்ணீர்
வரநனைந்து மாகமண்டலங்கையுறவாய்ந்து
பரவுபூம்பொடியணிந்தொருதாணின்றுபன்னாண்
மரனுமெய்த்தவம்புரிவதுநைமிசவனமே

(இ-பொ-ள)

கரியநிறமுடைய வண்டுகளாகிய உருத்திராக்ஷமாலையைத்தரித்துப்புஷ்பங்களாகிய முகங்களினின்றும் தேனாகிய ஜலம் ஒழுக நனைந்து கிளைகளாகிய கைகள் ஆகாயம்வரையும் அளாவி யாவராலும் பரவத்தக்க அழகிய மகரந்தப்பொடியையணிந்து ஒற்றைக்காலிலேயேநின்றுகொண்டு அனேககாலம்மரமுங்கூடத்தவஞ்செய்கின்ற சிறப்பையுடையது அந்நைமிசாரணியம்(எ-று) (௫)

கடிகையைந்தெனத்துயிலொரீஇக்கடிப்புனலாடிப்
பொடியணிந்தெழுத்தஞ்செணிப்புராணிக பாற்போய்
நெடியவேணியன் சிவகதைகேட்டுநெக்குருகி
வடிகணீர்சொரிந்திருப்பதுநைமிசவனமே

(இ-பொ-ள)

விடியஐந்துநாழிகையென்னுமளவில் நித்திரைவிட்டெழுந்து ஸ்நானஞ்செய்து விபூதியையணிந்து பஞ்சாக்ஷரஜெபம் செய்து சிவபெருமானது பெருமைகளையறிந்த மெய்யன்பர்களாகிய பௌராணிகர்களிடம்சென்று நீண்ட ஜடாபாரத்தையுடைய சிவபெருமானது திவ்விய சரித்திரங்களைக்கேட்டு நெஞ்சநெக்குருகி

க்கண்களினின்று மானந்தபாஷ்பஞ் சொரிகின்றவர்களாகிய சரி யாவான்களிருப்பது அந்நைமிசாரணியம் (எ-று) (சு)

வேதவாகமவிதிவழிச்சுத்தியைவிதஞ்செய்
தாதரத்தினுற்சிவனையர்சித்ததன்பயனைப்
பூதநாயகன்கரமிசைப்புனலொடுவழங்கு
மாதபோதனர் சரிப்பதுநைமிசவனமே

(இ-பொ-ள)

வேதாகமங்களிற் கூறியமுறையே * ஐந்துவிதசுத்தியையுஞ் செய்து மெய்யன்போடும்சிவபிரானைப்பூசித்து அதனாலுண்டாகிய பிரயோசனத்தை யெப்பொருட்கு மிறைவராகிய சிவபிரானது வரதாஸ்தத்திலே ஜலத்தை வார்த்துத்தததஞ்செய்து நிஷ்காமிய மாய்ப்பூசிக்கும் கிரியாவான்களு மிருப்பது அந்நைமிசாரணியம் (எ-று) (எ)

அடைவிலாண்டொன்றுபத்துநூறுயிரமயுதங்
கடைசெலச்செலவோருயிர்ப்புயிர்த்துவன்கழுமுட்
படையினர்சிவயோகமெய்யசைவறப்பயினு
நடையினரிடவகையதுநைமிசவனமே

(இ-பொ-ள)

ஒருவருஷம் பத்துவருஷம் நூறுவருஷம் ஆயிரம்வருஷ பதினாயிரவருஷம் எனனும் இவ்வருஷங்களின் முடிவில் முறை யே ஒவ்வொருதரம் அதுவரையிற் பந்தனஞ்செய்திருந்த சுவாச தை உச்சுவாசித்து வலியசூலாயுதத்தையுடைய சிவபெருமா து யோகத்தை கிஞ்சித்தும் சலனமின்றிச்செய்யும் யோகவான் ளும் வசிக்கும் சிறப்புடையது அந்நைமிசாரணியம் (எ-று) (

வானமேன்மண்ணினவனவளதுவெனும்வழக்கற்
றூனமில்பலவுயிர்க்குயிராய்நிற்குமொளியை
யேனைவேதத்துமுடிவையோர்ந்திரண்டறவிருக்கு
ஞானசாதனர்பயிலிடநைமிசவனமே

(இ-பொ-ள)

தேவலோகம்பூலோகமென்னும் இரண்டிலும் அவன் அ அதுஎன்றுண்டாகும்முன்னிலையையொழித்துப்பலவுயிர்க்கு ராய் விளங்கி ஊடடிஉறக்கி உணர்த்துவிகஞ்சோதிசொருபம யும் வேதமுடிவாகியும் உள்ளபராபரவஸ்துவை சுவானுபூதி லறிந்து துவிதபாவனையற்று ஏகிபாவமாய்க்கலந்தானந்தானு

* ஐந்துசுத்திகளாவன—திரவியசுத்தி, பூதசுத்தி, ஆத்மசு இலிங்கசுத்தி மந்தரசுத்தி, யெனபதாம்.

த்தையனுபவிக்கும் மெஞ்ஞானிகளும் வாசஞ்செய்கிற இடமாயி ருக்கிறது அந்நைமிசாரணியம் (எ-று) (கூ)

வேறு.

பாதவந்தனைக்கற்பகம்பார்த்தபின்
பாதவந்தனைக்கற்பகம்பற்றுறு
மாதவந்தினஞ்செய்யும்வனநேர்விடை
மாதவந்தினஞ்செய்யும்வில்வேள்வரில்

(இ-பொ ள)

இத்துணைப்பெருஞ்சிறப்பினையுடைய நைமிசாரணியத்திலு ள்ள தோப்பைதேவலோகத்திலுள்ள கற்பகவிருக்ஷங்கள் பார்க குமானால் அதனடியில் நமஸ்கரிக்க உள்ளத்திலன்புண்டாகும் வைகாசிமாசத்தி லுண்டாகுந் தென்றற்காற்றாகிய தேரிலேறிக் கொண்டு கரும்புவில்லினிடமாகப் பஞ்சபாணங்களைத்தொடுத்து ப்பிரயோகஞ்செய்யும் மன்மதன் இந்நைமிசாரணியத்துக்கு வரு வானேல் தினந்தோறும்தவமே செய்வான (எ-று) (ம)

நைமிசாரணியவருணனை முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ருரு

---

சூதரைவிஞயகாதை.

---

அவ்வருந்தவவனத்துறையுமந்தணர்
பைவரும்பணிமுடிபபானைநோக்கித்தங்
கைவருஞ்சுருதியின் கருமங்காமுறு
மெய்வருஞ்சத்திரவேள்விசெய்கின்றார்

(இ-பொ-ள

அந்தஅரியசிறப்பினையுடைய புண்ணியவனத்தில் வசிக்கும் அழகியதண்ணளியையுடைய மஹரிஷிகள் படத்தையுடைய சாப ங்களைத்தரித்தசடாமுடிபொருந்திய சிவபெருமானைக்குறித்துத் தாங்கள் கைதேர்நத வேதத்திற்கூறிய காரியத்தை இச்சிதது உ ண்மையாகிய சத்ரயாகத்தைச்செய்கின்றார்கள் (எ-று) (க

அவ்விடைக்கனறளிர்த்தனையவேணியன்
வெவ்விடைக்கடவுணீறணிந்தமெய்யினன்
வெளவிடைக்கசைததவற்கலையன மாதவங்
குவ்விடத்தணியுருக்கொண்டகோலததான்

(இ-பொ-ள்)

அவ்விடத்தில் அக்கினிக்கொழுந்துவிட்டாற்போன் றஜடாம குடத்தையும் விருஷபாரூடராகியகடவுளது திருவெண்ணீற்றையணிந்த திருமேனியையும் மரவுரியைத்தரித்த அரையினையும் இவ்வுலகத்தில் பெரியதவமேதிரண்டு ஓருவடிவெடுத்தாற் போன்ற திருக்கோலத்தையுமுடையவரும் (எ-று) (உ)

திரைசெய்நீர்க்கமண்டலன்சிவபுராணமென்
றுரைசெயுமமுதமூற்றூறுநாவினன்
கரதலஞ்செபவடங்கிடந்தகாட்சியன்
புரையறுசிவத்தியானஞ்செய்புந்தியான்

(இ-பொ-ள்)

அலைகள்பொருந்திய ஜலம் நிறைந்த கமண்டலத்தையுடையவரும் சிவபுராணமென்னும் தேவாமிர்தமாகியவூற்றுச்சுரக்கின்ற நாவையுடையவரும் திருக்கரத்திற் செபமாலைபொருந்தியவரும் சதாசிவத்தைத் தியானஞ்செய்கின்ற குற்றமற்றமனதையுடையவரும் (எ-று) (ங)

நண்ணியமறையெலா நான்கெனப்பகுத்
தெண்ணியவியாதனமாணாக்கரேறனன்
புண்ணியந்தவழ்முந்நூலபுராணுமாரபினன்
மண்ணுறுமயனிகர் சூதமாதவன்

(இ-பொ-ள்)

கலைதடுமாறியிருந்த வேதங்களையெல்லாம் இருக்கு யஜுர் சாமம் அதர்வணம் என நான்குவகையாக்கியெண்ணிய வியாஸமஹாரிஷியினது மாணவர்களுள் ஏறுபோன்றவரும் புண்ணியவடிவமான யக்ஞோபவீதம் புரண்டுகொண்டிருக்கும் மார்பினையுடையவரும் பூலோகத்திற்குப்பிரமதேவர் என்றுசொல்லும்பெருமையையுடையவருமாகிய சூதமஹரிஷியானவர் (எ-று) (ச)

வர்தனன்வருதல்கண்டெழுந்துமாதவர்
சிந்தைமுந்தெதிர்கொளச்சென்றுதாழ்ந்துநின்
றந்தமின்முகமனோடாசனங்கொடுத்
தெந்தைநீயிருத்தியென்றிருத்தினாரரோ

(இ-பொ-ள்)

எழுந்தருளினர். அவ்வாறெழுந்தருளுவதை மஹரிஷிகள் பார்த்து இருக்கைவிட்டெழுந்து மனம் முன்பற்றிச்செல்ல பின்னேசென்றுநமஸ்காரம்செய்து எழுந்து நின்று அநேக உபசார

வார்த்தைகளைச்சொல்லியோர் ஆசனமிட்டு சுவாமி இதில் எழுந்த
ருளுமென்று உட்காரச்செய்தார்கள் (எ-று) (௫)

அருக்கியமுதலியதிருத்தியன்பகம்
பெருக்கியபூசனைமுடித்தபின்னவர்
திருக்கிளர்பதமிசைத்தானுஞ்சென்னிதாழ்த்
துருக்கியமொழிசிலவுவந்துகூறுவான்

(இ-பொ-ள)

பின் அர்க்கிய பாத்தியாசமனாதிகள் செய்து உள்ளத்திலுண்
டான பேரன்பாற் பூஜித்துபின் அம்மஹரிஷிகள் பாதத்தில் தா
னும வணங்கி உருக்கமான சிலவசனங்களைசொல்லத்தொடங்கி
னர் சூதபுராணிகர் (௬)

சந்திவந்தனைசெபந்தவந்தியானநன்
மந்திரமறைமுதல்வலியவேயென
நந்தியதிலையெனநவின்றுவாக்கொடு
புந்தியுமொருவழிபொருந்தக்கூறுவார்

(இ-பொ-ள)

சந்தியாவந்தனம் ஜெபம் தவம் தியானம் மந்திரம் வேதாத்
தியயனம் முதலியயாவும் சிறப்பாய்நடந்துவருகிறதா என்று வின
வ நைமிசாரண்யவாசிகள் சுவாமீ மேற்கூறியயாவும் தேவரீரது
அனுக்கிரகத்தால் செவ்விதாய் நடந்துவந்தது என்றுசொல்லி
மனமும் வாக்கும் ஒன்றியோர்வார்த்தை சொல்லுவார்கள்
எ-று (௭)

வேறு.

மருங்கொளிபரப்புஞ்சைவமணிக்கதிர்விளக்கேவேத
மொருங்குணருணர்வே கேளவியுறும்பதினெண்புராணப்
பெருங்கடற்கரையே ஞானப்பிரளயவடிவேயெங்கட்
கருங்கதித்துணையே சூதமுனியருந்தவனே கேட்டி.

இ-பொ-ள.

சைவசமயமாகிய ஒளியைப் பல இடங்களிலும் பரவச்செய்
கின்ற கிரணத்தையுடையமாணிக்கத்தீபமேவேதங்களையெல்லாம்
நன்குணர்ந்த அறிவுசொருபமானவரே பதினெண்புராணங்களாகி
ய பெரியசமுத்திரத்திற்குக் கரையாயுள்ளவரே சிவஞானவெள்ள
மே திரண்டு ஓர்வடிவாகியவரே தாங்களுடையும் மோக்ஷகதிக்
குத்துணையாயுள்ளவரே அரியதவசிரேஷ்டராகிய சூதமகாரிஷியே
யாங்கள்கூறும் விண்ணப்பத்தைத் திருவுளத்திற் கொண்டருள
வேண்டும எ-று (௮)

பண்டுநீயெமக்குமுக்கட்பானுறைதலங்கண்மேன்மை
விண்டுமற்றவற்றுள்யாதோவிசிட்டமென்றகத்துண்மோகங்
கொண்டுழல்கின்றேமோகக்குவையிருள்புலரச்சோதி
யுண்டுமிழ்கதிர்போலின்னுமொருதலனுரைக்கவேண்டும்

(இ-பொ-ரை

முன்னமே தேவரீர் அடியேங்களுக்குத் திரிநேத்திரதாரியாகி ய பரமசிவன் எழுந்தருளிவிளங்கும் சிவஸ்தலங்களின் மகிமாதிசயங்களைச் சொல்லியருளியும் அவைகளுள் உத்கிருஷ்டமாயிருப்பது எதுவோவென்று சந்தேகித்துழல்கின்றோம் ஆதலால் அவ்வஞ்ஞானாந்தகாரமான துவிடிய இன்னுமொருதலமகிமையை அனுக்ரகம் செய்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்து கொண்டார்கள் எ-று. (க)

வேறு.

என்னலுஞ்சூதமுனிவரனிதயத்திருந்தமிழாப்பனூர்விமலன்
றன்னையுங்குரவங்கமழ்குழலுமையாந் தாயையுந்தலனையுநினையா
தன்னறுங்கமலநயனநீரருவி தனைப்பமெய்ம்மயிர்ப்புளகுதிப்ப
மன்னுதன்பதுமாசனத்தினினெடும் போதிருந்துளநெகிழ்ந்து
வாய்மலர்ந்தான்

இ-பொ-ள

இவ்வாறு பிரார்த்தித்த முனிவர்களைப்பார்த்துச் சூதமகாரிஷியானவர் தம்மனத்தில் பெருமைபொருந்திய தமிழ்நாட்டிலுள்ள மலரஹிதராகிய திருவாப்புடையீசனையும் குரவங்கமழ்குழலம்மையையும் இவர்களெழுந்தருளியிருக்குந் திருவாப்பனூரையும நினைத்து இருகண்களிலும் ஆனந்தபாஷ்ப்பம பொழியவும் உரோமாஞ்சங் கொள்ளவும பத்மாசனத்தில் நெடுநேரமிருந்து மனமுருகிச்சொல்ல ஆரம்பித்தார் எ-று (கக)

அந்தணீர்நீவிர்வினையதிவ்வுலகவனுக்கிரகத்தினேதுவுமாம்
பந்தவல்வினைதீர்த்தருளவழிகாட்டும்பரிசுமாமுரைப்பல்யானென்
னு,தந்தவில்குருவாம் வியாதனைப்புழைக்கை நாதனைக்குகனையாப்புடைய, மைந்தனைக்குரவங்கமழ்குழலுமையை வணங்கினன்வணங்கியீதுரைப்பான

இ-பொ-ளா

முனிவர்களே நீங்கள்கேட்பது இவ்வுலகில் அனுக்ரகத்திற்கும் இருவினையாலுண்டாகும் பாசபந்தத்தைநீக்கித்திருவருளின்மார்க்கத்தைக்காட்டுவதற்கும் எதுவாயிருக்கின்றது ஆதலால்சொல்லுகிறேனென்று முன்னர்தமது குருவாகியவேத வியாசனை வண

ங்கிப்பின் விநாயகக்கடவுள் முருகக்கடவுள் திருவாப்புடையீசர் குரவங்கமழ்நறுங்குழலம்மை யிவர்களையும் வணங்கிச்சொல்லத்தொடங்கினுர் எ-று (௧௧)

சாற்றியபுராணமோரறுமூன் றுட்சைவத்திற்சேத்திரகாண்டத் தேற்றியவேகாதசவுருத்திரசங்கிதைபினிலீறிலாவருளாற் றோற்றியவிடபபுரியின்மான்மியத்தைச்செ சாறசுவைபொருட்சுவை தோன்ற, வாற்றியதவத்தீர்சொல்லுகே னுலகமறம்பொருளின்பம்வீட்டைய

(இ-பொ-ரை

தவசிரேஷ்டர்களேபிரமபுராணம்பதுமபுராணம்முதலாகக்கூறியபதினெண்புராணங்களுள்சைவபுராணத்திலேஏகாதசவுருத்திரசம்ஹிதையிலேஆதிமத்தியாந்தரகிதராயசிவபெருமானதிருவருளாலுண்டாகிய இந்நந்திநகரத்தின் மஹாத்துவத்தைச் சொன்னயம்பொருணயந்தோன்றவும்தர்மார்த்தகாமமோக்ஷமென்னும் புருஷார்த்தங்களையடையவும் சொல்லுகிறேன் கேளுங்களென்று நைமிசாரண்யவாசிகளைப் பார்த்துச் சூதபுராணிகர் சொல்லத்தொடங்கினுர் எ-று

## சூதரைவினயகாதை முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் ௬௫

## மூர்த்திமகிமை.

---

இந்தமாக்கதைமுன்னேநாட்கைலையினிடத்திற்
கந்தவேணந்திநாதனுக்குரைப்பவக்கதைகேட்
டெந்தையென்குருவியாதன்மற்றெனக்குரைசெய்தா
னந்தவாறுரைசெய்துநீரசைவறக்கேண்மின்

(இ-பொ-ரை

ஆதியில் பெருமைபொருந்திய இச்சரித்திரக்கைத் திருக்கைலாசமலையிலே முருகக்கடவுள் திருநந்திதேவருக்கனுக்கிரகிக்க அவர்அதைவேதவியாச மஹாரிஷிக்குக்கூற என்தந்தையாகியும்பரமாசாரியராயுமுள்ள அவ்வியாசபகவான் அதைஅடியேனுக்குபதேசித்தார் அவ்வாறே உங்களுக்கு நாம்சொல்லுகிறோம் நீங்களும்சித்தசலனமின்றிக் கேளுங்களென்று சூதபுராணிகர் சொல்லுகிறுர் எ-று (௧)

தேனிலஞ்சிலைகுனிப்பவன்செருநிலைக்கூர்மந்
தானிலம்புகுமிடமெலாந்தமிழ்மணந்தழைக்க
வானிலங்குதண்மதிவழிமன்னவரிருந்து
நானிலம்புரந்தாள்வதுமதுரையந்நகருள்

(இ-பொ-ள)

மாதரிய மிகுர்தகருப்புவில்லையுடைய மன்மதன் யுத்தநிலைக்கு ஊர்ந்துசெல்லுந் தேராகிய தென்றற்காற்று செல்லுமிடங்களிலெல்லாம்தமிழ்மணம்வீசஆகாயத்திற்பிரகாசிக்குங் குளிர்ச்சியையுடைய சந்திரவம்சஸ்தர்களாகிய பாண்டியமஹாராஜாக்கள் வீற்றிருந்து இப்பெரியஉலகத்தை யாள்வதற்குச்சிறந்த இராஜதானியாயிருப்பது மதுராபுரியாம் அந்நகரத்தில் எ-று (உ)

மூத்திருக்கருளாலவாய்ச்சுந்தரமூர்த்திக்
குத்தரத்தொருகூவிளியெல்லையின்விடையி
னத்திரிக்குமோரோசனைநிருதிதிக்கக்ன்று
தத்துநீர்வையைவடகரையிருககுமோர்தானம்.

(இ-பொ-ள)

இருவினையொப்புமலபரிபாகம் வந்த ஜீவன்முக்தர்களுக்குத் திருவருள்செய்தருளும் சோமசுந்தரப்பெருமான் எழுந்தருளி விளங்கும் திருவாலவாய்க்குவடதிசையில் ஒரு கூப்பிடுதூரத்திலும் இடபமலைக்குத்தென்மேற்றிசையில் பத்துநாழிகைவழிதூரத்திலும்வையையாற்றின்உத்தரதீரத்திலுமாய் விளங்கும் சிவஸ்தலமொன்றிருக்கின்றது (எ-று) (ங)

கொன்றைபாதிரிகூவிளம்பிப்பிலங்குரவந்
துன்றுமேழிலைம்பாலை சந்தனமகில்சூத
நின்றபூகதமரம்பையாசினியொடுநெருங்கு
மன்றனமல்லிகைமுல்லைமாதவிகடிமயிலை

(இ-பொ-ள.)

கொன்றைமரங்களும் பாதிரிமரங்களும் வில்வமரங்களும் அரசமரங்களும் மருதோன்றிமரங்களும் ஏழிலைம்பாலையென்னுமரங்களும் சந்தனமரங்களும் அகில்மரங்களும் மாமரங்களும் கமுகமரங்களும் வாழைமரககளும் ஈரப்பலாமரங்களும் இதுகளுடனே நெருங்கியவாசனைபொருந்திய மல்லிகைகளும் முல்லைகளும் குருக்கத்திகளும் இருவாக்ஷிகளும் (எ-று) (ச)

மற்றமென்னிணிப்பகர்வதுமரமெலாமவண
துற்றமென்மலர்சூழ்கொடித்தொகையெலாமவண
பற்றுதாண்மலரளியுணுவமரர்பைந்தருவுங்
குற்றமில்வல்லிசாதமென்கொடியுமேயிலாத

இ-பொ-ளா.

இங்கேசொல்லியவல்லாத பலவேறுவகைவிருக்ஷங்களும் அங்கிருக்கின்றன நெருக்கமானமெல்லியபுஷ்பங்கள் நிறைந்த பலவேறுவகைக்கொடிகளெல்லா மங்கிருக்கின்றன ஆனால் புதிதான புஷ்பங்களில் வண்டுகள்போய்த்தேனையுண்ணக்கூடாததாகியதேவலோகத்திலுள்ள பழைய கற்பகமுதலான விருக்ஷங்களும் குற்றமில்லாத மிருதுவானவல்லிசாதம் என்னும் கற்பகதருவிற்படருங்கொடியுந்தான் இல்லையாம் (எ-று) (ரு)

ஓலநான்மறைப்பொருள்வெளிப்பட்டெவ்வுலகின்
மேலதாகுமத்தலத்தினில்விரிஞ்சன்மாலுணரா
மூலகாரணவிலிங்கமொன்றருளினான்முளைத்துச்
சாலநீளொளியுருவமாயங்ஙனந்தயங்கும்

(இ-பொ-ளா)

நான்குவேதங்களின் உண்மைப்பொருள் வெளிப்பட்டுத்தோன்றினாற்போல இவ்வுலகில் மேன்மையையுடையதாய் விளங்கும் அந்நந்திநகரத்தில் பிரமதேவரும் மஹாவிஷ்ணுவும் அறியாத எல்லாவற்றிற்கும் உற்பத்திகாரணமாயும் ஏதுவாயுமுள்ள ஓர்சிவலிங்கமூர்த்தம் தன்னருளினால்தோன்றியிருந்த ஜோதிஸ்வரூபமாய்ப்பிரகாசித்துக் கொண்டிருக்கும் (எ-று) (சா)

அத்தனிச்சிவக்கொழுந்தினுக்காப்புடைநாத
னெய்த்தவர்க்கருந்தியெனுமிடபபுரேசன்
மெய்த்தவர்க்கருள்வடிவமாமன்னவிநோதன்
வித்தகத்திருநாமமீதவனிமேலவிளங்கும்

(இ-பொ-ளா.)

அந்தஒப்பற்றசிவலிங்கப்பெருமானுக்கு ஆப்புடையீசனென்றும் தரித்திரதிசையால் மெலிந்தவர்களுக்குக்கிடைத்தற்கரிய நிக்ஷேபமென்றுசொலலும் இடபபுரேசனென்றும் உண்மையாகிய தவசிரேஷ்டர்களுக்குத திருவருள்வடிவாய் விளங்கும் அன்னவிநோதனென்றும் இவ்வுலகில்அதிசயமான இத்திருநாமங்கள் விளங்கிக்கொண்டிருக்கும். (எ-று) (எ)

வையநீடணியாப்பனூரினுறவனை வணங்கப்
பொய்யிலன்புகொண்டெழுந்திருந்திறம்போந்தா
லையமில்லையாரடிகளொருபரிமகத்தரும்பே
றெய்தும்போய்த்தெரிசிக்கிலெண்சித்தியுமெய்தும்

(இ-பொ-ளா)

வையைநதிசூழ்ந்த அலங்காரமான திருவாப்பனூரில் விளங்கும் சிவலிங்கப்பெருமானைத்தெரிசிக்க மெய்யன்போடும் எழுந்தி

ருந்து வீட்டிற்குவெளியேவந்தால் நடந்துவருகிறஒவ்வொரடிக்கு
ம் ஒவ்வொருஅஸ்வமேதயாகப்பலன்கிடைக்கும் சந்நிதானத்திற்
சென்றுதரிசித்தால் அஷ்டமாசித்திகளுங்கிடைக்கும் இதறகுயா
தொருசந்தேகமுமில்லை

அஷ்டமாசித்திகளாவன, அணிமா, மகிமா, இலகிமா, கரிமா
பிராப்தி, பிராகாம்மியம், ஈசத்துவம், வசித்துவம், என்பதாம்,

அடைந்ததிருவாப்பனூரடிகளைக்கண்டிடப்பெற்றோர்க்கனேகநா
ட்பின், றொடர்ந்தபழவினைபுதியவினை யிரண்டுங்கனல்குளிரச்சுடு
த்தீவெய்யோன், மிடைந்தகடுங்கதிர்பரப்பக்கடல்சுவறிநிலம்வெடி
க்கும்வேனிற்காலத், துடைந்தசிறுகுளநீரொத்துலர்ந்துபசையற
வறக்குமுண்மைமாதோ.

(இ-பொ-ள)

திருவாப்புடையீசரெழுந்தருளி விளங்கும்சந்நதியைச்சேர்ந்
துதெரிசித்தவர்களுக்கு நெடுங்காலமாய்ச்செய்து விடாமற்றொட
ர்ந்துவந்தசஞ்சிதவினைகளும் இந்தஜென்மத்திற்சம்பாதித்தபுதிய
வினைகளும்ஆகியஇவ்விரண்டும அக்கினியும்குளிர்கிறதெனறுசொ
ல்லும்படிசூரியன்கொடியகிரணங்களைவீச அதனால் சமுத்திரமும்
வறண்டு பூமியும்பிளக்கும்படியானநல்ல கோடைக்காலத்தில் உ
டைந்தஒருசிறியகுளத்தின் ஜலமானது கிஞ்சித்தும்இல்லாமல் பூ
மியால்கிரகிக்கப்பட்டு எப்படிக்காய்ந்துபோகுமோ அதுபோலப
பற்றில்லாமல் நீங்கும் இதுசத்தியம் (எ-று) மாதோ அசை (கூ)

பணியாப்பனூரரவமணிந்தபிரான் கொன்றைவனப் பரமன்வை
யை, யணியாப்பனூருடையா னணியநறும்பட்டுவிலை யளந்துகூ
றிற்,றணியாப்பனூற்கலிங்கமளித்தவர்புத்திரபவுத்திரசம்பத்தோ
டுங், குணியாப்பனூறுபொறிப்படஞ்சுமக்கும்புவியில் வளங்குலவ
வாழ்வார்

(இ-பொ-ள)

சர்ப்பங்களை ஆபரணமாகத்தரித்தவரும் கொன்றைவனத்தி
ல் எழுந்தருளிவிளங்குமமேலானவரும் வையைநதிசூழ்ந்ததிரு
வாப்பனூரையிடமாக வுடையவருமாகிய அத்திருவாப்புடையீச
ருக்குத்தரிக்கும்படி நல்லபட்டுவஸ்திரத்தின் கிரயத்தையளந்து
கூறினல் அவர்களடையும பிரயோசனம்சொல்லியடங்குவதனறு
ஏனெனில் பஞ்சாலாகிய நூலால்நெய்தவஸ்திரத்தைத் தரிக்கக்
கொடுத்தவர்கள் புத்ரபௌத்ரசம்பத்துடன் பலநூறுபுள்ளிகள்
பொருந்தியஆயிரம்பணுமகுடங்களையுடைய ஆதிசேடனாற் சுமக்க
ப்பெரும்இவ்வுலகில் பலவளமுநிறைந்துசுகமாய்வாழந்திருப்பா (ய)
ர்கள் ஆதலால் (எ-று)

உயரிடபபுரியீசற்காகநறும்புதலபதிவைத்தொருபூவேனும
பயனுறுவெண்மதிமுடியிரறாப்பிதேதாருடன்புழுதிப் பாரிசாத
நயனுறுவாசந்திசழககயில யத்திருப்பாதநதிநகரமாதற
கியலுநறுந்தூபக்கால் கொடுத்தவருமபபயன பெற்றிருப்பர் மா
தோ

(இ-பொ-ள)

மேன்மைபொருந்திய இபபுரேசருக்கு நல்லதிருநந்தனவனம் வைத்து அதினின்று ஒரு பூவாயினும்எடுத்து வெண்ணிறமுள்ள அமிர்தநிறைந்தசந்திரனைத்தரித்த ஜடாமகுடத்தையுடையதிருவாப்புடையீசரதுதிருமுடியிலணியச்செய்தவர்கள்தஙகள்சரீரமுழுவதும் பாரிஜாதபுஷ்பவாசங்கமழக் கைலாசத்திருப்பர்அன்றியும அத்திருவாப்புடையீசருக்குத்தூபக்கால்கொடுத்தவர்களும் மேற்சொல்லியபயனைப்பெற்றுவாழ்நதிருப்பாா (எ-று) மாதோ அசை(கக)

பெருவிலைக்கப்புரங்கலந்த நறுந்தேய்வைநறிகுளிரப் பெய்விப்போர்மெய்ச், சுருதிசொலாயிரவாசபேயபலனடைவரொரு துளிநெய்த்தீபம், பருவனாவிற்குழகனுப்புடையநாயகன்முன்னர்ப்பார்ப்போர்தங்க, ளருவினைப்பற்றொழியவாயிரஙகபிலைத்தானப்பேறடைவர்மன்னே

(இ-பொ-ள)

அதிகவிலையுள்ள பச்சைக்கற்பூர முதலியவைகலந்தநறியமணங்கமழுஞ் சந்தனக்குழம்பினுல் அம்மூலஸ்தானமஹாலிங்கதுளி ரஅபிஷேகஞ்செய்விப்பவர்கள் உண்மையாகச்சாஸ்திரங்களிற் கூறிய ஆயிரம் வாசபே யயாகங்களைச்செய்ததனுலடையும் பிரயோஜனத்தையடைவார்கள் அன்றியும் மஹாமேருமலையை வில்லாகவுடையபேரழகுபொருந்திய அததிருவாப்புடையீசர் சந்நதியில்ஒருதுளிநெய்யையாவது வார்த்து தீபம்வைத்துத் தெரிசிப்பவர்கள் தங்கள்வினைப்போகமெல்லாம் நீங்க ஆயிரம்பசுக்களைத்தானஞ்செய்ததனுலாகிய பலனைஅடைவார்கள் (எ-று) மன்னே அசை வாசபேயமாவது அந்தணர்கள் கஉ தினத்தில் உ௯ மேடங்களால்சிவபெருமானுக்குப்பிரீதியுண்டாகச்செய்யும்ஓர்யாகம்(கஉ)

பரன்முடிமேலிள்நீரொன் ருட்டினூறயமேத பலன்கைக்கொள்வா, ரரன்முடிப்பாறபிராட்டினவனுலகினுடன்விளையாட்டயர்வார்ஞானத், திருமருவுமன்னவினோதனுக்கனனவபிடேகஞ்செய்விப்போனிக், கருமநிலத்தெவனவன்கொள்காணியொருபிரமகற்பங்கயிலையாமால்

(இ-பொ-ள)

மேன்மைபொருந்தியதிவாப்புடையீசா திருமுடியில் ஒரு இளநீரால் அபிஷேகம்செய்பவர்கள் நூறுஅசுவமேதயாகப்பலனையடைவர் அன்றிப்பால் தயிர்இவற்றால அபிஷேகிப்போர் சிவபிரான்வீற்றிருக்குஞ் சிவபோகத்தில் அவருடன்திருவிளையாடல் செய்துகொண்டிருப்பர் அழகியஅவ்வன்னவினோதமூர்த்திக்கு அன்னாபிஷேகஞ்செய்பவர் ஒரு பிரமகற்பகாலம் வரையில் கைலாயத்தை காணியாட்சியாகக் கொண்டு வாழ்வார் (எ-று) ஆல் அசை (கங

கருப்பஞ்சாறன் னவினோதனுக்காட்டினவனுலாங்கதியிற் சேர்வன் றிருப்பஞ்சாமுதமாட்டிவிளித்திரபோனகமுநிவேதித்தோர்கோயில், விருப்பஞ்சார்பணிபுதுக்கினோர் பலத்வைதச்சன னுமுனிவிளைகளும்வேள்வி, நெருப்பஞ்சாறணிகடவுளறிந்துரைப்பனவலதெவரே நிகழ்த்தற்பாலார்

(இ-பொ-ளை)

அன்னவினோதநாதனை கருப்பஞ்சாற்று லபிஷேகித்தவர்கள் சாயுச்சியபதவியையடைவர் பஞ்சாமிர்தத்தா லபிஷேகித்துச்சித்திரான்னஞ்செய்து நிவேதித்தவரும் அன்புடன் ஆலயத்தில ஜீர்ணோர்த்தாரணஞ்செய்தல முதலிய திருப்பணிசெய்தவரு மாகிய இவ்விருவர்பலனை சன்னுமுனிவர்செய்த யாகாக்னியஞ்சியபெருமைபொருந்திய கங்கையைத்தரித்த சிவபெருமானே சொல்லவேண்டுமேயன்றி வேறியார்சொல்லவல்லார் இல்லை [எ-று [கச]

இப்பொழுதிங்ஙனமுரைத்த பணியியற்றற்கேதுவிலாரெனினுஞ் சார்ந்து, முப்பொழுதினொருபொழுதாயினுமாப்பனூருடையமுதலைப்பாகச், செப்பொழுதுமுலையுமையைசசூழ்ந்துபணிந்துள்ளுருகித்தெரிசிப்பாரே, லப்பொழுதின்வினைநீசகையழியாதபதமளிப்பனருளின்மூர்த்தி

இ-பொ-ளை

இப்போதுரைத்தவண்ணம் பணிசெய்யச்சக்தியில்லாவர்கள் திருவாப்புடையாரும் அவரதுவாமபாகத்திலவீற்றிருக்கும் சிமிழ்போலும் ஸ்தனங்களையுடைய குரவங்கமழ்குழலம்மையும எழுந்தருளிவிளங்கும் சந்நிதானத்தை மூன்றுகாலஙகளில் ஒருகாலத்தாயினும் அடைந்துபிரதக்ஷிணஞ்செய்து வணங்கிமனக்கனாவுடன்தெரிசனஞ்செய்வார்களானல் கிருபாநிதியாகிய அக்கடவுள் அந்தட்சணத்திலேயே எல்லா வினைகளையு நீக்கி ஒருக்காலுங கொடாத மோட்சத்தைக்கொடுப்பார் (எ-று) (கரு)

## வேறு

பரக்கவென்பலபகர்வதுபத்தியோடமைந்து
புரக்குமாப்புடைநாதனுக்கிந்தகைப்பொருடா
னற்பமென்னினுமனந்தமாக்கொண்டரும்பவங்கண்
முருக்கியிம்மையுமபுரந்துபின்றருமபரமுத்தி

இ-பொ-ளை

பலவாக இன்னும் விரித்துச்சொல்ல வேண்டியது என்ன மனத்திலன்பு புரிந்து எவ்வுயிரையும் காக்கும்அத்திருவாப்புடையீசருக்குக்கொடுத்த பொருள் அற்பமாயிருந்தாலும அதைஅளவி

ல்லாததாக ஏற்றுக்கொண்டு அரியபாவங்களைப்போக்கி இந்தஜெ
ன்மத்திலும் காப்பாற்றி மறுமையிலும் மேலான மோக்ஷத்தை
க்கொடுப்பார் (எ-று) (கசு)

## வேறு

வரைகளிற்சுடர்சூழ்வரைசுரபிகளின் வானிலானுடுக்களின்மதி
யங், கரையிலவொளியிற்பருதிதாதாவிற்காம்புயலப்பறவையிற்க
லுழன், றரைவிலங்கினத்தின் மடங்கலூர்தியிற்குஞ்சரமிருகாலி
னுளுயர்ந்தோர், புரையினற்காலிற்பசுவியக்கரிலூர்புட்பகன்புரு
டரிற்றிருமால்,

இ-பொ-ளா.

மலைகளுக்குள் சந்த்ரசூரியர்கள் வலம்வரும் மஹாமேரு ம
லையைப்போலவும் பசுக்களில் தேவலோகத்திலுள்ள காமதேனு
வைப்போலவும் நக்ஷத்திரங்களுள் சந்திரனைப்போலவும் பிரகாச
ங்களுள் சூரியனைப்போலவும் கொடையாளிகளுள் மேகத்தைப்
போலவும் பக்ஷிகளில்கருடனைப்போலவும் மிருகங்களுள் சிம்ம
த்தைப்போலவும் வாகனங்களுள்யானையைப் போலவும் மனிதர்
களுள் அறிஞர்களைப்போலவும் நான்குகாலுள்ளவைகளுள் பசு
வைப்போலவும் இயக்கர்களுள் குபேரனைப்போலவும் புருஷர்க
ளுள் விஷ்ணுவைப்போலவும் (எ-று) (கஎ)

மாதரிற்கௌரிமனுவினிற்பிரண வம்பணைமாத்தினச்சுவத்தம்
யாதவர்குலத்திற் கண்ணன்மற்றின்ன வெவ்வகையதிகமவ்வகை
போற், றுதவிழிதழிவனத்தினுப்புடையசயம்புவேசயம்பினுளதி
க, மாதவின்வழிபட்டவர்பிறபதியு ளருச்சனைப்பலனெலா மடை
வார்

(இ-பொ-ளா)

பெண்களுள்கௌரியைப்போலவும் மந்திரங்களிற்பிரணவத்
தைப்போலவும் கிளைகளையுடைய மரங்களில் அரசமரத்தைப்போ
லவும் இடையர்குலத்தில் கிருஷ்ணனைப்போலவும் இவைபோன்ற
வேறு எவை யெவை யதிகமுண்டோ அதுபோல மகரந்தப்பொ
டிகளுதிரும் மலர்ந்தகொன்றைவனத்தில எழுந்தருளிவிளங்கும்
திருவாப்புடையாரென்னும் சுயம்புலிங்கமூர்த்தியே மற்றையஸ்
தலங்களிலுள்ள சுயம்புமூர்த்திகளுள் விசேஷமாகும் ஆகவின்
இம்மூர்த்தியை வணங்கினவர்கள் மற்றையஸ்தலங்களில் எழுந்த
ருளியிருக்கும் மூர்த்திகளுக்குச் செய்கின்ற அர்ச்சனை முதலியவற்
றாலாகும் பிரயோசனங்களையெல்லாம் அடைவார் (எ-று) (கஅ)

ஆப்புடையமலன்ம கிமையையனந்தற்னைந்தம்வாய்படைப்பினு
நவிற்ற, நாப்புடைபெயராவெனினெருவராயா னவிற்றுதற்கொண்
ணுமோதவத்தின், மூப்புடையறத்தீரென்றனன்கேட்டமுனிவரர்கு

னூகலித்திருகட், பூப்புடையருவிபெருகவானந்தப்புணரியங்கடலி டைப்புக்கார்

(இ-பொ-ளா)

தவத்தால்முதிர்ந்த மஹரிஷிகளே மலாஹிதராகிய அத்திரு வாப்புடையீசரது மஹத்துவத்தை உள்ளவாறே ஆதிசேஷன்தன க்குள்ள ஆயிரம்வாய்கள் தவிர இன்னும் அநேகவாய்களையுடைய வனானாலும் சொல்லுதற்கு நாவசையாது என்றால் என்னொருவா யால் சொல்லக்கூடுமோ கூடாது என்று சூதபுராணிகர் சொல்ல அதைக்கேட்டநைமிசாரண்யவாசிகள் சந்தோஷமடைந்து இரண் டுகண்களிலும் ஆனந்தபாஷ்பம் பொழியப் பேரானந்தசாகரத் திலமிழ்ந்தினார்கள் எ-று) (கக)

பின்னருமுனிவர்செவிச்சுவைநிரப்பும்பெருங்கதைச்சூதனை நோ க்கி, முன்னராப்புடையானிடபபுரேசன்முதுமைகூரன்னவினோத னென்னநீதாமஞ்சொற்றனைமூன்றுமெவ்வழியெய்தியதனை யின்னநீவிரித்துமுறையினாற்கூறென் றிறைஞ்சலுந்தாபதனிசைப் பான்

(இ-பொ-ளா)

மீண்டும் அந்நைமிசாரணியவாசிகள் செவிகளுக்கின்பத்தை நிறையச்செய்யும் பெரியசிவபுராணங்களையுபதேசிக்கின்ற சூத புராணிகரைப்பார்த்துச் சுவாமீ தேவரீர் முன்னேதிருவாப்புடை யாரென்றும் இடபபுரேசனென்றும் அன்னவினோதனென்றும் அ வருடைய திருநாமங்களையருளிச்செய்தீர் ஆதலால் அம்மூன்று திவ்வியதிருநாமங்களும் எவ்வாறுவந்தது அவ்வரலாற்றை இன்ன மும் தேவரீர் விஸ்தாரமாகமுறையாய் அநுக்கிரகஞ்செய்தருள ல் வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய சூதபுராணிகர் அந்நை மிசாரண்ய வாசிகளைப் பார்த்துச் சொலலத் தொடங்கினார் (எ-று) (உ௰)

## மூர்த்திமகிமைமுற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் சுரு

## ஆப்பனூர்ச்சருக்கம்.

---:o:---

அனைத்துமோதியபுராணநூற்பொருண்முழுதாய்ந்தாய்ந்
தெனைத்துமோர்ந்துயர்சிவகதைமுழுதறிமெய்யனக்கு
நினைத்தபோதெலாமற்புதந்தருங்கதைநியமந்
தனைத்தடாதுளீர்சாற்றுவன்கேண்மெனச்சமைந்தான்

(இ-பொ-ள)

நித்தியகர்மானுஷ்டான நியமங்களிற்சிறிதுந் தவிராதமஹாரிஷிகளே எல்லாம் சொல்லிய புராணங்களிலுள்ள பொருள்முழுவதையும் ஆராய்ந்து யாவற்றையுமறிந்த உயர்ச்சிபெற்றசிவசரித்திரங்களை யாதியோடந்தமாக அறிந்த அடியேனுக்கும் நினைக்கிறபோதெல்லாம அற்புதங்கொடுக்கும் திவ்வியசரித்திரத்தை யுங்களுக்குச்சொல்லுகிறேன் என்று தொடங்கினர் (எ-று) (க)

வாமமீனவன்மதிக்குலமடந்தையைமணந்து
தாமநாண்மலர்முடிகவித்திருந்துசெஞ்சடைமேற்
சோமநாயகன்சுந்தரநாயகன்சுருதி
நாமநாயகன்புரந்ததுமதுரைமாநகரம்

(இ-பொ-ள)

சந்திரனைத்தரித்தஜடாமகுடத்தையுடையவரும்கட்டழகினையுடையவரும் வேதநாயகருமாகிய சிவபிரான் அழகியசந்திரகுலத்திற்றேன்றிய மங்கையத்துவசபாண்டியமஹாராஜாவின் புத்திரியாகத்திருவவதாரஞ்செய்தருளிய தடாதகைப்பிராட்டியாரைத்திருக்கலியாணஞ்செய்துகொண்டு அன்றலர்ந்தபுஷ்பங்களாகிய மாலையையணிந்த கிரீடத்தைச்சிரசிற்றரித்தருளிச்சோமசுந்தரபாண்டியமஹாராஜாவென்னுந்திருநாமம்பூண்டு செங்கோல செலுத்திய பெரிய இராஜதானியானது மதுராபுரியாம் (எ-று) (உ)

உடுத்தநீரகழ்புரிசைகோபுரநிலையுயர்வா
னடுத்தசூளிகைமாளிகையுபரிகையரங்கந்
தொடுத்தசாளரமபித்திகைமண்டபந்தொகைகண்
டெடுத்தவானவர்தச்சனுமிசைப்பரிதின்னும்

(இ-பொ-ள)

ஜலம்நிறைந்த அகழிசூழ்ந்த மதில்கள் நிலைகளையுடைய கோபுரங்கள் ஆகாயத்தையளாவிய சூளிகைகள் மாளிகைகள் உப்பரிகைகள் சபைகள் பல்கணிகள் பொருந்திய சுவர்கள் மண்டபங்கள் ஆகிய இவற்றின் பிரமாணஅளவைகளை யாராய்ந்தறிந்த தேவதச்சனாகிய விஸ்வகர்மாவாலும் சொல்லற்கரிய சிறப்பினையுடையது இஃதல்லாமலும் (எ-று) (ங)

சாலநீள்சுடர்மணிகளிற்றணித்தணிசமைத்த
கோலமாளிகைமீச்செலுமீச்செலுங்குணத்தா
னீலமாய்மிளிர்செம்மையாய்வெண்மையாய்நிறம்பொன்
போலவாயுருத்திரிந்திடும்பகலவன் புரவி

(இ-பொ-ள்)

மிக்க ஒளிவீசுகின்ற நீலம் மாணிக்கம் வைரம் முதலிய இரத்தினங்களை வைத்திழைத்திருக்கும் அழகிய மாளிகைகளின் மேலே மேலே போகிறதனமையால் சூரியனிரதத்திற் பூட்டிய குதிரைகள் நீலநிறமுள்ளதாயும் சிவப்புவர்ணமுள்ளதாயும் வெண்மையான மேனியுள்ளதாயும் பொற்சாயையுள்ளதாயும் தங்கள் உருவங்கள் வேறுபடும் (எ-று) (௪)

பருமணிச்சுடர்மேனிலைவதிந்துபைந்தொடியார்
கருமுகிற்குழற்கூட்டகினறும்புகைகதுவுஞ்
சுரநதிப்புனல்குடைபவர்கூந்தலோதுகிலு
மருமலர்த்திருமேனியுங்கமழுமவ்வாசம்

(இ-பொ-ள்.)

பருத்தஇரத்தினங்களின் பிரகாசம் பொருந்திய மேல்வீடுகளிலிருந்துகொண்டு பசியவளையலகளைத்தரித்த ஸ்திரீகள் கரிய மேகம்போன்ற கூந்தலுக்கு ஏற்றும் அகிற்புகைப்பற்றிய தேவகங்கையிலே ஸ்நானஞ்செய்யும் அத்தேவஸ்திரீகளது கூந்தலிலும் வஸ்திரங்களிலும் வர்சனைபொருந்தியமலர்போலும் அழகியசரீரத்திலும் அவ்வகிற்புகையின் மணமானது வீசிக்கொண்டேயிருக்கும் (எ-று) (ரு)

பழுதில்வெற்பெனப்பணைத்தெழுமுலைகொண்கர்பருக்கை
மெழுகெனக்குழையுறப்புணர்மின்னனாரிமையா
தெழுதுசித்திரமனைவயினொளித்திடினிளைஞர்
முழுதுமெய்ப்படநோக்கினுமறிந்திடமுடியா

(இ-பொ-ள்)

குற்றமில்லாத மலைகளைப் போலப்பருத்து வளர்ந்தெழுந்த ஸ்தனங்களை நாயகர்கள் தங்கள் விசாலமாகியகைகளால் மெழுகைப்போற் குழையும்படிப்பிடிக்கப்போகின்ற ஸ்திரீகள் கண்ணிமையாமல் சித்திரமெழுதியிருக்கும் அவ்வீடுகளில் ஒளித்துக்கொள்வார்களேயானால் அப்போது தங்கள் நாயகர்களுங்கூட நான் முழுவதும உள்ளபடியே தேடினாலும் கண்டுபிடிக்கமுடியாது (எ-று) (சா)

அனையதூணவைபோதிகையன்னதத்திரமே
வினையபொறறுலாமெனவிதர்துணைப்பவரெவரே
கனைசுடறபயகதிர்க்குமம்மனைகளிற்கைசெய்
வினைதெரிக்கிலவிழியொளிமணியொளிவிழுங்க

(இ-பொ-ள்)

அவை தூண்களென்றும் அவைபோதிகைகளென்றும் அவை உத்திரங்களென்றும் மேலேவைத்திருக்கும் அழகியதுலாக்கட்டை

யிவையென்றும் தனித்தனிவிதந்துசொல்பவர் எவரொருவருமில்லை ஏனெனில் ஒலிக்கின்றசமுத்திரத்தில் உதயமாகுஞ்சூரியனுக்கும் கூடகண்ணொளியை அவ்வீடுகளில் வைத்திழைத்திருக்கின்ற இரத்தின ஒளியானது கிழ்படுத்துவதால் அவ்வீட்டிற்செய்திருக்கும் வேலைவினோதங்களைச் சொல்ல முடியாது (எ-று) (எ)

மகிழ்வினெவ்வெவத்தேயமாக்களுங்கொளவரினும்
புகலுமோர்சிறுவிலைப்பொருண்முதலபொன்கோடி
தகும்விலைப்பொருளாயினுங்கொளக்கொளத்தாழா
மிகவளம்பழுத்துமிழ்வனவாவணவீதி

(இ-பொ-ளை)

மனமகிழ்ச்சியுடனேயெந்ததேசத்துமனிதர்களும் சாமான்கள் வாங்க வந்தாலும் கொஞ்சவிலையாகச்சொல்லப்பட்ட வஸ்துக்கள் முதல் கோடிபொன்விலையுள்ள வஸ்துக்களாயினும் வாங்க வாங்க குறையாமல் வளர்ந்துகொண்டேயிருக்கும் பெருமையையுடையது அக்கடைவீதி (எ-று) (அ)

கோதிலாதசெஞ்சூட்டுடைவாரணங்கூவ
வோதஞாலத்துமற்றையகலத்துளார்விழிப்ப
நீதலேற்றலோடறுதொழிலிருபிறப்பாளர்
வேதநாதத்தின்விழிப்பதவ்வியனகர்மாக்கள்

இ-பொ-ளை

குற்ற மற்ற செவ்வியஉச்சிக் கொண்டையையுடைய கோழியானது கூப்பிட அதனால் சமுத்திரம் சூழ்ந்த இப்பூமியில் மற்றையஸ்தலங்களிலுள்ளவர்கண்விழிப்பார் இம்மதுராபுரியிலுள்ளவர்களோ என்றால் பிறருக்குகொடுத்தல் பிறரிடத்திலிருந்துவாங்குதல் முதலிய ஆறுதொழில்களையுடைய பிராமணர்கள அத்தியயனஞ்செய்யும் வேதகோஷத்தைக்கேட்டு நித்திரையினின்றுங் கண்விழிப்பார் (எ-று) (கூ)

பிராமணர் அறுதொழிலாவன வேதமோதல், வேதமோதுவித்தல், யாகஞ்செய்தல், யாகஞ்செய்வித்தல், தானங்கொடுத்தல் தானம்வாங்கல், என்பதாம்

வேதபாரகர்வேந்தர்களுய்கரோர்வினைஞ
ராதியசயபல்வருணருட்சமையிகளளவில்
பூதநாயகன்கயற்கணாள்புணர்மதுரேசன்
பாதசேவையர்சீவனமுததரிற்பயில்பதியால்

(இ-பொ-ளை)

வேதாத்தியயனஞ் செய்யும் பிராமணர்களும் க்ஷத்திரியர்களும் வைசியர் வேளாளர்களும் முதலாகியபலவருணத்தார்களும்

உட்சமயிகளாறவரும் பூதகணங்கட்குத் தலைவரும் மீனாக்ஷியம்மைநாயகருமாகிய சோமசுந்தரக்கடவுளுடைய திருவடிகளைச்சேவிப்பவர்களுமாகிய அவர்களெல்லோரும் ஜீவன் முக்தர்களைப்போலச்சஞ்சரிக்கும் பெருமையையுடையது அம்மதுராபுரி (எ-று) (௧௦)
ஆல் அசை

அந்நகர்க்கிறையரும்புகார்நகர்க்கிறையாதி
யெந்நகர்க்கிறையேனும்வந்திணையடியிறைஞ்சப்
பொன்னகர்க்கிறைமணிமுடிதகர்த்தநீள்புயத்திற்
பன்னகர்க்கிறைபரித்தபார்முழுவதும்பரிப்போன்

(இ-பொ-ள்.)

இத்தனைப்பெருஞ்சிறப்பினதாகிய அம்மதுராபுரிக்கு அரசன் யாரெனின் காவிரிப்பூம் பட்டினத்திற் கரசனாகிய சோழராஜா முதலிய எந்ததேசத்தரசர்களும் வந்து இரண்டு பாதங்களிலும் வணங்கவும் தேவலோகத்திற்கரசனாகிய தேவேந்திர மஹாராஜாவினது கிரீடத்தைச்சிதறுண்ணும்படிசெய்தும் நாகலோகாதிபதியாகிய ஆதிசேஷன்சுமக்கும் இப்பூபாரத்தைத் தன்புஜத்திற்றாங்குவோனும் (எ-று) (௧௧)

மொழிந்தநற்கலைமுழுதறிமுறைமையினமுதம்
வழிந்தபார்வையிற்குவலயமுழுவதுங்கூர்வகையிற்
சழிந்ததிக்குறும்பகையிருடுணிக்கும்வாட்கரத்திற்
பொழிந்ததன்புகழ்க்குலமுதற்றலைவனைப்போல்வான்

(இ-பொ-ள்)

ஆன்றோர்களாற் கூறப்பெற்ற நல்ல சாஸ்திரப்பொருள் முழுதும் அறியும் முறைமையிலும் அமிர்தம் வழிகின்றபார்வையிலும் சகலஜீவர்களும் சந்தோஷமடையச் செங்கோல் செலுத்தும் தத்திலும் திக்குகளிலுள்ள பகையாகிய இருளையோட்டும்கருத்தையாகிய கரத்திற்கொண்டவாள் வித்தையிலும் மிக்ககீர்த்தியையுடைய தமது பாண்டியவம்சத்தில் ஆதியிற்செங்கோல்செலுத்தின குலசேகரபாண்டியமஹாராஜாவைப் போன்றவரும் (எ-று) (௧௨)

அளவில்பாற்கடற்றன்குலமதிமுளைத்தாங்குத்
தளர்விறீஞ்சுவைத்தமிழ்க்கடன்முளைத்ததண்மதியான்
கிளர்நெடுந்திசைவிளக்குதண்சுடர்க்குநாட்செழுமி
வளர்வுந்தேய்வுமைமந்துறப்புணர்த்திடப்புகழ்வளர்த்தோன்

(இ-பொ-ள்)

விசாலமாகியதிருப்பாற்கடலில் தன் குலமுதல்வனாகிய சந்திரனுதித்ததாற் போலத்தளர்வில்லாதநவரசாலங்காரத்தோடுங்கூடிய மதுரமபொருந்திய தமிழ்க்கடலில தோன்றிய குளிர்ந்தசந்

னுக்கு நாள்தோறுங்கலைகள் கூடிப்பிறைவளர்வதுபோலும் க
லைகுறைந்து தேய்வதுபோலும் வலியகனைது இராஜாங்கங்கள் பிற
அறிந்துகொள்ளும்படி புகழை வளர்த்து இகழ்வைத்தேய்த்தவ
ரும் (எ-று) (௧௩)

டைதவிரறமுதற்றிரிவருக்கமுங்கலப்பத்
டையில்சாமமுனுஞ்சதுர்வருக்கமுஞ்சார்ந்தோ
னுடையதான்றமர் பகைஞர்வன்கள்வரூர்விலங்கா
லடையுமைம்பயவருக்கமுந்துடைத்தரசாள்வோன்

(இ-பொ-ரை)

மனிதர்களாலடைதற்பாலனவாகிய அறம் பொருளின்பம்
வீடு என்னு நான்கனுள் நான்காவதாகிய வீடு ஒன்று தவிர மற்
றய அறம்பொருளின்பம் என்னு மூன்றுமபொருந்த சாமபே
த தானதண்டமாகிய சதுர்விதவுபாயங்களையு முடையவரும் தன்
னாலும் சுற்றத்தாலும் சத்துருக்களாலும் திருடர்களாலுமிருக
ங்களாலும் உண்டாகும் ஐந்துவகையான பயங்களையு நீக்கி அர
சாக்ஷிசெய்பவரும் (எ-று) (௧௪)

நிறம்புகாமமுன்னுமறுவகைவற்கந்தீர்ந்தோ
னுறுபடைகுடிகூழமைச்சுநட்பரணுடனே
யபருஞ்சுவாமியமென்னுமேழ்வருககமும்பிறங்க
வுறங்கிடாதுசென்னேமியொன்றுருட்டிமண்புரப்போன்

(இ-பொ-ரை)

தவறுதல்செய்யும் காமம் குரோதம் உலோபம் மோகம் மத
ம் மாற்சரியமென்னும் சத்துருககளாகிய ஆறுகுற்றங்களினின்று
நீங்கினவரும் படைகுடிகூழ் அமைச்சுநட்பு அரண் என்னும் ஆ
று இயல்புகளோடும் இவற்றிற்செல்லரந் தலைமையாந்தனமையு
மாகிய ஏழுவிதமார்க்கமும் விளங்கச்சோர்விலலாமலே ஆக்ஞா
சக்கரத்தைச்செலுத்தி குடிகளை இரக்ஷிப்பவரும் எ-று (௧௫)

இரதஞாயிறெங்கெழினுமீறுயிர்க்குறிலேனும்
வரதபூரணசச்சிதானநதசின்மயமாஞ்
சரதநள்குறிச்சயம்புநற்றெரிசனந்தவிரா
விரதசீலனென்றெவ்வுலகமும்புகழ்மேலோன்

(இ-பொ-ரை)

இரதாரூடராய்ச்செல்லும் சூரியன்இயல்பாயுதித்துஅஸ்தமிக்
குந்திசையனறித் தெற்குவடக்காய மாறினாலும் தன்னுபிருக்காப
த்துவந்தாலும் வரதராயும் பரிபூரணராயும் சத்துச்சித்தானந்த
சின்மயசொரூபராயும் உள்ளசிவபிரான் ஆதாரமாகக்கொண்டு
நிற்கும் சுயம்புலிங்க தெரிசனஞ்செய்தலில் தவறுதலில்லாத தி

டவிரதத்தைக்கொண்ட நல்லொழுக்கமுள்ளவரென்றெல்லாவுல கத்தாரும் புகழ்ந்துபேசும் பெருந்தன்மையை யுடையவரும் (எ-று) (௧௬)

## வேறு.

தேனேந்தியமலராள் காந்தனேநிகர்சீர்வாய்ந்தவனெதிர்பொருநே ரா, ரூனேந்தியவடிவேலேந்தலின் மயிலூர்சேந்தனில் வருமுயர் கோமான், மீனேந்தியகொடியால்வேந்தரினிவன்வேள்வேந்தென வெழிலுடையோனீள், வானேந்திசைதிகழ்சோழாந்தகனெனவா ழ்பாண்டியன்முனமுளனோர்நாள்

(இ-பொ-ள)

தேன்பொருந்திய செந்தாமரைமலரில் வீற்றிருக்கும் இலக் குமிநாயகராகிய மஹாவிஷ்ணுவுக்குச் சமானமான சிறப்பையு டையவரும் எதிர்த்துயுத்தஞ் செய்கிறசத்துருக்களது நிணமுமுறை ந்த கூரிய வேலாயுதத்தை வைத்திருப்பதால் மயில்வாகனத்தி லாரோகணித்துச் செல்லும் முருகக்கடவுள்போலும் உயர்ச்சி பெற்றதலைவரும் மீனக்கொடியைப்பிடித்திருப்பதால் இராஜாக்க ளுள் இவர்மன்மதராஜாஎன்று சொல்லும்படிபொருந்திய அழ கையுடையவரும் தேவலோகத்திலும் பரவிய புகழ்விளங்குகின் ற சோழாந்தகனென்னு நாமத்தையுடையவருமாகிய ஓர் பாண் டிய மஹாராஜா இருந்தார் அவர் ஒரு நாளில் (எ-று) (௧௭)

மருவேட்டம்புயன் மதியாற்கண்டனவகைகாட்டுங்கவி னிறைதே ருந், தருவேட்டங்கைவிண்மிசைநீட்டுங்களிதருகோட்டும்பலும் வயமாவு, முருவேட்டங்கசனுழல்வாட்செக்கையருலையாச்சங்க முமுடன்மேவத், திருவேட்டஞ்செயும்வினைவேட்டிந்திரதிசைமே ற்சென்றனன் விரைவாயால்

(இ-பொ-ள)

வாசனைபொருந்திய தாமரைமலரில்வீற்றிருக்கும்பிரமதேவர் தமது புத்திநுட்பத்தாற் செய்ததைப்போலப் பார்ப்பவர்களுக்கு ஆச்சரியத்தையுண்டாக்கும் அழகு நிறைந்ததேரும் தேவலோகத் துள்ள கற்பகவிருக்ஷத்தைவிரும்பி யழகியதுதிக்கையை ஆகாயத் தில் உயர்த்தி நீட்டும் களிப்பைக்கொண்ட கொம்புகளையுடைய யானையும் பலம்பொருந்திய குதிரையும் மன்மதனுக்கு உருவத் தினழகைவிரும்பியுழலும் வாளைப்பிடித்தசெவ்வியகைகளையுடை ய காலாட்களது கெடாதகூட்டமும் ஆகிய சதுரங்க சைனியங்க ளும் சூழ்ந்துவரச்சிறந்த வேட்டையாடுந் தொழிலில் விருப்பமு டையராய் கீழ்த்திசையைநோக்கிச் சீக்கிரமாக நடந்தார் (எ-று) ஆல்-அசை, (௧௮)

ன்குடைசோதியுமிழ்ந்தொளிநீன்முடி கண்டவராதவ னென்
ளுத, வெண்குடையேமதிதண்கதிர்சாமரைவிண்டிடினே ரென
வஞ்சேனை, மண்குடைதுளிகருங்கடன்மேடுற வந்திகர்மாக நர்
காண்டாடப், பண்குடையாவரிவண்டுகேள்பாடுற பைந்தொடை
ார்பனடந்தானல்

(இ-பொ-ள)

பார்ப்பவர்கள் சூரியனேயென்று சொல்லத்தக்கதான கண்
ணயுங்குடையும்வண்ணம் கிரணக்கற்றைகளை வீசிப்பிரகாசிக்கி
ற பெரியகிரீடதைதயும் சொல்லுமிடத்து சந்திரனே வெண்
மயான குடைக்குச்சமானமென்றும் குளிர்ந்த அச்சந்திரகிரண
களே சாமரைகளென்றும் சொல்லும்படி பொருந்திய குடைசா
ரைகளையும் உடையவராய் வலியசைனியங்கள் நடப்பதால் பூ
மினின்றும் உண்டாகின்ற புழுதிகள் கரியசமுத்திரத்தை மேவ
ய்யவும் மங்கலப்பாடகரும் சங்கீதவித்வான்களும் புகழ்ந்துபா
வும் வரிகளையுடையவண்டுகள் மலர்களைக்குடைந்து இசைபாடு
ற பசியமாலையைத்தரித்த மார்பினராகிய அச்சோழாந்தகபா
டியமஹாராஜா சென்றார் (எ-று) ஆல் அசை (கக)

குறழல்கயல்போல்மீனுறுகொடிவார்சேனைசதரவடல்வீரர்
ளுபதிமுதலானோர்குழுவொடுசேராவுழையமையாவன
ஞதைமுனேவீரெனமலர்க்கானமேலணிதருகழலோய்முன்
ாளுரெனலும்வெள்வேன்மீனவனெறிபோதாவனமெதிர்புகும்
ிலை

(இ-பொ-ள)

தேவகங்கையிலுழலுமச்சங்களைப்போலமீனக்கொடிகள் நெ
தூரத்திலசைய வலிமையையுடைய வீரர்கள் சேனாதிபதிகளு
ன சேர்ந்து தூதர்களையழைத்துக்காட்டில் நாலுபக்கமுஞ் ச
வழக்கமாய்ப்பார்த்துவரும் வேட்டைக்காரர்களைமுன்னேபார்
வர அனுப்பும் என்று அரசன்சொல்ல வீரக்கழலைதரித்த
மாராஜாவே அவ்வேட்டைக்காரர்கள் முன்னமே போயிருக்கிறா
னறுசொன்னவுடன் வெள்ளியவேலாயுதத்தை யுடையபாண்
மஹாராஜன அவ்வழியேசென்று காட்டிற்குநேரே செல்லும்
ாதில (எ-று) (உ0)

ாடுதோறுயில்புரியிருகால்மறவர்கள்சுருள்வான்மடிசெவிநெடு
ங்க, ளாடுவார்வலையொடுபடர்பார்வையிமளுடுமுழல்மானம
களைவனமேதி, கடுவாயுழுவைபன்முயல்சூகரமொமகளிறேடு
யின்னவைசூழப், படுகானிடையெரடி யெறியாவலைகொடுவ
பாவுடனெதிடலர்மீளா

(இ-பொ-ள)

இரண்கோல்களிலும் செருப்பையுடைய வேடர்கள் சுருண்டவாலையுந்தொங்குகின்றகாதுகளையுமுடைய வேட்டைநாய்களோடும் நீண்டவலையோடும் பார்வைமிருகங்களோடும் மான்மரை ஆண்மான் காட்டெருமை கடுவாயென்னும் ஓர்வகைப்புலி புலி பலமுயல் பன்றி யானை கரடியாகிய இம்மிருகங்கள்முதலிய பலவும் நெருங்கிச் சஞ்சரிக்கின்ற காடுகளைவெட்டி வலைகளைக்கொண்டு நாற்பக்கமும் சுற்றியுடனே சிலவேடர்கள் அக்காட்டினின்றும் திரும்பியெதிரே (எ-று) ஒடு ஓடு இரண்டுஉருபிடைச்சொல் பார்வைமிருகமாவது உயிருள்ளமிருகங்களைப்பிடிப்பதற்கு அவற்றைப்போல வஞ்சிப்பாய்செய்துவைத்திருக்கும் ஓர் பொறி (உக)

அரையன்முன்வந்தடிதொழுதவிலங்கினமனவிலங்குளவலைவாரால், விரையவளைந்தனமெனவுரைதந்தனர்விருதர்கணம்புடைபுடைசூழ, வரைபுரைபஞ்சவன்வரிசிலைசெங்கையில்வளையநடந்துழைவருவோரைக், கரையில்பயங்கொடுவிருகம்வெருண்டெழல்கருதமிலனன்றனனெனலோடும்

(இ-பொ-ள.)

அரசன்சமுகத்தில் வந்து பாதங்களில் நமஸ்கரித்து மஹாராஜாவே இவ்விடத்தில் அனேகமிருகங்களிருக்கின்றன வலையிலுள்ளவார்களால் சீக்கிரம்வளைந்தோம் என்றுசொன்னார்கள் அப்போது வீரர்கள் பக்கங்களிலெல்லாம் சூழ்ந்துவர மஹாமேருசமானரான இச்சோழாந்தகபாண்டியமஹாராஜன் வில்லைக்கைகளில் தாங்கியவர்களாய் பக்கத்தில் வருவோரைப்பார்த்துஏவீரர்களே செந்நாய்கள் அளவில்லாமல் பயந்து ஓடுவதைப்பாருங்களென்றுசொன்னார் அப்படிச்சொல்லிய சமயத்தில் (எ-று) (உஉ)

கூவிளிபம்பைதடாரிபெரும்பறைகோடுவலம்புரிதுடியோசை மேவிஅண்டகடாகமுடைந்தெனவீறியகம்பலையதுகேளாப் பாவிலங்கினம்யாவும்வெருண்டெதிர்பாய்வதுகண்டடுசிலைவீர், துவியவனகணை மாரிசொரிந்தனர் சோரிபரந்தன நதியேபோல்

(இ-பொ-ள)

வீரர்கள்சப்திக்கும் பம்பை மத்தளம் பெரியபறை ஊதுகொம்பு வலம்புரிச்சங்கு உடுக்கை முதலிய வாத்தியங்களை அண்டகடாகங்கள்வெடித்தாற்போல முழக்க அம்முழக்கத்தைக்கேட்டு அக்காட்டில் உள்ள பலவாகியமிருகங்களெல்லாம் மருண்டுபயந்து ஓடின அவ்வாறோடும்போது அவ்வீரர்கள் வில்லினிடமாக பாண

ங்கணைத்தொடுத்து மேகமானது மழைபொழிவதுபோல இடைவிடாதபிரயோகஞ்செய்தார்கள் அதனால் அவ்விடத்தில் இரத்தவெள்ளம் பெருக்கெடுத்தோடியது (எ-று) (உ௩)

வாய்கிழிவனசிலசாறுணிவனசிலவாலறுவனசிலகழிதூரம்
போமவர்வனசிலகூய்விழுவனசில்போம்வழிதெரிகிலசிலவாளி
பாயுடலினசிலவீழ்குடரினசிலபார்நகர்வனசிலவெளியோடி
நாய்தொடர்வனசில வேனுழைவனசில நாள்கழிவனசிலவன
மாவே

(இ-பொ-ள்)

அப்போதுகாட்டிலுள்ள மிருகங்களில் சிலவாய்கிழிந்தும் சிலகாலொடிந்தும் சிலவாலறுந்தும் சில நெடுந்தூரம் ஓடிச்சோர்ந்தும் சிலகூவிவிழுந்தும் சில ஓடித்தப்பிப்போகும் வழிதெரியாமல் மயங்கினதும்,சிலஅம்புபாய்ந்ததும் சிலகுடர்சிந்தினதும் சில ஓடச்சத்தியில்லாமல் நகர்வனவும் சிலவத்தையோடும்போது நாய்கள் துரத்துகிறதும் சிலவேல்நுழைந்ததும் சிலஇறந்ததுமாக ஆயின (எ-று) ஏ அசை (உ௪)

வசைமற்றிடுதமிழ்மதுரைக்கதிபதிவரிவிற்கணைசிலவருகேழ
றசையுற்றிடுபுலிகாடிக்குலநிரைதனையுற்றுருவியவனமேதி
யசைவுற்றிடுசெவிமதவெற்புருவிய மருவிப்புனலென வழிசோரி
பசையற்றிலபடர் விசையற்றிலவிசை பகர்தற்கரிதரிதெவராலும்

(இ-பொ-ள்.)

இதன்றியும் குற்றமற்றதமிழ்நாட்டிலுள்ள மதுரையம்பதியிலிருந்து செங்கோல்செலுத்திய சோழாந்தகபாண்டிய மஹாராஜா பிரயோகஞ்செய்த அம்புகள் அங்குள்ள பன்றி காடி காட்டெருமை அசையும் செவிகளையும் மத அருவியையுமுடைய யானையாகிய இம்மிருகங்களிலெல்லாம் இடைவிடாது பாய்ந்து ஊடுருவியதால் அவ்வம்புகள் இரத்தப்பசைநீங்கவில்லை வேகமுங்குறையவில்லை ஆதலால் யாவராலும் அவ்வம்பின் வேகத்தை இவ்வளவென்று சொல்ல அரிதாகும் (எ-று) (உ௫)

நசைமயிர்துற்றியகவரிமாற்பீடஞமலியலைத்திடமேதுநேரிற்
பசைமறுதர்க்குண வறிவிலிகைபபடு பதுமினியொத்திடு முடல்
பீறித், திசைதிசையுற்றிரிபலவிருகத்தினசிறகுடர்சுற்றியவரிலூ
டு, விசைகொடுபுக்குழிமுவல்வலையுற்றழல்விடமெனவெப்தரு
டருமாதோ

(இ-பொ-ரை)

இன்னும் தன்சரீரத்திலுள்ளரோமத்தில் லக்ஷியம்வைத்திருக்கிறகவரிமான்கள் அலறியோட நாய்கள் அவைகளைத்துரத்தியலைத்தலைமோதிக்குமிடத்து இரக்கஞ்சிறிதுமில்லாத துர்குணமுள்ளமூடன்கையிலகப்பட்ட பத்தினிஜாதிப்பெண்ணையொத்திருக்கின்றது சரீரம்பிளந்து திக்குகள்தோறும்அலைந்து பயந்தோடுகின்ற பலமிருகங்களின் குடல்கள் அங்குள்ள சிறியபுதல்களில் சுற்றிக்கொள்ள அதனால் ஓட முடியாமல் திகைப்பது முயல்கள் வலையினிடமாய்ச்சிக்கிக்கொண்டு ஓடமுடியாது மயங்குதலைப்போல இளைத்துருளுகின்றன (எ-று) மாதோ அசை (௨௬)

## வேறு

அவ்வழிவேட்டஞ்செய்யுமளவையிலொருமான்வீரர்
கைவரிசிலையோட்டம்பின்கதியையும்பிழைத்துவாரும்
பெய்வலைத்தொடக்குந்தாண்டிப்பின்றொடர்நாயுந்தாட்ப
வெவ்வழிமானுந்தாவியெய்ப்பறவோடிற்றன்றே

இ-பொ-ரை

இவ்வாறுவேட்டையாடும் போது ஒருமானானது அப்படைவீரர் பிரயோகஞ்செய்த அம்பின்வேகத்தையும் பிற்படச்செய்து அவர்களால் கட்டியவலைக்கட்டையும் தாண்டித்தன்னைத்தொடர்ந்து துரத்துகின்றவேட்டைநாய்களுங்களைத்துப்பின் நிற்க வழியிலுள்ளஎப்படிப்பட்ட உன்னதமானமரங்களிலுந் தள்ளிக்குதித்தும் மிஞ்சித்தும்களைப்பின்றி வேகமாய் ஓடிற்று (எ-று) (௨௭)

ஒண்கதிகாட்டுமான்பின்னுறுபடைத்துணைபின்னிற்ப
வெண்கதிர்விலங்கின்கூட்டமியல்வனத்தொருவனாகிக்
கண்கவர்வனப்பின்வாய்ந்தசிலையொடுங்காலிற்சென்றான்
வெண்கதிர்மருமான்முன்போம்வெஞ்சுடர்மருமான்போலும்

(இ-பொ-ரை)

மிக்க வேகமாய்ச்செல்லும் அந்த மானின்பின் சோழாந்தக பாண்டிய மஹாராஜா தனக்குச்சேனையாகப் பொருந்திய படைவீரர்கள்யாவரும் பின்னேகளையடைந்து நிற்க பிரகாசிக்கும் பல மிருகங்களும் சஞ்சரிக்கின்றஅக்காட்டில் தான் தனியாய்க்கண்கள் இச்சிக்கும் அழகுவாய்ந்த வில்லோடும் காற்றைப்போல அதிக வேகமாய் ஓடினார் அவ்வாறுஅவர் மானைத்தொடர்ந்து பின் ஓடுவது எத்தன்மைத்தாமெனின் வெண்மையானகிரணங்களை வீசும் சந்திரனுக்குமுன்னேசென்ற வெவ்வியகிரணங்களையுடைய சூரியனையொத்திருக்கின்றது (எ-று) (௨௮)

மங்குலந்தரமேற்பாய்ந்தமண்ணிடைக்குதிக்குமானைக்
கங்குலங்குறையுங்கானிற்காவதமளவிற்கூடித்
தங்குலமதிக்குவந்ததனிமறுத்துடைப்பானென்ன
வெங்குலவரைப்பொற்றோளான்கணையொன்றால்வீட்டினானே

(இ-பொ-ள்)

மேகங்கள்சஞ்சரிக்கும் ஆகாயத்தில்துள்ளி மேழுதித்து ஓடி நின்ற அம்மானை மரநெருக்கினாலிருண்ட அக்காட்டில் அரைக்காதவழிதூரம் வரையிலோடிச்சமீபித்து தங்குலமுதல்வராகிய சந்திரனுடைய களங்கமாகியமானைநீக்குபவர்போல மிக்க பலம் பொருந்திய மலையையொத்த புயங்களையுடைய சோழாந்தகபாண்டிய மஹாராஜாஒரே பாணத்தைபிரயோகஞ்செய்து வீழ்த்தினார் (எ-று) ஏ அசை (௨௧)

தேவம்புயநேர்பார்க்கச்செங்கதிர்செல்லுமெல்லை
தாதவிழ்நறுந்தேன்வேப்பந்தார்முடிச்செழியர்செய்த
மாதவமனையானெய்த்தவருத்தமும்பசியுமூளப்
பாதவநிழலிற்போகியவசமுற்றயர்ந்தான்பார்மேல்

(இ-பொ-ள்)

அப்போது குளிர்ச்சியுள்ளதாமரைகள் நிமிர்ந்து நேரேப்பார்க்கச்சூரியன் செல்லும் உச்சிக்காலமானதால் முறுக்கவிழ்ந்த நல்லதேன்பொருந்திய வேப்பமாலையைத்தரித்த முடியையுடைய பாண்டியராஜாக்கள் செய்த தவமேதிரண்டொரு வடிவெடுத்தாற்போன்ற சோழாந்தகபாண்டியமஹாராஜா ஓடிவந்த தனாலாகிய வருத்தமும் பசியும் அதிகரிக்க அதனால் ஓர் மாநிழலிற்சேர்ந்து பூமியில்பரவசமாய் விழுந்தார் (எ-று) (௨௨)

மந்திரத்தலைவர்சேனைமன்னர்மற்றியாருங்கூட
விந்திரத்திருவன்கானிலெங்குற்றானென்னவோடி
வந்திளைத்தீண்டிவெந்தீப்பசியினால்வரைபோற்சாய்ந்த
சுந்தரத்தமிழர்கோனைக்கண்டலுந்துணுக்கமுற்றார்

இ-பொ-ள்.

மந்திரிகளும் சேனைத்தலைவர்களும் மற்றையருந்தேவேந்திரபோகமனுபவிக்கும் நமது கூடலம்பதியின் மஹாராஜா இக்கொடியகாட்டில் எங்கிருக்கிறாரோ என்று ஓடிவந்து கதிப்பசியினால் மெலிந்து மலைபோற்சாய்ந்து சோர்ந்துகிடக்கும் அழகிய அச்சோழாந்தகபாண்டிய மஹாராஜாவைப்பார்த்தமாத்திரத்தில் மனந்திடுக்கிட்டு நடுங்கினார்கள் (எ-று) (௨௩)

தென்னருக்கரசேவேதநூனெறிநிற்பந்தேய
மன்னருக்கிடியேறன்னமதிக்குலமணியேயெங்க
ளின்னுயிர்க்குயிரேயார்க்குங்களைகணேயுணராமென்ன
மன்னுயிர்க்கிறைவன்வாளாகிடத்தல்கண்டயர்ந்துமாழ்கி

(இ-பொ-ள)

பின் பாண்டியமஹாராஜாவே வேதாகமங்களிற்கூறியநன்னெறியினின்றுதவறிய மற்றையதேசத்தரசர்களான அசுணப்பறவைகளுக்கு ஆணிடியையொத்தவரே சந்திரகுலத்திற்றோன்றிய மாணிக்கம்போன்றவரே எங்களுயிர்க்குயிரானவரே யாவர்க்கும் புகலிடமாயுள்ளவரே துயிலினின்றும் எழுந்திரும்என்று கூச்சலிடவும் அம்மகாராஜா அசைவற்றுச்சொக்கிக்கிடப்பதைப்பார்த்து மனந்தளர்ந்து மயங்கி (எ-று) (௧௨)

அமைச்சியற்பாரம்பூண்டவறிஞர்கள்விரைந்துசீதஞ்
சமைச்சலர்வாசநீர்தூந்திருத்துயார்தமைக்கூயுள்ளக்
கமைச்சினவேலான்கொண்டவிடாய்தணித்திடலுங்கண்க
ளிமைச்செதிர்விழித்துச்சோமசுந்தரக்கடவுளென்றான்

(இ-பொ-ள)

மந்திரித்துவமாகிய பாரத்தைத்தாங்கியதந்திரோபாயங்களில் வல்ல அம்மந்திரிகள் துரிதமாய் குளிர்ச்சிபொருந்திய பல நறியபுஷ்பங்கள் பெய்துவைத்திருக்கும் வாசனையையுடைய ஜலத்தைத்தூவுந் தொழிலாளர்களைக் கூப்பிட்டு அவர்களிடத்திலுள்ள துருத்தியால் மெல்ல அவர்முகத்தில் வீசச்செய்து உள்ளத்தில் பொறுமையுள்ள கொடிய வேலாயுதத்தையுடைய அப்பாண்டிய மாஹாராஜா அடைந்திருந்த களைப்பை நிவர்த்திசெய்யவும் அவர் தன்னிருகண்களையும் இமைத்து நேரே விழித்துப்பார்த்துச்சோமசுந்தர மென்றுசொன்னார் (எ-று) (௧௩)

செம்புலம்படர்வெள்வேலான்சிறிதயர்வுயிர்த்தனோக்கி
யம்புவியரசேமானையடும்வினையாட்டினெய்தி
வெம்புகானிடையித்தூரம்போந்தமெய்மெலிவையின்னே
யும்பரினமுதமன்னவுணவுகொண்டொழித்தியென்றார்.

(இ-பொ-ள)

உயுத்தகளத்தில் யெதிரிகளிடத்திற்சென்று ஜெயிக்கும்வெற்றியையுடைய வேலாயுதத்தைத்தரித்த சோமாந்தகபாண்டியமஹாராஜன் சற்றேகளைநீங்கி யிருத்தலைப்பார்த்து மந்திரிகள் அழகிய இப்பூமியிலுள்ளவர்களை யிரக்ஷிக்கும் மஹாராஜாவே மானைவேட்டையாடுகின்ற அந்த விளையாட்டினால் கொடிய இக்காட்டிலிவ்வ

எவுதாரம்[வந்ததிலுண்டான சரீரப்பிரயாசத்தைத் தேவாமிர்தம் போன்றஷட்வகை ருஜிகனோடேகூடிய போஜனஞ்செய்து நீக்குவீர் என்று சொன்னார்கள் (எ-று) ௩௪)

இருந்தவாய்மலர்ந்தமெல்லவியம்புவான்வேர்தன்மூலந்
திருந்திபசயம்புலிங்கதெரிசனஞ்செய்தாலன்றி
யருந்ததற்கடிசிலேயன்றகங்கையினமைந்தசாவா
மருந்தறிலேனுமாழிவிடமெனமதிப்பேனென்றான்

(இ-பொ-ள)

பாண்டியமஹாராஜன் சற்றே பொறுத்துப் பதில்வார்த்தை சொல்வதற்கு மெல்ல வாய்திறந்து மந்திரிகளே என்னவார்த்தை சொன்னீர்கள் நான் எவைக்கும் மூலப்பொருளாயும் தானே தோன்றியதாயும் உள்ள சிவலிங்கமூர்த்ததெரிசனஞ் செய்தாலொழிய அன்னம் உண்பதேயில்லை ஒருக்கால் அகஸ்மாத்தாய் தேவாமிர்தம் என் உள்ளங்கையிற் கிடைத்தபோதிலும் அதைப்பிரமவிஷ்ணுக்கள்முதலியதேவர்களை அலைத்துத்துன்பஞ்செய்த ஆலகாலவிஷமாகத்தான் மதித்து நீக்கிவிடுவேன் என்றார் (எ-று) (௩௫)

தண்ணெனுமொழிகேட்டுள்ளஞ் சோர்ந்துபின்றெளிந்து சொல்வார், புண்ணியப்பொருட்கும்வியாப்புகழ்க்குஞ்சாதனமாயிந்த
மண்ணெனுந்திருமான் பூண்டமங்கலவணிபோற்றேன்ற
மன்னன்னமேனிகந்யதாவபாயம்வந்தறுமேயென்றார்

(இ-பொ-ள)

இவ்வாறுபாண்டியமஹாராஜன் சொன்னவார்த்தையைக்கேட்டு மனந்தியக்கிட்டுச்சோர்ந்து பின்னொருவாறு தெளிந்து மந்திரிகள் புண்ணியப்பொருளுக்கும் கெடாதபுகழுக்குஞ் சாதனமாக இந்தபூமிதேவிதரித்திருக்கும ஆபரணங்களுட்சிறந்த திருமங்கிலியத்தைப்போல சிறந்துவிளங்கும் பெருமையிற்சிறந்த மஹாராஜவே போஜனஞ்செய்யாவிடின் உமதுதேகத்துக்கு [அபாயம வருமே யென்று சொன்னார் (எ-று) (௩௬)

பையநாவசைத்தப்பின் னும்பார்த்திபன்பகர்வன்யாக்கை
யுய்யுமாதிம்மைக்கெனமே லன்பினுலுளாத்தீர்நீவி
ரையமினமறுமைநோக்கியனந்துளாததிரலீர்ம்
மெய்யதாம்பொய்யைதம்பிவிரதத்தைவிடுகிலேன்யான்

(இ-பொ-ள)

இவ்வார்த்தையைக் கேட்டு மஹாராஜாமீண்டும் மெல்லென வாயைத்திறந்து ஏ மந்திரிகளே இம்மைப்பயனை யநுபவித்த

த்தாக என்மேல்வைத்த ஓான்பினாலே சுத்த ஜடமாகிய இவ்வுடம்பு பிழைக்கும்விதத்தைச் சொன்னீர்களேதவிர அச்சுத்தஜடமாகிய சரீரத்தில் சாக்ரசொப்பனசுழுத்தியென்னும் அவஸ்தைகள்தோறும் விசுவன் தைசதன்பிராகஞன்யென்னும் நாமம்பெற்று இன்பதுன்பங்களை யனுபவித்துவரும் ஜடசித்தாகிய ஆன்மா மறுமையிலடையவேண்டும் பயனைக்குறித்துயோசித்துச் சொன்னவர்களேயல்ல ஆதலால் அநித்தியமாகிய மெய்யென்னும்பெயருடைய இச்சரீரத்தை நம்பியெடுத்தவிரதத்திற்கு பங்கஞ்செய்யமாட்டேனென்று சொன்னார் (எ-று) (௧௭)

புன்னுனிப்பனியைக்கானற்புனலினைப்புனற்கோலத்தை
யன்னநீர்க்குமிழியைநீரருந்தியகமஞ்சூல்வானை
யின்னவானகத்திற்றோன்றுமிந்திரவில்லையையே
மின்னுடற்பொறையைநம்பிவிரதத்தைவிடுகிலேன்யான்

(இ-பொ-ரை)

புல்லின்நுனியிலிருக்கும் பனிச்சலத்தையும் கானற்சலத்தையும் தண்ணீரிலெழுதப்பட்ட கோலத்தையும் ஜலத்திலுண்டாகும் குமிழியையும் சமுத்திரஜலத்தையுண்டு நிறைந்தசூற்கொண்ட மேகத்தையும் அம்மேகத்திற்றோன்றும்இந்திரவில்லையும் மின்னலையும் ஒத்துத்தோன்றியுடனே யழியுந்தன்மையுள்ள இத்தேகமாகிய சுமையைமெய்யாய் நம்பி நானிதுவரையிலும் கைக்கொண்டிருந்தவிரதத்தை விடமாட்டேன (எ-று) (௧௮)

தோமயிர்தசைநரம்புநிணமெலும்புதிரமூளை
படர்குடரீருள்வீழ்நீர்பமலம்பொதிந்தபுன்க
ணிமூடலகத்துடுச்சிலிருந்தவிவ்வுயிரையின்னே
விடுவதேயன்றிப்பூண்டவிரததைவிடுகிலேன்யான்

(இ-பொ-ரை)

நீண்ட உரோமம் மாமிசம் நரம்பு கொழுப்பு எலும்பு இரத்தம் மூளை குடல ஈரல் மூத்திரம் அமேத்தியம் ஆகிய இவைகள் பொருந்தித்துன்பமாகிய பலசரக்குகளும் நிறைத்துவைத்திருக்கும் ஒரு சிறுவீடாகிய இவ்வுடம்பில் ஒதுக்குகுடியிருந்த இவ்வுயிரை இந்தக்ஷணமே விடுவதேயல்லாமல கொண்ட விரதத்தை நாசவிடமாட்டேன் (எ-று) (௧௯)

என்றலுஞ்சூட்சிவல்லாசிவ்வளத்தணித்துஞ்சேய்த்துஞ்
செறியாஞ்சயம்புலிங்கத்தேடுதுமென்னப்போயி
வென்றிவேற்செழியன்வீர விரதத்தினுறுதிநோக்கித்
துன்றியதுயரினங்கோர்சூழலினிருந்தருழ்வார்

(இ-பொ-ரை)

என்ற இவ்வார்த்தையைக் கேட்டமாத்திரத்தில் தந்திரங்களில் வல்ல அம்மந்திரிகள் இச்சாட்டில் சமீபமாகவும் தூரமாகவும்போய் நாம் சுயம்புலிங்கமூர்த்தி யெழுந்தருளியிருக்கும் இடத்தைத் தேடிப்பார்ப்போமென்று புறப்பட்டுச்சென்று வெற்றிபொருந்திய வேலாயுதத்தைத்தரித்த பாண்டிய மஹாராஜாவுடைய வைராக்கியமான இவ்விரதத்தின் மனவுறுதியைப்பார்த்து மிக்க வருத்தத்தோடும் அங்கே ஒரு தனியிடத்தில் எல்லோருங்கூடியிருந்து ஆலோசனை செய்வார்கள் (எ-று) (சய)

சிறுமைசண்டறியாச்செல்வத் திருமகளையர்சோனெய்து
மறுமையைநோக்கிவாளாவிருந்தியன்மாபிற்பின்னர்
பொறைமைகூர்புவனந்தாங்கப்புதல்வருப்பிறருமில்லை
வெறுமையாந்தேயம்யாமும் வெளிற்றறிவுடையமாவேம்.

(இ-பொ-ரை.)

தரித்திரமடைந்து துன்புறுவதை யொருநாளினு மனுபவித்தறியாத அஷ்ட ஐசுவரியமும் நிறைந்த நமது மதுராபுரியையாளும் இப்பாண்டிய மஹாராஜா இனியடையப்போகிற மறுமைப்பயனைக்குறித்து நாம் முயற்சியின்றி வீணேயிருப்பமேல் இப்பாண்டியவம்சத்தில் இவருக்கு பின் பொறுமையையுடைய இப்பூபாரத்தைச்சுமந்து அரசாக்ஷிசெய்வதற்குப் புத்ரனாவது அன்றி யிவருக்கு நெருங்கிய உறவினர்களாவது இல்லை நமது நகரம் இராஜனில்லாத நகரமாய்விடும் நாமும் மூடமதியினையுடையவர்கள் ஆவோம் (எ-று) (சக)

நாமுயிர்துறப்பவேந்தனலியினுநலிகவின்று
போமுயிர்மீட்குஞ்சூட்சியிதனைப்புணர்ப்பினெண்ணித்
தேமுயிர்த்தலர்ந்தகொன்றைச் செழுந்தருவடியிற்றென்ற
லாமுயிர்ப்பசையுநீழல் வாலுகப்பரப்பினங்கண.

(இ-பொ-ரை)

அப்படியிருக்க நாமெல்லாம் உயிரை விட்டுவிடத்தக்க இம்சைசெய்தாலும் செய்க இப்போது அவருடம்பினின்று பிரிந்துபோகும் உயிரைப் போகாமலிருக்கச்செய்யும் உபாயம் இதுவேயாமென்று தந்திரமாக யோஜித்துத் தேன்சொரியும்படி புஷ்பித்த செழிப்புள்ள ஓர் கொன்றைவிருக்ஷத்தினடியில் தென்றற்காற்று வீசுகின்ற நிழலிலே வெண்மணல் பரவியிருக்கும் அவ்விடத்தில் (எ-று) (சஉ)

நிவந்தவானாமன்னபெருமுளை நிறுவிநுண்ணூற்
சிவந்தபட்டாடைசாத்தித் தேய்வைமட டித்துததாம
முவந்தணிந்தாரம்பூட்டி யுற்றுநோர்கண்டோருள்ளங்
கவர்ந்தழசெறிப்பகைகைசெய் வினையினிலிங்ககைகண்டார்.

(இ-பொ-ளா)

மேலேயுயர்ந்த ஓர் கட்டுத்தறியைப்போன்ற பெரிய அப்பை நட்டு நடபமாகிய செந்நிறமுள்ள பட்டினுல் நெய்த பட்டுவஸ்திரத்தைத்தரித்து பரிமளம்பொருந்திய சந்தனத்தைப் பூசி மனமகிழ்ந்து வாசனைபொருந்திய புஷ்பமாலைகளைச்சூட்டி இரத்னபரணங்களையும் அலங்கரித்துப்பார்த்தவர்களுடைய மனதைக்கிரகித்து அழகொழுகத் தம் கைச்சாமர்த்தியத்தினுல் ஓர் சிவலிங்கமூர்த்தம உண்டுசெய்தார்கள் (எ-று) (௪௩)

ஒருவர்பின்னொருவராயங் கோடிவந்தரசேதேடு
மிருவர்மற்றெவருந்தேருச் சயம்புவந்தெளிதினித்தப்
பெருவனந்தனினினன்பிற் பிடியுண்டுபொன்பூங்கொன்றைத்
தருநிழலிருப்பக்கண்டேந் தம்பிரானருளிதென்னு,

(இ-பொ-ளா)

பின் ஒருவர்பின் ஒருவராய் அரசனிருக்குமிடத்தில் ஓடிவந்து மஹாராஜாவே தேடுகின்ற பிர்மா விஷ்ணுவென்னு மிருவரு மற்ற யாவருமே இவ்வண்ணமென்றறியாத சிவபிரான் தமது காருண்யத்தால் தோன்றி மிக இலேசாய் இந்தப் பெரியகாட்டில் தேவரீரது அன்பென்னும் வலையிற் கட்டுண்டு பொன்மயமான பூக்களையுடைய ஓர் கொன்றை மரநிழலில எழுந்தருளியிருக்க நாங்கள் பார்த்துவந்தோம இந்த அதிசயற்புதத்தை யோஜிக்குமிடத்துப பரமசிவன்றிருவருளேயாம் என்ற (எ-று) (௪௪)

ஆடுவாரயனின்றுரைத் தழுவுவாரங்குமிங்கு
மோடுவாரானந்தம்போ லுரைமொழிகுழறிக்காட்டிப்
பாடுவார்பாண்டிவேந்தைப பாவுவாபுளகப்போர்வை
மூடுவார்நயனநீருள மூழ்குவாராகிமொய்த்தார்.

(இ-பொ-ளா)

கூத்தாடுவார் பக்கத்திநின்றவர்களைக்காட்டித் தழுவிக்கொள்வார் அங்குமிங்கும் ஓடுவார் சிவானந்தானுபூதியைப பெற்றவர்கள்போலப் பேசும் வார்த்தைகள் தடமாறுவதுபோலக்காட்டிப் பாடுவார் பாண்டிய மஹாராஜாவைத்துதிப்பார புளகாங்கிதமாகிய போர்வையால் மூடப்பெறுவார் கண்களிலிருந்து ஒழுகும் ஜலத்தில் அமிழ்வார் இவ்வாறுய நெருங்கினார்கள் (எ-று) (௪௫

வழுதியுளுவகையிர்ப்பச் சயம்புவைவணங்கவுன்னும்
பொழுதிருகாமுந்தேர்ச்சித் துணைவர்கைபொருந்தப்பற்றப்
பழுதில்வெற்பசைந்தாலென்னப் பைப்பையநடந்துவண்டின்
றொழுதிரும்சடையிலிங்கஞ் சேணிடைத்தோன்றலோடும்,

(இ-பொ-ள)

பாண்டிய மஹாராஜாவுக்குச் சுவாமிதெரிசனஞ் செய்யவேண்டுமென்னுஞ் சந்தோஷமானது கைபிடித்திழுக்கத் தான் சிவலிங்கபெருமானை வணங்கவேண்டுமென்று உள்ளத்தில் நினைத்தபொழுது அக்குறிப்பறிந்து மந்திரிகள் தம் கைகளைநீட்டப் பிடித்துக்கொண்டு எழுந்து பெரிய ஓர் மலையானது மெல்லமெல்ல நடந்தாற்போல நடந்து வண்டுகள் மொய்க்கின்ற கொன்றைமாலையைத்தரித்த ஜடாமகுடத்தையுடைய சிவலிங்கமூர்த்தம் கொஞ்சம் தூரத்திலே தோன்றியமாத்திரத்தில் (எ-று) (சகூ)

பெரும்பெருக்கமுதைஞானப் பேரொளிப்பிழம்பைவேதச்
சுரும்புசூழ்ந்தாற்றுந்தேனைத் தூநறுங்கனியையெய்ப்பில்
விரும்பினர்க்குதவும்வைப்பை வித்திலாமுளையைமுக்கட்
கரும்பினைவேம்பின்வேந்தே காண்கெனக்காட்டினாரே.

(இ-பொ-ள)

மிகவும் பெருகிய அமிர்தவெள்ளம்போல்பவராயும் திரண்ட பெரிய ஞானப்பிரகாசசொரூபராயும் வேதங்களாகிய வண்டுகள் மொய்த்து இசைபாடுகின்ற ஆனந்தத்தேனையும் பரிசுத்தமான நறிய கனிவர்க்கமானவராயும் வறுமையாலிளைத்த காலத்தில் விரும்பினவர்களுக்குக் குறைவறக்கொடுக்கும் பொக்கிஷம்போன்றவராயும் விதையில்லாத முளையாயும் மூன்று கண்களையுடைய கரும்புபோல்பவராயும் உள்ள சிவலிங்கப்பெருமானை வேப்பமாலையைத்தரித்த பாண்டிய மஹாராஜாவே பார்க்கவேண்டும் என்று காட்டினார்கள் (எ-று) (சஎ)

காண்டலுங்கண்ணீர்வாரி கரைபுரண்டோடக்காவி
னீண்டகைகுவித்துப்பூண்ட நியதியைமுடித்துப்பின்ன
ராண்டகைமுகைவெணமூர லருந்திநீர்பருகியன்பு
மாண்டமெய்வருத்தநீங்கி மந்திரர்க்குரைப்பதானுன்,

(இ-பொ-ள)

தெரிசனஞ் செய்தமாத்திரத்தில் கண்களினின்றுமானந்தத்தாற்சொரிகின்ற நீராகிய வெள்ளமானது அளவுகடந்து பெருக்கெடுத்துப்பாய கற்பகச்சோலையைப்பார்க்கிலும் கொடுக்குந்தன்மையில் நீண்டகைகளைக்கூப்பி வணங்கித் தான்கொண்டிருந்த விரதத்தைமுடித்து அதன்பின் ஆண்தன்மையையுடைய பாண்டிய ம

ஹாராஜன் முல்லையரும்பையொத்த வெண்மையான அன்னத்தையுண்டு ஜலபானமுஞ்செய்து சரீரத்திலுண்டாயிருந்த வருத்தம் நீங்கித் தன்னிடத்தில் மெய்யன்புடையவர்களாகிய மந்திரிகளுக்குச் சொல்லுவாராயினர் (எ-று) (௬௫)

வாட்டிருங்கொடியகூற்றின்வாய்ப்படுமுயிரையின்னே
மீட்டிருந்தெனையாண்டமெய்ப்பாஞ்சுடர்தானிந்தக்
காட்டிருந்துறையக்கண்டுங்கண்ணிலானபோலவேகி
நாட்டிருந்துயிரையோம்பிநாட்கழிப்பதுவுநன்றே.

(இ-பொ-ரை.)

மிக்கவருத்தஞ்செய்கின்ற வன்கண்மையையுடைய இயமனிடமாய்ப்போகக்கூடிய என்னுயிரை இப்போதே மீளச்செய்து இங்கிருந்தென்னைத்தடுத்தாட்கொண்டருளிய உண்மையானபரஞ்சோதிசொரூபராகிய சிவலிங்கப்பெருமான் இக்கொடியகாட்டில் தனியேயெழுந்தருளியிருக்க நாம்பார்த்தும் கட்பொறியில்லாதகுருடனைப்போலப்போய் நமது நாட்டிலிருந்து உயிரைக்காத்து நாள் கழிப்பதுவும நல்லதா (எ-று) (௬௬)

## வேறு.

ஆதலினிச்செறிந்தபெருங்காடெறிந்துதிருநகர்கண்டரன்பொற்கோயில், காதலிற்கண்டிவணுறையச்சயம்புதிருவுளக்குறிப்புக்காண்பேனென்னுப், போதலுநதம்பெருமான்பின் போவார்போன்றெழுந்துமுகமபுலர்ந்துசாம்பி, நீதியமைச்சர்கணமுங்கி நின்றுநின்றங்கொளிந்தாரந்நெடியகானுள்.

(இ-பொ-ரை)

ஆதலினுலிந்தமரங்கள் நெருங்கியபெரிய காட்டை வெட்டி அழகிய நகரம் உண்டாக்கி அதில் சிவபெருமான் எழுந்தருளுவதற்குப்பொன்மயமான ஆலயமுஞ்செய்து நாமும் இவடத்திலேயே வசிப்பதற்கு சிவபெருமானது திருவுள்ளக்குறிப்பு எப்படியிருக்கிறது பார்ப்போமென்று மஹாராஜன் எழுந்துபோக அதைகண்டுமனுநீதிதருமத்திற் பிறழாத நன்னெறியினர்களாகிய மந்திரிமார்தாமுமதமது யஜமானன் பின்னே போகிறவர்களைப்போல எழுந்து எனசெய்வோம் நாம செய்தது தந்திரமாச்சுதேயென்று முகம் பொலிவழிந்து ஒடுங்கித்சரீரம் நடுக்கமுற்று ஒவ்வொருவராக நின்று நின்று அந்தப்பெரியகாட்டில் ஒளித்துக்கொண்டார்கள (எ-று) (௬௭)

தனித்தனிபோயவர்மறையச் சிலர்தொடரப்போயமேத்துச்சயம்புமூர்த்த, குனித்தசேவடிதொழலு மாப்புவடிவாயிருந்த கொன்கைபாராப். பனித்தவளமதிவேந்தன் முன்பிடித்தசிவவிரதயங்க

நோக்கி, மனித்தவுடலெடுத்தபயன்முதலெலாம்போய்முடிந்ததென வருந்தினானால்.

(இ-பொ-ள)

அம்மந்திரிகளிவ்வாறு ஒவ்வொருவராய் ஒளித்துக்கொள்ளச் சிலர்மாத்திரம் தம்பின்றொடர்ந்துவர அச்சிவலிங்கப்பெருமான் எழுந்தருளியிருந்த இடத்தையடைந்து ஸ்ரீசுயம்புலிங்கமூர்த்தியின் ஆடியபாதத்தைவணங்கவும் அது முன்னிருந்தது போலில்லாது ஆப்புருவாயிருந்ததை யறிந்து குளிர்ந்தவெண்ணிறம் வாய்ந்த சந்திரகுலதிலகரான அச்சோழாந்தக பாண்டிய மஹாராஜன் தான் இதுபரியந்தம் உறுதியாகக்கைக்கொண்டிருந்த சிவவிரதத்திற்குத்தவறுதல் வந்ததைப்பார்த்து இத்தேகமெடுத்ததனாலாகிய பிரயோஜனமானது அடியோடும் விருதாவாய்ப்போச்சுதே யென்று துக்கித்தான் (எ-று) (௫௧)

என்செய்தார்கற்பனையீதிருந்தவாறென்னேமற்றிந்தமாய, முன்செய்தார்கதையுளுங்கேட்டிலனந்தோவென்னமொழி மொழிகேனென்னாப், பொன்செய்தாரவன்வெகுளிமீக்கொளக்கண்சிவந்துரப்பிப்புலிபோற்சீறி, மின்செய்வாளுறைகழித்துமந்திரர்ப்பார்த்தலுங்காணான் விசாரத்தாழ்ந்தான்.

(இ-பொ-ள)

அழகியமாலையையணிந்த பாண்டியமஹாராஜன் என்ன ஆச்சரியமான கற்பனையைச்செய்தார்கள் இது இருந்தபடி என்னென்று சொல்வேன் இந்தமாயாஜாலத்தை முன்செய்திருக்கும் மஹான்களுடைய சரித்திரங்களிலுங் கூட இப்படி நான் கேட்டதில்லை ஐயோஎன்னவார்த்தைசொல்லப்போகிறேன் என்று கோபம்அதிகரிக்க கண்களிரண்டும் அக்கினிமயமாய் சிவந்து வாயாலதட்டிப்புலிபோல் மிச்சகோபமடைந்து பிரகாசிக்கின்ற வாளாயுதத்தைஉறையினின்றுநீக்கிமந்திரிமாரைப்பார்க்கவுங்காணாதவராகித் துக்கசாகரத்தில மிழ்த்தினார் (எ-று) (௫௨)

கொய்யவோபசிமுளைத்த குடரினைப்பின்பிரித்துணர்தல் கூடாநெஞ்சைச், செய்யவோபிளவுவிழித்திருந்தும் வெறுங்குருட்டைந்துதெரியாதாட்டம், வெய்யவாளைமுனைத்தொடவோ வென்றுபல நினைந்துடலை வெறுத்துமாழ்கி, ஐயயவோவினைவலியீதம்மவோ வெனப்பொருமி யரற்றினானால்.

இ-பொ-ள.

கொடிய பசியுண்டாகிய குடலைப்பிடுங்கிவிடட்டுமோ அவ்வாறு பசியுண்டானாலும் பின்னரதனைப் பகுத்துணரக்கூடாத மனதைப் பிளந்துவிடட்டுமோ அவ்வாறு மனந்தெரிந்துகொள்ளாவிட்

டாலும் கண்களிரண்டும் விழித்துக்கொண்டிருந்தும் பார்த்தவ
ன் யதார்த்தத்தையறியாது குருடுபோன்றிருந்த கண்களை யிந்
கொடியவாளாயுதத்தின் நுனியால் தோண்டிப்போட்டுமா எ
று இப்படிப்பலவாறாக எண்ணியெண்ணி யித்தேகத்தைவெறுத்
துன்பமடைந்து இந்தவிரத மிப்படித்தவறிப்போகத்தக்க என்
கொடியவினை செய்தேனோ ஐயையோ என்று விம்மிவிம்மிக்கத
யழுதார் (எ-று) ஆல்-அசை (ரு

தரிப்பரோபிடித்தநிர மஞ்சிறிது வழுவினுமெய் தடிந்தவ்வேலி
மரிப்டரோமெய்யடியா ரித்துணைப்போ துடல்சுமந்து வாளாநின்
ற், சிரிப்பரோயிவனடியார்போனடிக்குங்கள்வனெனத் தெளிவ
யா, வரிப்பதேயவர்க்காணிலெனத்துணிந்துள் வாய்மையொன்
நவில்தானுன்,

(இ-பொ-ரை)

தானெடுத்துக்கொண்ட நியமமானது கிஞ்சித்துத்தவறு
யானாலும் வைராக்கியபுருஷாள் உயிரைவைத்துக்கொண்டு இ
பாரா சரீரத்தைத் துண்டந்துண்டமாய் வெட்டி அந்தக்ஷண
யிறந்துவிடுவார்களே அப்படியிருக்க நான் விரதபங்கமானதை
தெரிந்தும் இவ்வளவு நேரமும் இச்சரீரத்தை வைத்துக்கொண்
வீணேநின்றால் பார்ப்பவர்கள் கைகொட்டி நகைக்கமாட்டார்
ளா இவன் அடியன் அடியனென்று வேடம்பூண்டு பார்ப்பவர்க
க்கு அனபனபோல் நடிக்குந் திருடனென்று நனறாய்த்தெரிந்
கொள்வாரோ ஆதலால் நான்கொண்ட விரதத்திற்குத தவறுசெ
த அம்மந்திரிமானைப்பார்த்தால் பயப்படுவதேயாமென்று துணி
து தன்னுள்ளத்திற்றோனறிய ஓர் உண்மையான வசனத்தை
சொல்வாராயினர் (எ-று) (ரு

யானெடுத்தசிவவிரதப்பெரும்பத்தி நெறிபிறழாதிந்நாட்கா
மூனெடுத்தபயனடையச சயம்புதெரிசனஞ்செய்ததுண்டேலிந்
த, தேனெடுத்தமலரிதழியடியினுப்பிதுகுறியாத் திகழ்சவனறே
கூனெடுத்த வாள்கொடுநன் மிடறரிந்துமாய்வனெனக் கூறே
யும்.

இ-பொ-ரை

தான் உறுதியாகக்கைக்கொண்ட சிவவிரதத்தின் பெரிய ப
தியானது இதுவரையும் தவறுதலின்றி இச்சரீரமெடுத்ததனுலா
ய மெய்ப்பயனையடையச் சுயம்புலிங்கமூர்த்த தெரிசனஞ்செய்
து சத்யமாக இருக்கும்பக்ஷத்தில் இந்தத்தேன்பொருந்திய புஷ்
ங்களையுடைய இக்கொன்றைமரத்தடியிலுள்ள இந்த ஆப்புக்
னே உண்மையான சிவலிங்கமாக விளங்கக்கடவது அப்படியாக
தாயின் வளைந்த இவ்வாளாயுதத்தால் என் கழுத்தையறுததுக்கொ
ண்டு இறப்பேனென்று சொன்னமாத்திரத்தில் (எ-று) (ரு

வ்வுரைபோய்த்திருச்செவியினூறத்ததனுந்தரித்திலர்வந்தானே
றைய, ரிவ்வுரைவான்மொழியானினறியம்புவாரெமக்கினியாயெ
பாலன்பா, செவ்வியநன்மதிமாபிற் றெனனர்சிகாமணியேநம்
சங்கோலவேந்தே, யெளவிய தீர்விரதநெறியிழுக்கிலசோழாந்
ஞமாசகேணமோ,

(இ-பொ-ள)

அரசன்வருத்தமாகக்கூறிய அவ்வார்த்தையானது திருச்செ
யிற்சென்றேறுதலு ஒரிறைப்போதேனுந்தாமதிக்காமல் இ-
வாகனத்தில எழுந்தருளிவிளங்கும் சாக்ஷாத் சிவபெருமான்
மலேவந்து நின்று இவ்வார்த்தையைஅசரீரியாகச்சொல்லுகின்
ர் எமக்கினியவனே எம்மிடத்திலன்புள்ளவனே செப்பமாகிய
ந்திரகுலத்திலவதரித்த பாண்டியர்களுள் சிரோரத்தினம் போ
றவனே மனுநீதியின்படி செங்கோலசெலுத்தமஹாராஜாவே
ற்றமற்ற சிவவிரதத்திற்றவறுதலில்லாத சோழாந்தகபாண்டிய
ஹாராஜாவே கேட்பாயாக (எ-று) (ருசு)

நின்னுடையபேரன்பாலியாம் பிடியுண்டலர்கடுக்கை நிழலி
லாதேம், தொன்னிலங்கீழேழ்நுவி யாப்புடையவீசனெனத்தோ
றினைமபாற், பொன்னனையாடனைக்குரவங்கமழ்குழலாளென
றுவிப்பூசிப்பாய்நீ, யெனனுமம்மொழிவானின்றிழியமுதமெ
ச்செவிபுக்கினிபக்கேட்டான.

(இ-பொ-ள)

உன்னுடையபெரியபக்தியென்னும் வலேயில்கட்டுண்டுபுஷ்ப
களையுடைய கொன்றைமரநிழலில்ல பழையபூமிக்குக்கீழேயுள்
பிலத்துவாரத்தினின்றும் ஏழுலகங்களேயுந்தழுவி திருவாப்பு
டையீசனென்னுந் திருநாமம்பூண்டு இவ்வாப்பிலேயே தோன்றி
ளைகினும். ஆதலால நமதுகுப்பகத்திலே பொன்போலும்
அழகியதிருமேனியையுடைய அம்பிகையைய குரவங்கமழ் குழலம்
மையென்று ஸ்தாபித்து நீ பூசிப்பாயாகவென்ற மந்திரத்தில்
அவ்வார்த்தையானது தேவலோகத்தினின்றும பொழிகின்ற தே
வாமிர்தமம்பாலதகனது காதாகியவாயில் புகுந்து மாதுரியத்தை
கொடுக்கச் சந்தோஷமாய்க்கேட்டார் (எ-று) (ருஎ)

வேறு.

நிக்கினன்றுயரமன்புநீடினன்கரங்கலசென்னி
தாங்கினன்சிவபிரானைத்தழுவினனபுயங்களோங்கி
வீங்கினனாடிப்பாடிவிம்மினனவிம்மிக்கண்ணீர்
தூங்கினனேடியோடிவனமெலாந்துகைத்தான்றுள்ளி

(இ-பொ-ள)

உடனே பாண்டிய மஹாராஜன் தானடைந்திருந்த துக்கத்தினின்று நீங்கினார் பேரன்பையுடையவராயினார் சிரசிலே யிரண்டு கைகளையுங்கூப்பினார் ஆப்பினின்றுந்தோன்றிய சிவலிங்கப்பெருமானை யாராமையால் கைகளாரத்தழுவிக்கொண்டார் இரண்டு புஜங்களும் சந்தோஷப்பெருக்கால் மலைபோலுயர்ந்து பருத்தார் ஆனந்தக்கூத்தாடியும் நாவாரத்துதித்தும் பூரித்தார் பூரித்தலோடும் கண்களினின்றும் ஆனந்தபாஷ்பம் சொரியநின்றார் அக்காடு முழுதிலும் ஓடியோடித்துள்ளிக்குதித்தும் உழக்கினார் (எ-று) ௫௮

பார்த்திபன்சிவன்மேல்வைத்தபத்தியுமவன்மேற்கொன்றைத்
தார்த்தனிமுதருள்வைத்ததாழ்விலாப்பேருளுநோக்கி
யார்த்தனர்வானோரைந்துகருவியுமார்ப்பமெனப்பூத்
தூர்த்தனர்தென்னர்கீர்த்திதுதித்தனரிடைவிடாமல்.

(இ-பொ-ள)

பின் பாண்டிய மஹாராஜன் சிவபெருமான்மீது வைத்திருக்கிற பேரன்பையும் அப்பாண்டிய மஹாராஜாவின்மீது கொன்றைமாலையைத்தரித்த ஜடாமகுடத்தையுடைய ஒப்பற்ற சிவபிரான் வைத்திருக்கிற குறைவில்லாத பேரருளையும்பார்த்து ஆச்சரியமடைந்து தேவர்கள் துந்துபிவாத்தியங்களைந்தையு முழக்கினார்கள் புஷ்பமாரிபொழிந்தார்கள் அப்பாண்டியமஹாராஜாவின் கீர்த்தியை ஓயாமல் துதித்தார்கள் (எ-று) தான்-அசை (௫௯)

தான்கரைந்தாகியுள்ளந்தகும்பமானந்தவாரி
வான்கரையேறுதங்கவழுக்கிவீழ்ந்தெழுந்துமீண்டுஞ்
சோன்கரையிவர்ந்துசெவிகொண்கரைப்பரவும்வேத
நான்கரைவணங்கியீறினற்றுதிமொழிந்துபின்னும்.

(இ-பொ-ள)

பாண்டிய மஹாராஜன் உள்ளமானது அழலிடைப்பட்ட வெண்ணெய்போலக் கரைந்துருகிப் பொங்கிவழிகின்ற பேரானந்தப் பெருங்கடலினது கரைகடவாதவராய் அதனிடத்தே வழுக்கிவிழுந்து எழுந்திருந்து மீண்டும் ஒருவாறு கரையேறி உமாசகியனது நாயகராகியும் நான்குவேதங்களையுந் திருவாய்மலர்ந்தருளியவராயுமுள்ள ஸ்ரீசிவபெருமானைத்தொழுது அளவில்லாத ஸ்தோத்திரஞ்செய்து பின்னும் (எ-று) (௬௰)

வளைமிசையணிகைச்சிதைகுவித்தமண்மிசைநெல்வேலிக்
கிளைமிசைமுளைத்தல்காத்தற்கடனங்கணணிற்காண
முளைமிசைமுளைத்தாயானெய்செய்முற்றவப்பயனியாதோ
வளைமிசையவனுந்தேறுமையனேயனைபர்வாழ்வே.

(இ-பொ-ள)

வெண்ணெயையுண்ட மஹாவிஷ்ணுவினாலும் அறியப்படாத ஐயனே மெய்யன்பர்களுடைய பெருவாழ்வாயிருப்பவனே கைகளில் வளையலையணிந்த சீதாபிராட்டியால் குவிக்கப்பெற்ற மண்ணினிடமாகவும் திருநெல்வேலி என்ற க்ஷேத்திரத்தில் மூங்கிலினிடமாகவும் தேவரீர் உற்பவித்ததைக் காதினாலேதான் கேட்டோம் இப்போது பிரத்தியக்ஷமாய்ப்பார்க்கவே யிந்த ஆப்பினிடமாகத்திருவவதாரஞ் செய்தருளினுய் ஆதலால் யான் பூர்வஜென்மங்களில் என்னதவஞ்செய்தேனே (எ-று) (௬௧)

அடியனேனினைத்தவண்ணமருளுருவாகியிந்தக்
கடிகமழ்வனத்தும்வந்துகாக்ஷிநீகொடுத்தவாற்றாற்
படியினுமுளையவானப்பரப்பினுமுளையிக்கொன்றை
யடியினுமுளையென்போல்வாரகத்தினுமுளைநீயையா.

(இ-பொ-ள)

தேவரீர் நாயேன் நினைத்தவண்ணமே திருவருளே திருமேனியாகக்கொண்டு இந்த வாசனைவீசுகின்ற காட்டினிடமாகவும் எழுந்தருளிவந்து தெரிசனங்கொடுத்ததன்மையால் தேவரீர் இப்பூமியிலும் இருக்கின்றீர் அந்த விசாலமான வானுலகத்தினுமிருக்கின்றீர் இந்தக் கொன்றைவிருக்ஷத்தடியினுமிருக்கின்றீர் என்போலியர் இருதயத்தினுமிருக்கின்றீர் சுவாமி (எ-று) (௬௨)

தெளியராவணையிற்றுஞ்சு நீலமேனியற்குஞ்செந்தேன்
றுளியருக்கமலநாபித் தோன்றற்குமமுதுண்வாழ்க்கைக்
களியருதவர்க்குநாளுங் கனவினுமரியாயன்பர்க
கெளியையாய்வருவாயென்ப ததன்னளவாயிற்றன்றே.

(இ-பொ-ள)

தெளிக்கின்ற ஆதிசேஷனுகிய சயனத்தின்மீது நித்திரைசெய்யும் நீலநிறத்திருமேனியையுடைய மஹாவிஷ்ணுவுக்கும் செவ்விய தேன்றுளிநீங்காத உந்திக்கமலத்தினின்றும் உற்பவித்த பெருமையிற்சிறந்த பிரமதேவருக்கும் அமிர்தத்தையே உண்டு வாழ்தலாகிய சந்தோஷத்தையுடைய மற்றைய தேவர்களுக்கும் எப்போதும் சொப்பனத்தினுங் காண்டற்கரியவனே தேவரீரை சதாதியானஞ்செய்துகொண்டிருக்கும் மெய்யன்பர்களுக்கு மிக இலேசாக நினைத்தபோதே எழுந்தருளிவந்து காக்ஷி கொடுப்பாயென்று சொல்வது இப்போது என்னளவில் நன்றாய் விளங்கிற்றல்லவா (எ-று) (௬௩)

ஒற்றையாயெனையித்தூரமீர்த்திடுமழைக்கும்வெம்மை
யிற்றைநாட்காறுந்தோன்றாதின்றுதோன்றியபசிக்கு
முற்றையாநின்னைக்காண முடித்தமந்திரர்க்குஞ்செய்யுங்
கற்றையஞ்சடையாய்கைமாறெவனெனக்கழறிநின்றான்.

(இ-பொ-ரை)

கற்றையாகக்கட்டிய அழகிய ஜடையையுடைய ஏ சம்போ தனியாக என்னை யிவ்வளவுதூரம் இழுத்துக்கொண்டுவந்த மானுக்கும் இன்றுதினம்வரை உண்டாகாமல் இன்றைக்கு நூதனமாக உண்டான கொடிய உதராக்கினிக்கும் தேவரீர் திருவுருவமுழுவதுங்கண்டு யான் தெரிசிக்கும்படி செய்த மந்திரிகளுக்கும் என்னாற் செய்யக்கூடிய கைம்மாறு என்ன இருக்கிறது என்று சொல்லிக் கொண்டு நின்றார் (எ-று)

(௬௪)

வேறு.

ஒழியாதபேருவகையுள்ளூறிவருமிதனை
யழியாதமதிநூலோர்க்கறிவிப்பானுழையோராற்
கழியாதபெருமபயந்தீர்த்தழைத்திடலுங்கடிதேகிப்
பழியாதபுகழ்வேந்தனபாதமிசைப்பணிந்தார்கள்.

(இ-பொ-ரை)

நீங்காத பெரியசந்தோஷமானது உள்ளத்திலூற்றெடுத்து வருகின்ற இவ்வாச்சரியத்தைக் கெடாபுத்திநுட்பத்தாற் கற்றுவல்ல அம்மந்திரிகளுக்குத் தெரிவிக்கும்பொருட்டுப் பக்கத்திலிருந்த ஏவலாளிகளைப்பார்த்து நீங்கள் தீராத மிக்க அம்மந்திரிமார் கொண்டிருக்கும் அச்சத்தைத்தீர்த்து அழைத்துவாருங்களென்றனுப்பவும் அவர்களுமவ்வாறே துரிதமாய்ச்சென்று அழைக்க அம்மந்திரிகளும் வந்து யாவராலும பழிக்கப்படாத கீர்த்தியையுடைய பாண்டியமஹாராஜன் பாதத்தில்நமஸ்கரித்து நின்றார்கள்(எ-று) ௬௫

அன்னவனாமுகநோக்கியமைச்சீர்நும்வினையத்தா
லென்னையுயிர்மீட்பான்வித்தில்லாதமுளையென்முன்
சொன்னபொருள்குறிக்கொண்டுதோன்றியவாபாருமெனத்
தென்னர்பிரான்மொழிந்திடலுஞ்சென்றிறைஞ்சிநோக்கினார்.

(இ-பொ-ரை)

நமஸ்கரித்த மந்திரிமாரை யவர்கள் முகத்தைப்பார்த்து ஏ மந்திரிகளே நீங்கள்செய்த தந்திரத்தால் எனது உயிரை மீட்கும் வண்ணம் விதையில்லாத முளையானது என்முன்னே பிரத்தியக்ஷமாக யான் சொல்லியதின்பொருளையே குறியாகக்கொண்டு உற்பத்தியாயிருப்பதைப் பாருங்களென்று பாண்டியர்களுட் சிறந்த

சோமசுந்தரபாண்டிய மஹாராஜன் சொல்லியவளவில் மந்திரிமாரும் அதிசீக்கிரமாக அங்கேபோய்ப் பார்த்து வணங்கினார்கள் (எ-று) (சுசு)

எவ்வுருவினியாரொருவரினைந்துள்குவாருளத்தி
லவ்வுருவதாய்த்தோன்றியருள்கொடுக்கும்புண்ணியனென்
றெவ்வுலகுந்துணிபொருளேயின்றுவெளிசெய்வதற்கோ
வெவ்வினையினேங்குறித்தவெளிற்றறிவாய்நின்றனையே.

(இ-பொ-ரை)

யாராயினும் தங்கள் மனதிலிசைவாய் எந்தத்திருவுருவத்தைத் தியானஞ்செய்கிறார்களோ அவர்களுக்கு அந்தத்திருவுருவமாகவே யெழுந்தருளிவந்து திருவருள்செய்யும் புண்ணியசொரூபி யென்று எவ்வுலகிலுள்ளவர்களும் நிச்சயிக்கத்தக்க செய்தியை யிப்போது யாவரும் சந்தேகமறத் தெரிந்துகொள்வதற்குத்தானோ கொடியவினைகளையுடைய நாயேங்கள்செய்த வெளிப்படையான சிற்றறிவினளவாக இருந்தாய் எ-று ஏ-அசை (சுஎ)

செம்மைநெறியமைச்சுரிமைசெய்வினையொன்றறியாத
வெம்மைவினைப்பழிநின்றுமெடுத்தாண்டெங்கோமகற்கு
மும்மையுந்தந்துய்யக்கொண்முதல்வாமுப்பரம்பொருளே
தம்மையுணர்வார்க்கமுதேசயசயவென்றேத்தினார்.

(இ-பொ-ரை)

செவ்விய நன்மார்க்கத்தையுடைய மந்திரித்தொழிலினுரிய குணங்களிலொன்றையேனு நன்றாய்த்தெரிந்துகொள்ளாத நாயினுங்கடையராகிய அடியேங்களையும் தீவினையாகிய பழியினின்றும் வேறாக எடுத்துத் தடுத்தாட்கொண்டருளி எமது மஹாராஜாவுக்கும் மும்மைப்பயனையுந் தந்தருளிப் பிழைக்கும்வண்ணம் அடிமைகொண்ட முழுமுதற்கடவுளே மேன்மைபொருந்திய திரிமூர்த்திபரனும் விளங்குகின்றவரே தேவரீருண்மைகளை யுள்ளவாறுணர்பவர்கட்குத் தேவாமிர்தமாகிச் சுகத்தைக் கொடுப்பவரே ஜயஜய என்று துதித்தார்கள் (எ-று) (சுஅ)

பொருமானைமுதலடும்போர்வேட்டையினிற்புகுந்தமதி
மருமானைமுறைமுறைபோய்வணங்கியினிதிவ்வனத்தி
னொருமானைத்தொடர்ந்தேவந்துள்ளன்பின்வலைவளைத்துப்
பெருமானைப்பிடித்தனையேயெனமகிழ்ந்துபேசினார்

இ-பொ-ரை

பின் ஆரம்பத்திலே பொருதற்குரிய மானைக்கொல்லுகின்ற யுத்தமாகிய வேட்டைத்தொழிலிற்சென்ற சந்திரகுலதிலகராகிய

சோழாந்தக பாண்டிய மஹாராஜனை ஒவ்வொருவராகக் கிரமமாய் நமஸ்கரித்து இனிதாக இக்காட்டினிடத்து ஒருமானைப் பின்றொடர்ந்தோடிவந்து பிடித்ததுமன்றி உள்ளத்திலுண்டாகும் அன்பாகிய வலையை வீசியெறிந்து ஒருவராலும் பிடியுண்ணாத சிவபெருமானையும் பிடித்தீரோ என்று மனமகிழ்ச்சியுடன் துதித்தார்கள் (எ-று) (௬௯)

கண்ணுதல்வானவனடியார்கணத்துளிவனொருவனென
வெண்ணுதல்செய்தீர்மாயமியற்றினீரலீரிருமை
நண்ணியதும்மாலெனக்குநான்செயுங்கைமாறிலதென்
றுண்ணிலவுமுகமனுரைத்தொன்றுரைக்குமனுவேந்தன்,

(இ-பொ-ரை)

இவ்வாறு துதித்த மந்திரிகளைப்பார்த்து மனுநீதி தர்மசாஸ்திரப்பிரகாரம் செங்கோல்செலுத்தும் சோழாந்தகபாண்டியமஹாராஜன் ஏ மந்திரிகளே நீங்கள் நெற்றியிலக்கினிநேத்திரத்தையுடைய மஹாதேவனாகிய சிவபெருமானது மெய்யடியார்கூட்டத்துள் இவனும் ஒருவனென்று யாவரும் நினைக்குமாறு செய்தீர்களேயன்றி மோசமானகாரியஞ்செய்தவர்களேயல்ல இஃதன்றியும் உங்களாலெனக்கு இகபரசாதகமுங்கிடைத்தது ஆதலால் அதற்கு நானுங்களுக்கு செய்யக்கூடியப்பிரதியுபகாரம் ஒன்றுமில்லையென்று உள்ளத்திற் பிரகாசிக்கும் பேரானந்தத்தால் அனேகம் பிரியவசனங்களைச்சொல்லிப் பின்னரும் ஓர் வார்த்தைசொல்வார் (எ-று) (௭௰)

வேறு.

கால்புகத்திகைக்குங் கடுவனமெறிந்து கடிநகர்கண்டுநீள்சிற்ப, நூல்புகச்சிவனாலயம்வகுப்பீர்நுண்மதியீரெனவவருங், கோல்புகத்துளைக்கொள் மாநிகர்யாரைக் கொடும்பணைமரநிரையிருப்பி, நூல்வகுத்தனைய வாக்கையமள்ள ராலெறிந்தவண்மிசைதிருத்தி.

(இ-பொ-ரை)

நுட்பமானபுத்திமான்களாகிய ஏ மந்திரிகளே எங்கும் நுழைந்து செல்லக்கூடிய காற்றும் சென்றியங்குதற்கு முடியாது மயங்குகின்ற நெருங்கிய இக்காடுகளைவெட்டி அழகியபட்டணமாகச்செய்து சிறந்த சிற்பசாஸ்திரோக்தமாய்ச்சிவபெருமானெழுந்தருளிவிளங்கும் திருக்கோயில்முதலானவைகளைச்செய்வீர்களாக என்று கட்டளையிட அம்மந்திரிமாரும் இராமபாணஞ்சென்றமாத்திரத்தில் நிமிர்ந்து துளையுண்டமராமரத்தை யொத்தபருத்த அனையினையும் வளைவான கிளைகளையுமுடைய வரிசையாயுள்ள மரங்களையெல்லாம் யிரும்பாற்செய்ததற் கொத்த சரீரத்தையு

டைய வேலையாட்களால் வெட்டச்செய்து அவ்வெட்டிய இடங்களி லுள்ளமேடு பள்ளங்களையெல்லாம் சமஞ்செய்து (எ-று) (எக)

கிடங்கர்சூழிஞ்சிகோபுரமறுகுசேழ்கிளர்மனைகள்செய்குன்ற, நடங்குலவரங்கங்கலைபயில்கழகநற்றவரிருக்கைநான்மறையோ,ரிடங்கவினரசர்வணிகர்பின்னவர்மற்றிழிந்தவுமுயர்ந்தவும்புணர்ந்து, ளடங்கியவருணத்தவரிடவகைசெய்தணிநகரமைத்தனர் பின்னர்.

(இ-பொ-ரை)

அகழியும் அதையடுத்து தாற்பக்கமுஞ்சூழ்ந்த மதில்களும் கோபுரங்களும் வீதிகளும் நல்லநிறம்விளங்கும் வீடுகளும் கட்டு மலைகளும் நடனசபைகளும் சாஸ்திராப்பியாசம் செய்யும் கல்வி விச்சாலைகளும் நல்லதவசிகளிருக்க ஆச்சிரமரங்களும் நான்காகிய வேதங்களைத்தியானஞ்செய்யும் பிராமணர்களுக்குஅக்கிராரங்களும் அழகிய க்ஷத்திரியர் வைசியர் சூத்திரர் இன்னும்தாழ்ந்தவரும் உயர்ந்தவருங்கூடிப்பிறந்தவர்களாகிய மேற்கூறிய வகைக்குள்ளடங்கிய ஜாதியர்களாகியஅநுலோமர் முதலியோருக்குத்தக்க இடங்களும்வகுத்து அலங்காரமாய் நகரமுண்டுசெய்ததன் பின்னர் (எ-று) (எஉ)

இழிந்தவுமுயர்ந்தவுமான வருணமாவது உயர்குலத்தானும் இழிகுலப்பெண்ணுங் கூடிப்பெற்ற பிள்ளையாகிய அநுலோமன் உயர்குலப்பெண்ணும் இழிகுலத்தானும் கூடிப்பெற்றபிள்ளையான பிரதிலோமன் அநுலோமத்தானும் பிரதிலோமப்பெண்ணுங் கூடிப்பெற்ற பிள்ளையான அந்தராளன் அநுலோமப் பெண்ணும் பிரதிலோமத்தானுங் கூடிப்பெற்றபிள்ளையான விராத்தியன என்பதாம் இன்னும் இவற்றை விருப்பிற் பெருகுமாதலால் இவற்றின்விரிவை ஜாதிசங்கிரக நூலிற்காண்க.

அங்கணன்பரமனுகமவளவையாற்சினகரமெடுத்தமைச்சர், திங்கணன்மரபின்முதலடிதொழுதுதிருநகராலயஞ்செய்தே, நங்கணன்புடையாயெனவவருடன்போய் நோக்கியுண்மகிழ்ந்துநன்னுதவிற், செங்கணன்பூசைசெய்வதற்காதிசைவரையழைத்தனன்றென்னன்.

(இ-பொ-ரை)

மந்திரிமார் அழகியகண்களையுடைய சிவபெருமான் ஆன்மாக்கள் பொருட்டு அருளிச்செய்த ஆகமப்பிரமாணத்தால் திருக்கோவில் முதலியவைகளைச்செய்து நல்லசந்திரகுலத்திலவதரித்த முதல்வராகிய சோழாந்தகபாண்டியமஹாராஜவின் பாதங்களில்நமஸ்கரித்து எழுந்து எங்களிடத்தில் மிக்க அன்புடைய மஹாராஜாவே சமூகத்தன் ஆக்ஞைப்படிஅழகிய நகரமும் திருக்கோவில்முதலா

னதும் செய்துமுடித்தேம் என்று விண்ணப்பஞ்செய்ய அதகேட்ட அரசன் அம்மந்திரிமாருடன் சென்றுபார்த்து மனதில்மிகச்சந்தோஷமடைந்து நல்லநெற்றியில் சிவந்த அக்கினிநேத்திரத்தையுடைய பரமசிவனைப்பூசிப்பதற்கு ஆதிசைவப்பிராமணர்களை யழைத்தார் (எ-று) (௭௩)

விசிலழிச்சிலனைச்சிவப்பரம்பரையைவிரும்பிநற்பதிட்டைசெய்தவிர்செங், கதிர்முதற்சண்டவரைப்பரிவாரக்கடவுளர்க்குறையுள்சூழ்கண்டு, புதியதேர்விழாக்கொண் மூர்த்தியும்வகுத்துப்பொன்முடிமணிக்குழையார, நிதிவளையாதி பலபணியுதவிநித்தநைமித்திகநடத்தா.

(இ-பொ-ரை)

பின்விதிவத்தாகச் சிவலிங்கப்பெருமானையும் மேலான நன்மையைக்கொடுக்கும் பராசக்தியையும் விருப்பத்தோடும் சுகமாய்ப்பிரதிஷ்டைசெய்து பிரகாசிக்கின்ற செவ்வியசூரியன்முதல் சண்டேசுரனிறுதியாகக்கூறிய பரிவாரதேவதைகளுக்கு சுற்றிலும் வீற்றிருக்க இடமுங்கட்டுவித்து புதிதாய் இரதத்தில் ஆரோகணமாகும் உற்சவமூர்த்திகளையும்செய்து பொன்மயமாகியகிரீடங்கள் இரத்தன குண்டலங்கள் இரத்தினஹாரம் முத்தாரங்கள் வளையல்கள் பொக்கிஷமாகிய இவற்றையுமுடித்து நித்தியபூஜைநைமித்திகபூஜைகளையு நடத்தி (எ-று) (௭௪)

காதிகாதலன்முன் றருகடலிதெனுங்காட்சியதொருபெருங்குளங்கண், டேதமில்சாலிவிளைநிலம்பிறவுமியற்றியாப்புடையநாதர்க்கு, நீதிநூலறிவின்மறையவர்தமக்கு நேர்பகிர்ந்தளித்தனன்சிவனை, தாதிகாரணப்பேர்தழுவியநகருமாப்பனூராயினதன்றே.

(இ-பொ-ரை.)

முற்காலத்தில் காதிமஹாராஜாவின் புத்திரனாகிய விஸ்வாமித்திரமஹரிஷியால் உண்டாக்கப்பெற்ற சமுத்திரமேயிது என்று சொல்லுந்தோற்றத்தையுடையதான ஒருபெரியதடாகத்தை உண்டாக்கிக்குற்றமற்ற நெல்விளையும் நன்செய்நிலங்களும் மற்றையவைகளையுஞ்செய்து திருவாப்புடையீசருக்கும் நியாயமான சாஸ்திரங்களைக்கற்ற அறிவின்மேம்பட்ட பிராமணர்களுக்கும் சரியாகபாகஞ்செய்துகொடுத்தார் திருவாப்புடையாரென்னும சிவபிரானது முதன்மையான காரணத்தாலுண்டாகிய பெயரைக்கலந்து அவ்வூரும் ஆப்பனூரென்றாயிற்று (எ-று) அன்று ஏ-அசை (௭௫)

விஸ்வாமித்திர மஹரிஷி வசிஷ்ட மஹரிஷியோடு முரணித்தென்றிசையிலிருந்து தபசுசெய்யுங்கால் திரிசங்கு மஹாராஜன் தனகுருவாகிய வசிஷ்டமஹரிஷியிடத்தில்வந்து வணங்கி சுவாமீ இ

ந்தச்சரீரத்தோடும் சுவர்க்கஞ்சேரக் கிருபைசெய்யவேண்டுமென்று பிரார்த்திக்க மஹரிஷி அது முடியாதென்றுகூற அரசன் ஆனல் வேறே யார்மூலத்திலாவது பெற்றுக்கொள்ளலாமா என்றுகேட்க மஹரிஷி நீ சண்டாளனுகக்கடவாயென்று சபிக்க அவ்வாறே சண்டாளத்துவமடைந்து காட்டில் திரியுங்காலத்தில் விஸ்வாமித்திரரைப்பார்த்து வணங்க விஸ்வாமித்திரர் நீர் யாரென்றுவினவ உடனே திரிசங்குமஹாராஜன் நடந்த சங்கதிகளை ஆகியோடந்தமாகத்தெரிவிக்க விஸ்வாமித்திரர் அப்படியானல் நான் உன்னையிந்த சரீரத்தோடே சுவர்க்கத்துக்கனுப்புகிறேன் என்று சொல்லியனுப்பவும் வசிஷ்டமஹரிஷியினுடைய புத்ராள் ஒரு க்ஷத்திரியன் ஒரு புலையனுக்கு சரீரத்தோடே சுவர்க்கம்போக யாகம் செய்விக்கிறானும் இதற்காக நாம் போகிறதா என்றிகழ்ந்தார்கள் அது தெரிந்த விஸ்வாமித்திரர் அவர்களை வேடராகச்சபித்து யாகத்தை பூர்த்திசெய்து திரிசங்குவை விமானத்திலேற்றி சுவற்கத்திற்கனுபபியபோது தேவர்கள் நீசனுச்சுதே என்றிகழ்ந்து கீழேதள்ளிவிட தலைகிழாய்வருகிற திரிசங்கு விஸ்வாமித்திராபோ அபயம் அபயம் என்றபோது சப்தங்கேட்ட மஹரிஷி அதட்டிக் கையாலமர்த்தியவரை யம்மட்டிலேயே நிற்கச்செய்து கோபித்து தேவர்களிப்படிச்செய்ததால் வேறே தேவலோகத்தையும் தேவர்களையும் நக்ஷத்திரம் முதலிய யாவும் சிருட்டிக்கிறேனென்று ஆரம்பித்து எருமை பூவரசு முதலியவைகளையெல்லாம் சிருட்டித்தபோது தேவர்கள் பிரமா விஷ்ணுமுதலிய யாவரும் விஸ்வாமித்திர மஹரிஷியிடம் வந்து சுவாமி நீர் இப்படி வேறு சிருட்டி செய்யவேண்டாம் நீர் இராஜரிஷியாக இரும் நீர் அனுப்பிய திரிசங்குவுக்கு அந்தப்பதவியே திரிசங்கு சொர்க்கமெனறிருக்கட்டும் அத்திரிசங்கு தலைகிழாக நிற்றலால் வருத்தமின்றி சுகமே நம்மைப்போலிருக்கட்டும என்று சொன்னார்கள் இதற்காகத்தான் விஸ்வாமித்திரர் சிருட்டித்தது,

பூழியனோராண்டிருந்துழியொருநாட் புரிசைசூழ் மதுரையம்பதியி, லூழியினொருவன்றுணினைந்தெழுந்தங் கொல்லைபோயாப்பனூருடையார், வாழிபகுரவங்கமழ்குழலுமையாண் மலரடியஞ்சலித்தேத்தி, யாழியவன்பினற்பிரிவாறருதயர்ந்துநின்றனுமதிமப்பற்றே.

(இ-பொ-ளா)

பின் சோழாந்தகபாண்டிய மஹாராஜன் ஒருவருஷகாலம் வரையில் அத்திருவாப்பனூரிலேயே இருக்குங்காலத்திலொருநாள் மதில்களாற்சூழப்பெற்ற மதுரையம்பதியில் எழுந்தருளிவிளங்கும் ஊழிகாலத்திலுங்கூட அழிவில்லாமல்விளங்கும் ஒப்பற்ற சொக்கலிங்கமூர்த்தியினது திருவடிகளை நினைத்து அங்குநின்றுமெழுந்து சந்நிதானத்தையடைந்து திருவாப்புடையீசனையும் பெருவாழ்வுடைய குரவங்கமழ்குழலம்மையையும் தாமரைமலர்போலுந்

திருவடிகளைவணங்கித் துதித்து மனதில் அழுந்திய பேரன்பினால் பிரிய மனம்பொருமல் சோர்வடைந்து ஒருவாறு விடைபெற்றுக் கொண்டு (எ-று) ஏ-அசை (எசு)

வேறு.

அன்புடைமனத்தினனான்றளிகடந்து
வன்படையெழுச்சிசெறிவார்முரசியம்பத்
தன்படைமுதற்றலைவர்தானைகுழுமிக்கார்
மின்படைநெருங்கமிசைவெண்குடைவிளங்க.

(இ-பொ-ள்)

அன்புபொருந்திய மனத்தையுடைய பாண்டியமஹாராஜன் அத்திருவாப்புடையீசரெழுந்தருளும் ஆலயத்தினின்று நீங்கி வலிய சேனைகளெல்லாம் நெருங்கிவருதலால் வார் இறுக்கப்பட்ட முரசப்பறைமுதலிய வாத்தியங்கள்முழங்கவும் தமது முதன்மையாகிய சேனைத்தலைவர்களும் மற்றையச்சைனியங்களின் கூட்டங்களுமிருந்து மின்னுகின்ற பலவகை ஆயுதங்களுடன் சூழவும் மேலே தாவள்யமான சந்த்ரவட்டக்குடை பிரகாசித்து நிழலைச் செய்யவும் (எ-று) (எஎ)

பூமுகமடந்தையர்தனம்புடைகுலுங்கச்
சாமரைபணிப்பவருதண்பவனநிமபத்
தேமலர்மணத்தினொடுதிண்சிகரமென்றோட்
காமருதமிழ்ப்பொதியவாரநறைகால,

(இ-பொ-ள்)

தாமரைப்புஷ்பம்போலும் மலர்ச்சியும் அழகும்பொருந்திய முகத்தையுடைய பெண்கள் தங்கள் ஸ்தனங்கள் குலுங்கும் வண்ணம் சாமரங்களை வீசுதலால் வருகின்ற காற்றானது சிரசிற்றரித்திருக்கும் தேன் நிறைந்த வேப்பமாலை வாசனையுடன் கலக்கவும் மிருதுவான புஜங்கள் அழகிய தமிழ்நாட்டின்கணுள்ள பொதிகாசலத்திலுற்பத்தியான சந்தனச்சாரதின்வாசம்வீசவும் எ-று எஅ

மாறுபடுசெம்பியர்மடந்தையர்படீரச்
சேறுபடுகொங்கைகரமென்பனசிவப்ப
ஊறுபடுகொண்கருதிரங்கொடுசிவக்கும்
வீறுபடுசெங்கைவடிவாள்புடையின்மின்ன.

இ-பொ-ள.

தம்மோடெதிர்த்த சோழ மஹாராஜாவின் பத்தினிகளுடைய சந்தனச் சாந்தணிந்த ஸ்தனங்களும் கைகளும் தமது நாயகர்

போரிலிறந்ததைப்பற்றி மனநொந்து மாரடித்துக்கொள்வதனல் சிவக்கவும் சேதமடைந்த அந்நாயகர்உடம்பினின்று ஒழுகும் இரத்தத்தினல் சிவந்திருக்கும் பெருமைபொருந்தியசெவ்விய கையிலுள்ள கூர்மையான வாளாயுதங்கள் பக்கங்களில் பிரகாசிக்கவும் (எ-று) (எகூ)

அன்னநடைவஞ்சியர்கணீலமலரக்கா
லுன்னதநெடுங்குடையிதென்றுதவிரெண்ணேழ்
மன்னர்கரபங்கயமலர்க்குலமுகிழ்ப்ப
மின்னவிர்மதிக்குலநல்வேந்தெனவிளங்க.

(இ-பொ-ள)

அன்னம்போன்ற ஒய்யாரமான நடையினையுடைய ஸ்திரீகளது நீலோற்பலபுஷ்பம் போலும் கண்பார்வை தன்மேல்படவும் நீண்டகாம்புபொருந்திய குடைகளையுடைய இப்பாண்டியதேசம் ஒன்று தவிர மற்றைய ஐம்பத்தைந்து தேசத்தரசர்களும் தாமரைமலர்போலும் தம்மிருகைகளையும் கூப்பவும் பிரகாசத்தையுடைய சந்திரகுலத்திலுதித்த இப்பாண்டியவம்சம் எவைக்கும் மேன்மையையுடையதென்பது யாவருக்கும் நன்ருய் விளங்கவும் (எ-று) (அய)

வருந்திடையிடைப்படுசயம்புமகிழ்தானம்
புகுந்துதொழுதன்பொடுமிருந்தினிதுபோவா
னிகந்துதனகர்க்குவருமிந்திரனிவின்ப
மகந்தரநிறைந்தமதுராபுரியடைந்தான்.

(இ-பொ-ள)

பூமியை மத்தியிற்பிளந்து தோன்றிய சுயம்புமூர்த்தமாகிய சிவலிங்கப்பெருமான் மகிழ்ச்சியுடனெழுந்தருளி விளங்கும் சந்நிதானத்தையடைந்து விதிப்படிவணங்கி அன்போடும் சற்றேதங்கியிருந்து சௌகரியமாய்போதற்கு அங்குநின்றுநீங்கிதன் அமராவதிபட்டணத்திற்கு வரும் தேவேந்திர மகாராஜாவை ப்போல சோழாந்தகபாண்டியமஹாராஜாவும் பரிபூரணமான சந்தோஷத்தோடும் மதுரைமாநகரத்தைவந்து சேர்ந்தார். (எ-று) (அக)

மண்ணுமணியன்னதிருவீதிவலமாவந்
துண்ணிலவுகோபுரம்வணங்கியுளணைந்தே
வண்ணநிறைபொற்கமலவாவியிடைமூழ்கி
யெண்ணுமொருசித்திமதவேழமுனிறைஞ்சா.

இ-பொ-ள

கழுவியசுத்தமான இரத்தினத்தைப்போலும் கண்டோரால் விரும்பப்படும் செவ்விய அலங்காரமான வீதியை வலமாகவே

வந்து நகரத்துள்விளங்குகின்ற ஸ்தூலலிங்கத்தை கண்டுவணங்
ப்பின் ஆலயத்திற்சென்று பொன்வர்ணமுள்ள இதழ்களையுடை
பொற்றாமரையென்னும சிவதீர்த்தத்தில் விதிப்படி ஸ்நான
செய்துயாவரும் வணங்கும்பெருமைபெற்ற சித்திவிநாயக மூர்
தியைமுன்னேவணங்கி (எ-று) ஏ-அசை (அ

தடம்படிகயற்கணுமையைத்தொழுது சார்ந்து
படம்படிசுமக்கநிமிர்பாம்பணிபுராணக்
கடம்படிமுளைத்தமுதல்கான்மலர்வணங்கி
யுடம்படிதொடுத்துமனமொத்துருகிநின்றான்

(இ-பொ-ரை)

தடாகங்களிலேதங்கியிருக்கும் கயல்மற்சம்போலுங்கண்களையு
டைய உமாதேவியாகிய மீனாக்ஷியம்மையின் சந்நிதியையடைந்
வணங்கி யிப்பூமியைதாங்குவதற்கு நிமிர்கின்ற படத்தையுடை
ஆதிசேஷனையாபரணமாக அணிந்த பூர்வத்தில் கடம்பவிருக்ஷ
தினடியில் தோன்றிய மூலமுதற்பொருளாகிய சொக்கலிங்கமூ
த்தியினதுதிருவடிகளாகிய தாமரைமலரை நமஸ்கரித்து சரீரத்தி
ல் கால்முதல்சிரசளவும் நெஞ்சமாகப்பொருந்தி அழலிடைப்ப
ட்டமெழுகுபோற்கரைந்து நின்றார் (எ-று) (அஉ)

கால்முதல்சிரசளவுமனசாக என்பதனை ஸ்ரீமன் மாணிக்கவா
கசுவாமிகள் திருவாசகத்தில் (வெள்ளந்தாழ்விரிசடையாய்) என்
றசெய்யுளில் (உள்ளந்தாணின் றுச்சியளவு நெஞ்சாயுருகாதால்) எ
ன்று திருவாய்மலர்ந்தருளியிருப்பதாலுணரக.

நின்றுதுதிசெய்துதிருநீற்றொளிபழுத்த
குன்றுபுரையண்ணல்விடைகொண்டுமடநல்லார்
மன்றுமுழனிமங்கலமெடுத்தெதிர்வரப்போ
யென்றுமுளகோயிலுளணைந்தினிதிருந்தான்.

(இ-பொ-ரை.)

சந்நிதானத்தில் இவ்வாறுநின்று ஸ்தோத்திரஞ்செய்து அழகி
ய விபூதிப்பிரகாசமுதிர்ந்த மலையையொத்தசோழார்த்தகபாண்டி
ய மஹாராஜன் விடைபெற்றுக்கொண்டு இளமைபொருந்திய ஸ்
திரீகள்மிக்க வாத்தியகோஷத்துடன் அஷ்டமங்கலங்களெடுத்து
எதிரேவர அவைகளோடுசென்று எப்போதுமியல்பாக உள்ள அ
ரணமனையையடைந்து சுகமேயிருந்தார் (எ-று) (அ௩)

அஷ்டமங்கலங்களாவன சாமரம், நிறைகுடம் கண்ணாடி
தோட்டி, முரசுவிளக்கு, கொடி-இணைக்கயல், எனபதாம்.

தோள்வினைகுறித்துரியதொன்முறைமைநல்கு
நாள்வினையியற்றிமணிநனமுடிகவித்தான.

(இ-பொ-ள)

பின்னும் இராஜதர்மத்துக்குரிய வாள்வித்தையுங்கற்று மும்மதங்களைச்சுக்கும்யானை மிக்கவேகமாய்ச்செல்லுங் குதிரை என்னுமிவைகளில் ஏறி ஆளக்கூடிய தொழிலையுங்கற்று வல்லனையிருப்பதைத்தெரிந்து இப்பூபாரத்தைச்சுமக்கத்தக்க புஜவலிமையையுங் குறிப்பிட்டுமதித்த இராஜாங்கத்துக்குரித்தாகிய பழமையான அரசாக்ஷிகிராமங்களைக் கொடுக்கத்தக்க நல்லசுபமுகூர்த்தத்தையும்வைத்து அதற்குரியகாரியங்களையெல்லாம் நடத்திக்குரித்த சுபவேளையில் பட்டாபிஷேகஞ்செய்து நல்ல இரத்தினகஜிதமான கிரீடத்தைத்தரித்தார் (எ-று) (அஅ)

பின்னரிகபோகநனிதுய்த்தொழிவுபெற்றுத்
தென்னவன்விரத்கூயொடிசித்தமசைவற்றுத்
தன்னையுணர்தத்துவவுணர்சகிதலைநின்ற
மன்னுதிருவாப்புடையவள்ளலைநினைந்தான்.

(இ-பொ-ள)

சோழாந்தகபாண்டியமஹாராஜன் தன் புத்திரனாகிய சுகுணபாண்டியனுக்கு முடிசூட்டி இராஜாங்கத்தையொப்புவித்த பின்னர் இம்மையிலனுபவிக்க வேண்டியபோகங்கள் யாவற்றையும் தானுமனுபவித்து பின் அவற்றில் வெறுப்படைந்து உள்ளத்துறவுடனே சித்தசலனஞ்சிறிதுமின்றி ஆத்மாவாகியதன்னை யறியக்கூடிய தத்துவவிசாரணையிலேயே சிறந்து பாண்டியர்க்கு வேண்டியவைகளை ஈந்தருளும் வள்ளற்றன்மையையுடைய திருவாப்புடையீசரைத் தெரிசிக்க வேண்டுமென்று நினைத்தார் (எ-று) ஏ அவ (அகூ)

தார்புகுதடம்புயன்விநாந்தருடனமழசுகுஞ்
சீர்புகுகயற்கணுமைமசேருமதுர்ச்
னைபுகுபதந்தொழுதெழுந்தருளியாப்ப
னூர்புகநடந்துநிறையன்பொடவணுற்றான்.

(இ-பொ-ள)

மாலையையணிந்த விசாலமாகிய புஜங்களையுடைய சோழாந்தகபாண்டியமஹாராஜன சீக்கிரமாகத்தருவருட்பிரசாதம் பொலிந்து விளங்கும மீனாக்ஷியம்மைசேரும் சொக்கலிங்கமூர்த்தி சந்நிதானத்தையடைந்து திருவடிகளை நமஸ்கரித்து எழுந்துவிடைபெற்றுக்கொண்டுதிருவாப்பனூருக்குப்போகநடந்து மக்க அன்புடன அங்கேபோய்சேர்ந்தார (எ-று) (கூய)

கன்னிகுரவங்கமழ்குழற்கவுரிபாக
மன்னிநிறையாப்புடையவள்ளறிருமுன்னர்
சென்னிமிசையஞ்சலிதிருத்துபுநடந்தே
வன்னியிழுதொத்துருகிமண்ணிடைப்பணிந்தான்.

(இ-பொ-ரை)

இளமைபொருந்திய குரவங்கமழ்குலம் மைவாமபாகத்தில் பொருந்து நிறைந்த வள்ளலாகிய திருவாப்புடையீசரது அழகியசந்நிதானத்துன்முன் சிரசின்மேல இருகைகளையும் அஞ்சலியாகக்கூப்பி நடந்து அக்கினியிற்பட்ட நெய்போலக்கரைந்து பூமியினிடமாய் நமஸ்கரித்தார (எ-று) ஏ-அசை (௬௧)

வேறு.

உடல்குழைந்துருகமேனியுரோமங்கள்சிலிர்ப்பக்கண்ணீர்
மடைதிறந்ததாழுகநெக்குமனமபதைபதைத்துளின்பந்
தடையறப்பெருகச்செந்நாத்தழுதழுப்பபடையவேந்த
னிடையறுவன்பினானின்றிவ்வகைதுதிப்பதானான்.

(இ-பொ-ரை)

பின் சோழாந்தகபாண்டிய மகாராஜன் எழுந்து சரீரமெல்லாங் குழைவுற்று உருகவும அச்சரீரத்திலுள்ள உரோமங்களெல்லாம் கூச்செறியவும மதகின்மடைதிறந்தாற்போலக் கண்களினின்றும் ஆனந்தவருவியானது பெருக்கெடுத்துப்பாயவும் மனமான துருகித்துடிதுடித்து உள்ளே பேரானந்தமானது அதிகரிக்கவும செவ்வியநாவானது தடுமாற்றமடையவும் இவ்வாறுநீங்காதபேரன்பினால் நின்றுகொண்டு இவ்விதமாகத் தோத்திரஞ் செய்கின்றார் (எ-று) (௬௨)

காரணக்கடவுள்போற்றிகடல்வருமாலகால
பாரணபரமபோற்றிபராபரயோகிபோற்றி
பூரணச்சுடரேபோற்றிபுண்ணியபுராணபோற்றி
யாரணபொருளேபோற்றியாப்பனூருடையாயபோற்றி.

(இ-பொ-ரை)

யாவைக்கும் மூலகாரணராகிய தெய்வமேநமஸ்காரம் திருப்பாற்கடலில்தோன்றிய ஆலகாலவிஷத்தைத்திருவமுதுசெய்தருளிய பரமனே நமஸ்காரம் பரமேஸ்வரனாகிய ஐயனே நமஸ்காரம எங்கும பரிபூரணமாய் நிறைந்தஞானப்பிரகாசனே நமஸ்காரம தாமசொரூபியாயும அநாதியாயுமிருப்பவரே நமஸ்காரம வேதங்களின அர்த்தமாய் விளங்குபவரே நமஸ்காரம் திருவாப்பனூரைப்பீடமாகவுடையவரே நமஸ்காரம (எ-று) (௬௩)

திரிபுரவிசயபோற்றிதேவர்கடேவபோற்றி
திரிபுரவேதநாதபங்கயத்தரசேபோற்றி
யெரிபுரமதனுக்காவியிரதியாலளித்தாய்போற்றி
யரிபுரந்தரற்குமெட்டாவாப்பனூருடையாய்போற்றி.

(இ-பொ-ள்)

திரிபுராதிகளைவெற்றிகொண்டவரே நமஸ்காரம் மஹாதேவனே நமஸ்காரம் வேதங்களாகிய சிலம்புகள் சப்திக்கும் திருவடிகளையுடைய எப்பொருட்குமிறைவனே நமஸ்காரம் சாம்பராகியெரிந்துபோன சரீரத்தை மீண்டும் மன்மதனுக்கு அவன் பாரியாளாகிய இரதிவேண்டிக்கொள்ள உயிராக்கொடுத்தவரே நமஸ்காரம் விஷ்ணுமூர்த்தி தேவேந்திரன் முதலியதேவர்களுக்குங் காணப்படாத திருவாப்பனூரை யிடமாக வுடையவரே நமஸ்காரம் (எ-று) (௧௪)

உலகெலாம்நிறைந்தாய்போற்றி யொண்டிறல்படைத்த வெங்கோ
மலருளோன்சாபமன்றிமற்றொருசாபமேரு [ன்
நலனுலாம்புழைக்கைவேழநாதனைப்பயந்தாய்போற்றி
யலகில்சோதியனேபோற்றியாப்பனூருடையாய்போற்றி.

(இ-பொ-ள்)

எல்லாவுலகங்களினும் எள்ளுக்குளெண்ணெய்போல் நிறைந்திருப்பவரே நமஸ்காரம் மிக்கவலிமைபெற்ற செவ்விய புஷ்பபாணங்களையுடைய மன்மதனது கரும்புவில்லாகிய சாபமேயல்லாமல் வேறேயாதொரு சாபமும் அடையாத நன்மைபொருந்திய துதிக்கையையுடைய யானைமுகன்நாயகமூர்த்தியை யீன்றவரே நமஸ்காரம் அளவிலாதஜோதிசொரூபமானவரே நமஸ்காரம் திருவாப்பனூரை யிடமாகவுடையவரே நமஸ்காரம் (எ-று) (௧௫)

சுடர்மழுப்படையாய்போற்றிசுருதிசொன்னடையாய்போற்றி
படர்நதிச்சடையாய்போற்றிபாணப்படையாய்போற்றி
யிடர்மனத்தடையாய்போற்றி யிவர்ந்தவெள்விடையாய் போற்றி
யடர்தலைத்தொடையாய்போற்றியாப்பனூருடையாய்போற்றி.

(இ-பொ-ள்)

பிரகாசம்பொருந்தியமழுவாயுதத்தையுடையவரே நமஸ்காரம் வேதங்களிலே கூறிய நடையையுடையவரே நமஸ்காரம் திதிகர்த்தத்துவத்தையுடைய விஷ்ணுவாகிய பாணத்தையுடையவரே நமஸ்காரம் திருவுள்ளத்தில் யாதொரு இடரும் இல்லாதவரே நமஸ்காரம் தாவல்யமானரிஷபவாகனத்தில் ஆரோகணித்தருளுபவரே நமஸ்காரம் நெருங்கியதலைமாலையணிந்தவரே நமஸ்கா

ரம் திருவாப்பனூரை யிடமாக வுடையவரே நமஸ்காரம் (எ-று) (கசு)

மாக்கடலாவநந்தவனமடைப்பள்ளிமாயோன்
மேக்குயர்விடைகோல்காந்தை விளங்குமர்ச்சகன்மென்மெல்லப்
போக்குயிர்ப்பொருநால்வேதபுராணவாகமங்களாக
வாக்குமெம்மிறைவபோற்றியாப்பனூருடையாய்போற்றி.

(இ-பொ-ள.)

விசாலமான சமுத்திரத்தைஅம்புறாத்தூணியாகவும் திருநந்தனவனமாகவும் திருமடைப்பள்ளியாகவும் விஷ்ணுவைஆரோகணித்தருளும் ரிஷபவாகனமாகவும் பாணமாகவும நாயகியாகவும் விளங்கும் அர்ச்சகனுகவும் மெல்ல மெல்ல இரேசிக்கின்ற சுவாசங்களை ஒப்பற்ற நான்குவேதங்களாகவும் ஆகமங்களாகவும் புராணங்களாகவும் ஆக்கும் எம்மிறைவனே நமஸ்காரம் திருவாப்பனூரையிடமாகவுடையவரே நமஸ்காரம் (எ-று) கஎ

வேட்டமதிலேக்குமென்னைமீட்டுபிரளித்துமுன்பு
காட்டகத்தறிவாய்வந்துகாட்சிசெய்கருணைபோற்றி
நாட்டமூன்றுடையவெங்களுயகபோற்றிபைவா
யாட்டரவணிந்தசோதியாப்பனூருடையாய்போற்றி

(இ-பொ-ள)

வேட்டைத்தொழிலில்களைத்துப்போனஅடியேனுக்குமீட்டும் உயிரைக்கொடுத்து முன்னேகாட்டினிடத்தே அறிவாகாரமயெழுந்தருளிவந்து தெரிசனந்தந்திருவருளுக்கு நமஸ்காரம் திரிநேத்திரங்களையுடைய எமதுதலைவனே நமஸ்காரம் ஆடுகின்ற படம்பொருந்தியசர்ப்பத்தை ஆபரணமாக அணிந்த ஜோதிர்மயமான திருவாப்பனூரை யிடமாக வுடையவரே நமஸ்காரம் (எ-று) கஅ

என்னநின்றேத்தியீசனின்னருள்கைக்கொண்டேர்ந்தார்
மன்னனன்றுப்பனூருள்வதிந்தனனுகவந்தத்
தென்னனின்றேதுந்தெயவத்திருத்துதியரன்பொற்கோயின்
முன்னர்நின்றேத்துவோர்தமுழுவினையொழிவர்மாதோ.

(இ-பொ-ள)

என்றிவ்வாறு சந்நிதானத்தில் நின்று ஸ்தோத்திரஞ்செய்து அத்திருவாப்புடையீசர் திருவருளையே தனக்குரிய உறுதிப்பொருளாகக் கைப்பற்றிக்கொண்டு குளிர்ந்த மாலையையணிந்த பாண்டியமஹாராஜன் நன்மையாக அத்திருவாப்பனூரிலேயே வசித்தார் இஃதிப்படியிருக்க அச்சோழாந்தகபாண்டியமஹாராஜன் சந்

நிதியில் நின்று துதி செய்ததெய்வத்தன்மை பொருந்திய அழகிய தோத்திரங்களை சிவபெருமானது பொன்மயமான திருக்கோயி லின்முன்னே நின்று துதிசெய்கின்றவர்கள் தம்முடையவினைகளி னின்றும் நீங்குவார்கள் (எ-று) மாதோ-அசை கூகூ

வேண்டிமுன்றனையீர்த்தாட்கொள் விமலர்க்குச்சிறந்தபூசை
தூண்டுதேர்விழாவுமுள்ளம் பெருங்களிதூங்கச்செய்தோ
ராண்டுறைந்தருளுநாள்வா யாப்பனூருடையவண்ண
னீண்டபேரருளும்வேந்த னுயுளுநிரம்பிற்றன்றே.

இ-பொ-ளா.

முன்னேதன்னைத்தடுத்தாட்கொள்ளவேண்டிக்காட்டிவிழுந்து அடிமைகொண்ட மலரன்தராகிய அத்திருவாப் புடையீசருக்குச் சிறப்பாகியபூசைகளையும் செலுத்துகின்ற இரதோற்சவமும்ஆகி ய இவைகளைமனமானது மிக்க சந்தோஷத்தையடைய நிறைவே ற்றி ஒருவருஷகாலமாயங்கே வசித்துக்கொண்டிருக்குங் காலத்தி ல் திருவாப்பனூரை யிடமாகவுடைய சிவபெருமானது மிகுந்த பெரியதிவருளும் பாண்டியமஹாராஜாவின் வாழ்நாளும் சரியாய் நிறைந்தது (எ-று) அன்று ஏ அசை கOO

வேறு.

கிடைப்பரியபெருங்கதிக ளொருமூன்றுங்கடந்துபோய்க் கிளர்
வாணேமிப், படைக்கரியநிறத்தவர்க்கு நான்முகற்குமடைவரியப
தவிமேவி, விடைக்கடவுள்சிவபுரத்தினவனுருவினுடன்கலந்து
வேறற்றொன்றாய்த், தடைத்தவிருவினைச்சோழாந்தகமாறன் விள
ங்கினன்றொன்னமன்னே.

(இ-பொ-ளா)

முன்னே நல்வினைதீவினையென்னும்இருவினைத்தொடக்கற்று ச் சோழாந்தகபாண்டிய மகாராஜன்கிடைத்தற்கரிய பெருமை பொருந்திய சாலோக சாமீபசாரூப மென்னும் மூன்று பதவிக ளையுமகடந்து அதற்கப்பாலதாகிய பிரகாசம்பொருந்திய சக்ராயு தத்தைத்தரித்த நீலநிறத்திருமேனியையுடையமஹாவிஷ்ணுவுக்கு ம் சதுர்முகங்களையுடைய பிரமதேவருக்கும் அடைதற்கரிய சாயு ச்சியபதவியை யடைந்து ரிஷபவாகனத்தி லாரோகணித்தருளும் சிவபெருமான் எழுந்தருளிவிளங்கும் சிவலோகத்தில் அச்சிவபெ ருமானது திருவுருவத்தோடு அப்பிலுப்புப்போற்கலந்து வேறில் லாமல் ஒன்றாய்விளங்கினர் (எ-று) மன்னே அசை கOக

## வேறு.

மேயவழுதியுயர் சோழாந்தகன் வீடுமருவுகதை யீதாஞ்சொல்வோர், நேயமொடுசெவியின்வாய் மாந்தினர்நீடுபொருணமுழுதுமாராய்ந்தவோர், தீயவினையொழிவர்மேலாம்புகழ்சேர்வர் குறைதவிரவேவாழ்ந்து, நீளாயுளிறுதியினிலாம்பதமாவ தடைவரருள்கூர்ந்தரோ.

(இ-பொ-ள)

சோழாந்தக பாண்டியமஹாராஜன் மேன்மை பொருந்திய மோக்ஷத்தையடைந்த இந்த திவ்யசரித்திரத்தைப் பிறர்கேட்கச்சொல்வோர்களும் அதையன்போடுகாதால் கேட்பவர்களும் அதிலுள்ள பொருள்கள் யாவற்றையும் விசாரித் தறிந்தவர்களும் மிகக்கொடிய வினைகளினின்றும் நீங்குவார் மேலான கீர்த்தியையடைவார் யாதொருகுறைவுமின்றிபெருகவாழ்ந்து நீடித்த தம்வாழ் நாளின் முடிவில் திருவருளைப்பெற்றுச் சாயுச்சியப்பதவியையடைவார் (எ-று) ஏ அரோ அசை ௧0௨

ஆப்பனூர்ச்சருக்கம்முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் ௱௬௧.

# இடவபுரச்சருக்கம்.

---:o:---

இக்காதையமுதப்பெருந்தாரைநனைவித்தவிருகாதுளீர்
முக்காலுமுமையொப்பதியாரென்றுமகிழ்வுற்றமுனிசூதனை
யக்காலேமுனிவோரெழுந்தஞ்சலித்தேத்தவணியாப்பனூர்
மெய்க்காரணன்பெற்றநகரீசனுங்காதைவிண்டானரோ.

(இ-பொ-ள)

இந்தச்சரித்திரமாகிய பெரிய அமிர்ததாரையினால் நனையும்படி செய்த இரண்டு காதுகளையுடைய ஏ நைமிசாரண்யவாசிகளே முன்றுதரமுஞ்சொன்னேன் உங்களையொப்பவர்கள் யாரிருக்கின்றார்கள் என்று சந்தோஷமடைந்த சூதமஹரிஷியை அப்போது அந்நைமிசாரண்யவாசிகள் எழுந்திருந்து அஞ்சலிசெய்து ஸ்தோத்திரஞ்செய்ய சூதமஹரிஷி அழகிய ஆப்பனூரில் எழுந்தருளிவிளங்கும் மூலகாரணராகிய சிவபிரான் இடவபுரேசனுகிய திவ்யசரித்திரத்தைச்சொன்னார் (எ-று) அரோ அசை ௧

சுடர்சூழுநெடுவேணிமிசையிந்துவழிவந்தசோழாந்தகன்
கடல்சூழ்தரும்பார்புரந்தீசனுடன்மேவுகதிசேர்ந்தபி
னடல்வாகைபுனல்மீளிசுகுணப்பெயர்ப்பூழியன்காமர்வெண்
குடைநீழலுலகின்கணுயிர்வாழமுறைசெய்துகோலோச்சுநாள்.

(இ-பொ-ள)

பிரகாசம்பொருந்திய நீண்டஜடாமகுடத்திற்றரித்த சந்த்ரவ ம்சத்திற்றோனறிப சோழாந்தகபாண்டியமஹாராஜன் சமுத்திரஞ் சூழ்ந்த இப்பூவுலகையிரக்ஷித்து சிவபெருமானது திருவடிநிழவி ற் சேர்ந்தபின் வலிமைபொருந்திய வெற்றிமாலையை யணிந்த தி ண்ணியனுகிய சுகுணபாண்டிய மஹாராஜன் அழகியவெண்ணிற முள்ள சந்த்ரவட்டக்குடைநிழலில் உயிர்களெல்லாந் தங்கிச்சுக மேவாழச்செங்கோன்முறை செய்துவருநாளில் (எ-று) உ

வீறுநிலத்தேவர்திரிகாலகருமத்தின் விலகாரதின்
மாறுதசெந்தீவளர்த்தெங்கும்விண்மாரிவருவிப்பர்வன்
பாறும்வேன்மன்னர்முதன்மூன்றுவருணத்தர்பல்கிப்பெறும்
பேறனதங்கண்மம்வழுவாதநெறிநிற்பாபின்றூர்களால்.

(இ-பொ-ள)

பெருமைபொருந்திய பூமிக்குத்தேவர்களாயுள்ள பிராமண ர்கள் காலை உச்சி மாலை யென்னு மூன்றுகாலங்களிலும் செய்கி ன்ற நித்தியகர்மானுஷ்டான விதிகளில் அணுமாத்திரமும் தவ றுதவர்களாகி அதனுல்அழியாதசெவ்விய ஆஹவனீயம் தக்ஷிணக் கினியம் காருகபத்தியமென்னும் மூன்றக்கினிகளையும் விதிப்ப டிசெய்து எங்கும்மாதம் மும்மாரி தவறமற் பெய்விப்பார் வலிய மருந்துகள் வந்துசேரும் வேலாயுதத்தையுடைய அரசர்முதலா கிய மூன்றுவருணத்தார்களும் விருத்தியாகி பெறத்தக்கபேறுகி ய தமது நித்திய கர்மானுஷ்டானங்களில் தவறுத நன்னெறியில் நிலைத்திருப்பார்களே யல்லாமல் அதிற்பின் வாங்கார்கள் (எ-று) ஆல் அசை ௩

மாரிக்குவித்தன்னமடமாதர்கற்போங்கிமல்கும்பெருந்
தாரிக்குமுதலானபைங்கூழ்நிலந்தான்சுரந்தேவலம்
பாரிக்குநாளும்பலத்தோடிருக்கும்பசுங்காவெலாம்
பூரிக்குநல்லானினம்பால்மிகுந்தபொழிந்தூறுமால்.

(இ-பொ-ள)

உலகத்திலே மழைபொழிவதற்குக்காரணமாயிருக்கும் இள மைபொருந்திய ஸ்திரீகள்கற்பென்னுங்கலங்காநிலைமையால் உய ர்ந்து அதனுல் அபிவிர்த்தியாவர் பெரியவேர்களையுடைய கரும்பு முதலிய பலபயிர்களும நிலங்களில் சுரப்புற்று வளம்பெருகும்

கினர்தோறும் பசிய சோலைகளெல்லாம் கனிவர்க்கங்களோடு பொலிவடைந்திருக்கும் நல்லபசுக்கூட்டங்கள்யாவும் பூரிப்படைந்து சுரப்பதனால் மிகவும் பாலைப்பொழிந்து கொண்டேயிருக்கும் (எ-று) ஏ ஏ ஆல் அசை ௪

தானந்தவங்கல்விமெஞ்ஞானமின்பந்தழைத்தீறிலா
வானந்தபோகந்ததும்புந்தமிழ்ப்பாண்டியவணிநாடெலாம்
வானம்பெருஞ்சீர்விரும்புந்தகைத்தாயிவ்வண்ணம்பல
னானந்தவிர்ந்தேபல்லுயிர்வாழவந்நாளிலோராண்டரோ.

(இ-பொ-ள்)

தானமுந் தவமுங் கல்வியும் உண்மைஞானமுந் சுகமுமாகிய இவைகள் அதிகரித்து அளவில்லாத பேரானந்தானுபவமானது பொங்குகின்றதமிழ்வழங்கும் அழகியபாண்டிய தேசமுழுவதும் தேவர்களும் பெரிய சிறப்புகளையிச்சிக்கத்தக்க மேம்பாடுடையதா யிவ்வாறு நெடுங்காலம்வரையில் யாதொரு குறைவுமின்றி பலவுயிர்களும் வாழ்ந்துகொண்டிருக்கும் அக்காலத்தில் ஒரு வருஷம் (எ-று) ஏ அரோ அசை ௫

வேறு.

மருவுகோணிலைதிரியமாரிவறப்பவேரிவறந்துபோய்ப்
பெருகுகூவலுநீர்சுருங்குபேருயிர்த்தொகையெய்த்திடப்
பொருவிலானினமாதிநாத்தலைபுற்றலைப்படவின்றியே
திரியநீர்விளைவஃகிவந்ததுசிறுவிலைப்படுநாளரோ.

(இ-பொ-ள்.)

பொருந்திய கிரகங்களெல்லாம் தத்தம் நிலைகளினின்றுதவறிச் செல்ல அதனால் மழையில்லாமல் ஏரிகளெல்லாம் வறண்டுபோய் ஆழ்ந்த பெருகிய கிணறுகளும் ஜலங்குறைந்து அதனால் அனேகமான உயிர்களெல்லாம் பசிநோயால் வருந்தியிளைக்க சமானமற்ற பசுக்கூட்டமுதலியவைகள் தமது நாவின் நுனியால் வளைத்துத் தின்னப்புற்கள் பூமியற்றோன்றாமல்கெட ஜலம் சுரந்து வந்ததலற்று மிகக்கொஞ்சவிலை விற்கும் பஞ்சகாலம் வந்துசேர்ந்தது (எ-று) அரோ அசை ௬

அந்தநாளணியாப்பனூர்வருமந்தணாளர்களெண்ணியே
சந்தவான்மழையின்மையால்வருதங்கள்பங்குநிலக்கணே
பூசநீடுபெருத்தவித்திமுளைத்துவான்பயிராகமுன்
வந்தவாப்புடைநாதர்பங்குவயற்கணங்கவராருளினால்.

(இ-பொ-ள்)

அந்த க்ஷாமகாலத்தில் அழகிய திருவாப்பனூரிலிருக்கின்ற பிராமணர்கள் யோஜித்து ஆகாயத்திற் சஞ்சரிக்கும் மேகங்கள்

மழைபொழியாமையால் தங்கள் பாகமாகிய நிலங்களிலே முந்தி ச்செழிப்புள்ள பருத்திகளை விதைத்து அது முளைத்து நல்லபயி ராயிருக்க முதலிலே தோன்றிய ஆப்புடையீசர்பாகமாகிய வயலி லே அத்திருவாப்புடையீசர் திருவருளால் அவ்விடத்து (எ-று) ஏ ஏ அசை எ

உண்ணுமேரியின்மண்டொடுங்குழியுள்ளடங்கியநீரினல்
வெண்ணிறச்சிறுநெற்பயிர்கொளவித்தினுடொறுமாப்பனூ
ரண்ணலார்திருமேனிதீண்டுமொராதிசைவன்வளர்க்குநாட [ல்
புண்ணியப்பொருள்போல்வளர்ந்துபொலிந்துபைங்கதிர்விட்டதா

(இ-பொ ரை)

யாவரும் ஜலமெடுத்துப் புசிக்கின்ற பெரியகுளத்திலே ம ண்ணெடுத்திருக்கும் பள்ளத்திலடங்கியிருந்த ஜலத்தினல் கொஞ் சம் வெண்ணிறமான நெற்பயிர்செய்து நாடோறும் அத்திருவா ப்பனூரில் எழுந்தருளி விளங்கும் சிவபெருமானது திருமேனி யைப்பரிசித்துப்பூஜைசெய்கின்ற ஓராதிசைவப்பிராமணர் அதற்கு வேண்டுமுயற்சிகளைச்செய்து காத்துவருநாளில் அதுபுண்ணியவ ழியாய்ச்சம்பாதிக்கின்ற பொருளானது மேன்மேலும் விருத்தியா தல்போல நாளுக்குநாள் விர்த்தியடைந்து பொலிவுகொண்டு ப சிய கதிர்களை வெளிவீசிற்று (எ-று) ஆல் அசை அ

சின்னிலத்துறுசாலிபைங்கதிர்நீட்டல்கண்டுதிருந்துநூல்
மன்னர்முன்னவருன்னியுன்னிமனம்பொறுமலிவ்வேரிநீர்
துன்னுபாதியதன்றியேமுழுதுஞ்சைவாகமவேதிய
னென்னவன்மைதனெற்பயிர்க்கணிறைப்பதென்றுசூழாங்கொளச

(இ-பொ-ரை)

சொற்பநிலத்திலேயுள்ள அந்தநெற்பயிர்கள் பசியகதிர்களை வெளிவீசியிருப்பதைப்பார்த்து திருத்தமானநீதிநூலில்வல்ல அர சகுலத்திற்கு மூந்தினவராகிய ப்ராமணர்கள் நினைத்து நினைத்து மனம் சகிக்காமல் சிவாகமவிதிகளை நன்குணாந்த அருச்சகன் நீயையுடைய இந்த ஏரியில் பாதிப்பாகம் உபயோகிப்பதை விட்டு முழுபாகத்தையும் தானசெய்தநெற்பயிர்க்கு இறைக்கிறது என ன சாமர்த்தியமென்று கூட்டங்கூடி (எ-று) ஏ அசை கூ

வீறுசேரந்நிலத்தினீடியவெண்பருத்திகணீரிலா
தீறுகாண்குறயாமிருப்பதெனிக்குளத்திருகூறிலோர்
கூறுநீர்நமதேயதற்கொருகோதியாதுகண்வாயினுட்
சேறுகாணவிறைத்துநங்குறைதீர்வமென்றுளாசெப்பினர்.

பெருமைபொருந்திய நம்முடைய அந்த நிலத்திலுள்ள வெண்ணிறமான பருத்திச்செடிகள் ஜலமில்லாமற் சோர்வடைய நாம் அதைப்பார்த்து வாளாயிருப்பதென்னகாரணம் இந்தக்குளத்திலிரண்டுபாகத்திலே ஒருபாகத்துத்தண்ணீர் நம்முடையதேயாம் அதற்குயாதொரு குற்றமுமில்லை ஆதலால் இந்தக்கண்வாயிலுள்ள ஜலத்தைச்சேறுகாணும்படி பருத்திகளுக்கிறைத்து நமது குறைவை நிவர்த்திசெய்து கொள்வோமென்று சொன்னார் ௧௦
(எ-று)

அன்னசெய்தியறிந்தயர்ந்திடுமாதிசைவருளுத்தமன்
என்னசெய்வமிதற்கெனுநெடிதெண்ணியெண்ணிவருந்துவான்
சொன்னவிப்பிரர்பாலடர்ந்துதொடர்ந்துபேரவையுட்புகுந்
தின்னலகூரவிரங்கிவாய்மொழியின்னகூறினனாலரோ.

(இ-பொ-ள.)

அந்தச்சங்கதியையறிந்து தளர்ச்சியடைந்த ஆதிசைவப்பிராமணர்களெல்லாருள்ளும் உத்தமராகிய அவ்வர்ச்சகர் இதற்கென்னசெய்வோமென்று மிகவும் நினைத்து நினைத்து வருத்தமடைந்தவராகி இவ்வாறுசொல்லிய அந்தபிராமணர்களிடத்தில் நடந்து தொடர்ந்து அவர்கள் கூடியிருக்கும் பெரியசபையிற் சென்று மிக்கதுயரத்தோடும் இரக்கமாய் வாய்திறந்து சிலவார்த்தைகளை யிவ்வாறாய்ச்சொன்னார் (எ-று) ஆல் அரோ அசை ௧௧

ஆதிநூலொருநாலுநாலுடனங்கநூன்முதலாகநூ
னீதிநூலுமறிந்தவீர்விளைநீள்பருத்தியவாவினும
பாதிநீர்தனுக்கிறைப்பதுபன்னினீரெனல்கட்டள
னீதியாருமயுத்தமென்பரெவர்க்குமின்னதிசைந்திரா.

(இ-பொ-ள)

முதனூலாகிய இருக்கு யஜுர் சாமம் அதர்வணமென்னும் நான்குவேதங்களுடனே அதற்கு அனுகூலமாக உள்ள வேதாங்கங்கள் ஆறையும் இன்னும் மற்றசாஸ்திரங்களையும் நீதிசாஸ்திரங்களையுநன்றாய்க்கற்றறிந்த ஏ பிராமணோத்தமர்களே மிகவிளைந்திருக்கிற பருத்திச்செடிகளுக்கு ஒருக்கால் ஜலம்வேண்டுமானாலும் உள்ளதிற் பாதிபாகஜலத்தை அப்பருத்திகளுக்கிறைத்து விடுகிறதென்றுசொன்னதாகக் கேள்வியானேன நீதிமான்களும் இதைபொருத்தமாகக் கொள்ளார்கள் அன்றியும் இதுயாருக்கும் ஒவ்வாது ௧௨
(எ-று)

வேதாங்கம் ஆறாவன. சிக்ஷை, வியாகரணம், நிருத்தம், ஜோதிடம், கற்பம், சந்தோவிசிதி என்பதாம.

வேதத்தின் உச்சாரலக்ஷணத்தையுணர்த்துவது சிக்ஷை.

வேதத்தின்பதலக்ஷணத்தையுணர்த்துவது வியாகரணம்.

வேதத்தின் பதங்களுக்கு விவரணங்கூறுவது நிருத்தம்.

இல்க்கினம், திதி, வாரம், நக்ஷத்திரம், யோகம், காணம்முதலியவற்ருல் வைதிககர்மங்களுக்குக் காலம்அறிவிப்பது ஜோதிடம்

ஆசுவலாயநீயம், போதாயநீயம், ஆபஸ்தம்பம் முதலிய சூத்திரரூபத்திருந்து வைதிககர்மங்களைப்பிரயோகிக்கும் முறைமையைக்கற்பிப்பது கற்பம்.

வேதங்களில் உக்தைமுதலிய சந்தோபேதங்களுக்கு அக்ஷரசங்கியைக் கற்பிப்பது சந்தோவிசிதி.

இவ்வாறும் உணராக்கால் வேதங்களையோதுதலும் அவற்றின் பொருளையுணர்தலும் அவைகளில் விதித்தவழி யொழுகுதலும் ஏலாவாம்.

அன்றியாப்புடைநாதனுர்திருவமுதுசெய்வதனுக்கிவை
யின்றியேயமையாமையாலருளீரெனகமொழிரந்தன
னன்றிலாதவர்நஞ்சுணத்தகுநாதர்தானமுதுண்பரோ
வென்றசங்கதியாடிவன்மையியம்பியொல்லையெழுந்தரோ.

(இ-பொ-ள)

இஃதல்லாமலும் அத்திருவாப்புடையீசர் நிவேதனத்திற்கு இந்நேல் இன்றியமையாததாதலால் கிருபை செய்யுங்களென்று பிரார்த்தித்துக்கொண்டார் பின்னும் இரக்கம் என்ற நற்குணமில்லாதவர்களாகிய கொடிய அப்பிராமணர்கள் விஷ்ணுவுடைய சுவாமி அன்னத்தை யுண்பாரோ என்றிப்படிக் கொடுஞ்சொற் சொல்லிச் சீக்கிரமெழுந்திருந்து (எ-று) அப்ரா அஙச ௬௩

வேறு.

எண்ணீர்மையற்ற மறையோர்பருத்தியிடையேகுளத்துளருகுர், தெண்ணீரினைப்பவதுகண்டுசிந்தைதெருமந்துநின்றுசெயல்போய்க், கண்ணீரினைத்துமுறையிட்டிரந்தகளையாதிசைவன் முமமேல், விண்ணீர்முடித்த திருவாப்பனூரர்மெய்த் தாண்முன்வீழ்ந்து மொழிவான்.

இ-பொ-ளா

நல்லெண்ணம்கிஞ்சித்துமில்லாத இப்பிராமணர்கள் தங்கள் வயலிலுள்ள பருத்திச்செடிகளிலே அக்குளத்தில்மிகக்குறைந்திருக்கின்ற தெளிவாகியஜலத்தையிறைக்க அதைப்பார்த்துமனஞ்சுழன்று நின்று செயலற்றுக கண்களினின்றும் தாரைதாரையாய்

ஜலத்தை யொழுகவிட்டுத்தம்மனக்குறையைச்சொல்விமுறையிட்டு வேண்டியழுகா அவ்வர்ச்சகர் ஜடாமுடியில் கங்கையைத்தரித்த திருவாப்புடையீசரது திருவடியின் முன் வீழ்ந்துஉண்மையாய்வருந்திச்சொல்வார் (எ-று) ௧௪

தேவாதிதேவகயிலாயவ்வாணதிரிசூலநாதமுறையோ
மாவாடுதாருவனப்பிரேசர்வலியட்டசம்புமுறையோ
மேவார்புரங்கடனிபாழ்படுத்தவிறல்வாகைவீரமுறையோ [யோ
வாவாவிதென்கொன்மறையோர்செய்தீமையணியாப்பனூர்முறை

இ-பொ-ளா.

தேவர்களுக்குமேலாகிய ஏ மஹாதேவா திருக்கைலாசமலையில் வீற்றிருந்தருளும் ஐயனே மூன்றுசிரசையுடைய சூலாயுதத்தை தரித்தகடவுளே இதுமுறையா மிருகங்கள் சஞ்சரிக்கின்ற தாருகாவனத்து மஹாரிஷிகளுடைய வல்லமையைக்கெடுத்த சம்புவே இதுமுறையா சத்துருக்களாகியதிரிபுரங்களையும் பஸ்மீகரப்படுத்திய வலியவெற்றி பொருந்திய சுத்தவீரனே இது முறையா ஆ ஆ அழகிய திருவாப்புடையீசர் இப்பிராமணர்கள செய்கின்ற அன்னியாயந்தான் என்ன இதுமுறையா (எ-று) ௧௫

என்றென்றரற்றி மொழிகின்றசைவ னிதயக்குறிப்பின்வழியாய், நின்றென்றுமன்பர்நினையுங்கருத்துநிறைவேற்றுமாதிமறைநூ, லன்றென்றுமற்றி தாமென்றுமுண்மை யறியாதிளைப்ப முடிவிலொன்றென்றுநின்றபொருண்மூலலிங்க வுருநின்றும்வந்துபகர்வான்.

(இ-பொ-ளா)

என்றிவ்வாறழுதுசொல்லிய அர்ச்சகரதுள்ளக் குறிப்பின்வழியே தாமுநின்று எப்போதும் மெய்யன்பர்கள் நினைக்குநினைப்பைப்பூர்த்திசெய்தருளும் முதன்மையாகிய வேதங்கள் இஃதல்லவென்றும் இஃதாமெனறும் யதார்த்தத்தை தெரியாமல் இளைக்க கடைசியில் ஏகமாய்நின்ற வஸ்துவான சிவபெருமான் மூலஸ்தானமஹாலிங்கத்தினின்றும் வெளியாகவந்து திருவாய்மலர்ந்தருளுவார் (எ-று) மற்று அசை ௧௬

வேறு.

இசையநந்தமைவழிபடும்வேதியவிவ்வூர்
நசையொழித்தியாமலைமகளுமையொடுநலஞ்சேர்
திசைவயிற்படர்ந்துளத்தினுக்கிசையிடஞ்செல்வேம்
வசையிலாதநின்குடும்பமுநீயும்பின்வருதி.

(இ-பொ-ரை)

நந்திருவுள்ளத்திற் கிணங்க நம்மைவழிபடும் ஏ அந்தண நீ இவ்வூரிலினிவசிக்க வேண்டுமென்னும் இச்சையை விடுவிடு நாமும்பர்வதராஜகுமாரியாகிய உமாதேவியோடும் நன்மையான திசைகளில் நடந்து நமததிருவுள்ளத்திற்கிசைந்த வோரிடத்திற் செல்வோம் ஆதலால்குற்றமில்லாத உனது குடும்பமும் நீயும் பின்னே வருவாயாக (எ-று) கள

தொழுகுலத்கில்வந்திழிகுலத்தியற்கையைத்தொடர்ந்து
பழுதியற்றிநீர்பருத்தியுட்பாச்சியபதக
ரழுதாற்றநம்மாணேயினுருமினோடதிர்கன்
மழையிறைப்பவூர்பாழ்படுமாய்ந்தெனவழங்க.

(இ-பொ-ரை)

யாவரும் வணங்குந்தன்மையையுடைய பிராமணகுலத்திலே பிறந்தும் அதற்குரிய நல்லொழுக்கமில்லாது தாழ்ந்த குலத்தினர்செய்யுங் கிழான தொழிலேயனுசரித்துக் குற்றஞ்செய்து ஜலத்தை நீர்வேண்டாத பருத்திச்செடிக்கு இறைத்த அப்பாதகர்கள் வாய்விட்டழ நம்மாக்ஞையால் மிக்க ஒலியையுடைய இடியோடும் கல்மழைபொழிந்து யாவரும் மாண்டு அவ்வூரும் பாழாய்ப் போகும் என்று திருவாய்மலர்ந்தருள (எ-று) கஅ

தேவதேவநங்கிலகநாயகதெரிந்த
மூவர்வானவரருந்தவர்யோகியர்முனிவ
ரோவருந்தொடராவுனேயெங்ஙனந்தொடர்வேன்
றூவியன்னமன்னுளொடும்போம்வழிதருவி

(இ-பொ-ரை)

மஹாதேவா திருவாப்புடையீசனே தெரிந்த மும்மூர்த்திகளும் மற்றைய தேவர்களும அரிய தவசிகளும் யோகீசுவரர்களும் முனிவர்களும் மற்ற யாவரும் தொடர்ந்தறியக்கூடாத தேவரீரை சிறகுகளையுடைய அன்னம்போலும் உமாதேவியோடும் செல்லும் மாரக்கத்தைத்தேடி எவ்வாறு பின்றொடர்ந்து நான் வருவேன் (எ-று) கக

என்றுகூறலுமிறையுளமகிழ்ந்தியாமேகுந்
தன்றுநீணெறியிடத்தினம்விடையடிச்சுவடும்
பொனறுெடுத்தனகொன்றைநாண்மலருமுன்பொருந்துந்
தென்றமிழ்த்திருநாட்டினிக்குறிவழிசேறி.

(இ-பொ-ரை)

என்றிவ்விதமாமர்ச்சகர் சொல்லவும் ஆப்புடையீசர் திருவுளமகிழ்ந்து நாம் ?ாகும் தருக்கள்செறிந்த நீண்டமார்க்கத்தில்

தாம் ஆரோகணித்துச்செல்லும் ரிஷபவாகனத்தி னடிச்சுவடும் அவ்வடிச்சுவடுதோறும் பொன்னையே பத்தியாய்த்தொடுத்திருப் பதுபோல அன்றலர்ந்த கொன்றைப்புஷ்பமும்சேர்ந்திருக்கும் ஆக லாலிவ்வடையாளங்கொண்டு தென்தமிழ்நாடாகிய பாண்டிநாட் டில் இவ்வடையாளப்படியே நம்மிடம்வந்து சேருவாயாக (எ-று)

எனவுரைத்தணியாப்பனூர்த்திருவுருவிலிங்கந்
தனைமறைத்துமையாளொடுஞ்சேயொடுந்தாவுந்
தனைவிடைப்பரிமேற்கொடுநடந்தனன்சுருதி
முனைவனுத்தமன்பசுபதிபரமனைம்முகத்தோன்.

இ-பொ-ள.

வேதநாயகராகியும் தேவதேவோத்தமராயும் பசுபதியாயும் மேலானவராயும் பஞ்சவக்த்ரங்களையுடையவருமாகிய பரமசிவ ன் என்றிவ்வண்ணங் கட்டளையிட்டருளி அழகிய திருவாப்பனூரி ல் எழுந்தருளியிருக்கும் சிவலிங்கசொரூபத்தை மறைத்து உமா தேவியோடும் விநாயகர் சுப்பிரமணியர்களாகியகுழந்தைகளோடு ம் விரைந்துசெல்லும் பெருமைபொருந்திய ரிஷபவாகனத்திலா ரோகணஞ் செய்துகொண்டு நடந்தார் (எ-று) உ௧

அந்தவேலையினருச்சகனகங்குழைந்தவ்வூர்ச்
சந்தநான்மறைக்கிழவர்தம்வீதியைத்தணந்து
முந்தைவீதியினிடந்தொறுங்குறுகியேமுக்கண்
எந்தையாப்பனூரிறையவர்மொழியிதென்றியம்பும்.

(இ-பொ-ள)

அச்சமயத்தில் அருச்சகர் மனமுருகி யத்திருவாப்பனூரிலுள் ள இசையமைந்த நான்கு வேதங்களையும் அத்தியயனஞ்செய்தற் குரியவர்களாகிய பிராமணவீதியினின்று நீங்கி பழமையான வீ திகடோறுஞ் சென்று நானிப்போது சொல்லப்புகும் வார்த்தை கள் திரிநேத்திரங்களையுடைய எமது கடவுளாகிய திருவாப்புடை யீசர் அருளியதாகும் என்று சொல்லுவார் (எ-று) ஏ அசை உஉ

சிற்பரன்திருநாமமுச்சரிப்பவர்திருநீ
றற்புடம்பினிலணிபவரவனையர்ச்சிப்போர்
கற்பின்மேம்படுவனிதையர்யாவருங்கழறு
மிற்பனீங்கிதுசத்தியஞ்சத்தியங்கேண்மின்.

(இ-பொ-ள)

அறிவாகாரமாய்விளங்கும் பரமசிவனது திருநாமங்களையுச் சரிப்பவர்களும் அன்புடன்சரீரத்தில் திருவெண்ணீற்றை யணிப வர்களும் அச்சிவபெருமானை பூசிப்பவர்களும் கற்புநிலைவழாத

புண்ணியஸ்திரீகளும் ஆகிய யாவரும் இங்கே நானொருஉண்மை சொல்லுகிறேன் கேளுங்கள் சத்தியம் சத்தியம் (எ-று) ௨௩

மதிமுடித்தநங்கிலகநாயகர்வயனெற்
பதர்பிடிப்பநீர்பருக்தியினிறைத்தநூற்பனவர்
சிதைவுறப்பெருங்கன்மழைமுயுருமொடுஞ்சிந்திப்
பதியறக்கெடும்போமினப்பாலெனப்பகர்ந்தான்.

(இ-பொ-ள)

சந்திரனைத்தரித்த ஜடாமகுடத்தையுடைய நமது வேதநாயகராகிய திருவாப்புடையீசரது நன்செய்யிலுள்ள நெற்களெல்லாம் பதராய்ப்போக ஜலத்தைப்பருக்கிச் செடிக்கிறைத்த பூணூலணிந்த அப்பிராமணர்கள் யாவரும் அழிய மிகுதியான கல்மழையானது இடிகளோடும் வருஷித்து அத்தலமிவ்வூர் ஒன்றுமில்லாமற் பாழாய்ப்போகும் ஆதலால் மேற்சொல்லியயாவரும் இவ்வூரைவிட்டு வெளியேபோய்ப் பிழைத்துக்கொள்ளுங்கள் என்று சொன்னார் (எ-று) ௨௪

சொன்னவாசகஞ்செவிநுழைந்திடத்தூயோ
ரனைமாநகர்துறந்துசென்றயனகரடைந்தார்
பின்னர்மூடருமறுதொழிற்குரியநம்பெயரா
தென்னிதாகுமென்றிகழ்ந்தனரிற்கணேயிருந்தார்.

(இ-பொ-ள)

இவ்வாறர்ச்சகர் கூறிய வார்த்தைகள் காதுகளிற்புகுந்திழுக்க மேற்கூறிய பரிசுத்தமுள்ள யோக்கியர்கள் விசாலமான அத்திருவாப்பனூரைவிட்டு நீங்கிப்போய்ப் பக்கங்களிலுள்ள நகரங்களிற் சேர்ந்தார்கள் பின்னர் அறிவீனராயுள்ளவர்களும் ஆறுதொழிலையுடையவர்களாகிய பிராமணர்களும் அர்ச்சகன் சொல்லுமிவ்வார்த்தை பிரயோஜனப்படாது என்றிகழ்ந்தவர்களாய் வெளியே போகாது வீட்டிலேயேயிருந்தார்கள் (எ-று) ௨௫

பிராமணருக்குரிய ஆறுதொழிலாவன. வேதமோதுதல், வேதமோதுவித்தல், யாகஞ்செய்தல், யாகஞ்செய்வித்தல், தானம் வாங்கல், தானங்கொடுத்தல் என்பதாம்.

ஆதிசைவரின்மாசிலான்மனைவிபாலரை
சேரதயேகியவருமொழிபகர்ந்தவளோடும்
போதுநன்னெறிவிடையடிச்சுவடுகண்பொருந்த
நாதனார்திருவருணினைந்தகநேசநடந்தான்.

(இ-பொ-ள.)

பின் ஆதிசைவர்களுள் யாதொருகுற்றமுமில்லாத அவ்வர்ச்சகர்

திருவாப்புடையீசர் தமக்குத் திருவாய்மலர்ந்து சென்ற இருபாலசனங்களை மனையாளிடத்திற்சொல்லி அவளோடும் போகும் நல்ல மார்க்கத்தில் சுவாமியார் வாகனாரூடராய் எழுந்தருளும் ரிஷப வாகனத்தினது அடிச்சுவடும் அச்சுவடுதோறும் கொன்றைப்புஷ்பமுந் தோன்றக்கண்டு சிவபெருமானது காருண்ணியத்தை நினைந்து நினைந்து மனங்கலந்து நடக்கின்றார் (எ-று) உசு

அக்கணத்தெழுமுகிற் குலமரனதாணையில்வான்
மிக்கெழுந்துசமுழக்கெனமப்பசைதவெருவத்
தக்கபாதலத்தாவினையுநெளிதரவெண்
டிக்கயங்களுஞ்செவிடுபடத்தனதிரண்டே.

(இ-பொ-ள்)

அந்தக்ஷணத்திலேயே கடவுள் ஆஞ்ஞையினாலே சப்தமேகங்களும் ஆகாயத்தில் உயர்ந்து யுகாந்தகாலந்தான் வந்ததோ என்று மனிதர் எல்லோரும் பயமடையவும் பாதாளத்திலுள்ள ஆதிசேஷன் சரீரம் நெளியவும் எட்டுத்திக்கிலுமுள்ள அஷ்டகஜங்களும் செவிடுபடும்படியும் கூடிக்கர்ச்சித்தன (எ-று) ஏ அசை உஎ

மீதுவிப்பிரர்விழிமணிசெறித்திடமின்னிக்
காதடைப்படராத்தனவவாகைக்கத்தலைகடிசிற்
பேதமுற்றெதிர்விளப்பவனபெருங்கைவெங்கால
தூதர்விட்டெறிகவண்கலகொலீவதனச்சொரிந்த.

(இ-பொ-ள்)

அப்பிராமணர்களின்மேல் அவர்களின் கண்களிலுள்ள மணியானது நெறித்துப்போகத்தக்கதாய் மின்னிக்காதுகளிரண்டுஞ்செவிடுபட்டுப்போகும்வண்ணம் சத்தித்தன அன்றியும் அவர்களுடைய [illegible] சிக்கிரதத்தில் பின்னப்பட்டு நேராகப்பிளந்துபோகக் கொடிய இயமதூதர்கள் கவணிலிட்டமாசுவைத்து வீசியெறிகின்ற கற்கள் தாமோ இவைகள் என்றுசொல்லத்தக்க கல்மழையைப்பொழிந்தன (எ-று) உஅ

இடிக்குலஞ்சிலைமழையொடுஞ்சிதறிடவெங்கும்
வடிக்குடைவண்சுதைத்திறவியமாடமாளிகைகள்
கொடிக்கொள்கோபுரமாலயமரங்குசெயகுன்றம்
பொடிக்குலத்தொடும்மறைத்தகாந்தனபுரமே.

(இ-பொ-ரை)

அனேக இடிகள் கல்மழையுடனேஎங்கும் சிதற அதனால் வடித்தெடுத்த வெள்ளியசுண்ணத்தடவிய மண்டபங்களும் வீடுகளும் துவஜங்கள் கட்டப்பெற்ற கோபுரங்களும் கோயிலும் சபைக

ளும் கட்டுமலைகளும் புழுதிகளாக அவ்வூர்முழுவதும் யாதொன்று மில்லாமல் தொறுங்கிடப்போயிற்று (எ-று) ஏ அசை உக

மக்கள்பேர்சொலியழைப்பர்மற்றவர்சொரிமழைக்கற்
றொக்கசெம்புண்ணீருடனவரக்கண்டுயிர்சோர்வா
ரொக்கலிறசிறுகுழவியையெடுப்பதற்கோடிப்
புக்கமாளிகையுருமினுவிடிந்துயிர்போவார்.

(இ-பொ-ள)

தங்கள் பிள்ளைகளைப் பெயர்சொல்லி அழைப்பார்கள் அப்போது அப்பிள்ளைகள் பெய்தகல்மழையினாலே பொருந்திய புண்களினின்றும் ஒழுகுகின்ற உதிரத்தோடும் வரக்கண்டு தாங்கள் உயிர்சோர்வார்கள் இடையில் சிறிய குழந்தைகளை வீட்டினின்றும் எடுத்துவருதற்கோடி நுழைந்த அவ்வீடுஇடிவிழுந்ததனால் இடிந்து அதோடு இறந்துபோவார்கள் (எ-று) மற்று அசை உஉ

கருத்தழிந்தியாமருச்சகனிரப்புரைகடிந்து
பருத்தசெய்திதிற்பலித்ததுப்பலனெனப்பகர்வா
ரருத்தியுற்றுயிர்பிழைத்திடச்செய்யிலாப்புடைய
திருத்தலக்கோயிற்கேகொடுப்பதம்பங்கெனநினைப்பார்.

(இ-பொ-ள)

நாம்மதிகெட்டுப்போயர்ச்சகர் இரந்துகேட்டுக்கொண்டவார்த்தையை யவமதித்துத்தள்ளி பருத்திப்பயிர் செய்ததனாலேயே இந்தப்பிரயாசமும் நமக்குக்கிடைத்ததென்று சிலர் சொல்வார் ஆசையுடன் நாமெல்லாரும உயிர்பிழைக்கும்படி செய்வாரேல் அத்திருவாப்புடையீசர்கோயிலுக்கே நமபங்கு நிலங்களைக்கொடுப்போம என்று நினைப்பார் (எ-று) உங

உரியபங்கினுக்குள்ளநீர்நிறைக்கவுமுற்ற
டரிசுதெனனிலாப்புடையவர்கோயிலுட்பட்ட
திரவியங்கவர்ந்தவர்பங்குஞ்செய்கையார்தெரிப்பார்
நரகமுற்றுமகொள்ளாணியங்கவர்க்கெனநவில்வார்.

(இ-பொ-ள)

தமக்குரியபங்குக்குக் கிடைக்கவேண்டிய ஜலத்தையேயிறைத்திருக்கவும கூடாதது யோஜனம் இதுவென்றால் அததிருவாப்புடையீசரது திருக்கோவிலுக்குரிய பொருளைபபறித்தவர்கள் அடையும் பிரயோஜனத்தை யார் இவ்வளவனதென்று கூறவல்லவர் அவர்களுக்கு இருபத்தெட்டுக்கோடி நரகங்களுமே சொந்தக்காணியாகுமென்று சொல்வார். (எ-று) உச

தெய்வநாயகன் வயலில்வெண் சாலியைச்சிதைத்த
வெய்யதீவினைகொடிதென்பர்சிவனருள்விலகாச்
சைவவேதியன் மனைபுகிலயாமெலாந்தலையற்
றுய்யலாமெனவோடுவரிடையில்வீழ்ந்தலைப்பர்.

(இ-பொ-ள)

மஹாதேவனாகிய சிவபெருமானது வயலிலேவிளைந்த வெண்ணிறமுள்ள நெல்லைப் பதராய்ப்போகும்படி கெடுத்த பொல்லாததீவினையானது கொடிதுகொடிதென்பர் சிலர் இன்னும் சிலர் அப்பரமசிவனது திருவருட்பிரசாத நீங்காத அவ்வர்ச்சகருடைய க்ரகத்திற்சென்றால் நாமெல்லோரும் யாதொருதடையுமின்றி யுயிர்பிழைக்கலா மென்றோடுவார்கள் அவ்வாறோடுபவர்கள் மத்தியிலேயே விழுந்திறப்பார் (எ-று) ருரு

முதிருமென்புகண்முரிந்திடமுகந்தலைகரங்கால்.
பிதிரமெய்யெலாங்குருதியந்தாரைநீர்பெருக
வதிருமவானகநின்றுவீழ்சிலைமழைபனறி
யுதிரமாரியுஞ்சொரிந்தெனகிடந்தவவ்வூருள்.

(இ-பொ-ள)

முதிர்ந்த எலும்புகள் தொறுங்கிப் போகவும் முகம் தலைகைகால் எனனும்மிவைகள் சிதறவும் அழகியசரீரமெங்கும் தாரைதாரையாய் இரத்தம்பெருகியோடவும் சப்திக்கின்ற ஆகாயத்தினின்றும் பெய்கின்ற கல்மழை யயமலாமல் இரத்தமழையும் பெய்ததென்றுசெல்லும்படியிருந்தது அவ்வூரில் (எ-று) ருச

மாசிலாவநடத்திலவ்வாப்பனூர்மறைந்து
தேசிலாவகையன்றுதொட்டிருந்ததுசிறந்தோர்
பேசிலாமுதனையவாப்புடையவெமபெருமா
ஞசிலாலவாய்ப்பெருந்திருநகர்வயினணுகி.

(இ-பொ-ள)

வலியகல்மழையினால் அத்திருவாப்பனூர் மூடிப்போய் அதுமுதல் பிரகாசமில்லாமலே யிருந்தது இஃதியபடியிருக்கக்கலவி கேள்விகளிற் சிறந்த பெரியோர்புகழ்ந்து சொல்லுகின்ற மாதுரியநிறைந்த தேவாமிர்தம்போன்ற தமது திருவாப்புடையீசர் குற்றமற்ற பெரிய திருவாலவாயென்னும் மதுரையம்பதியையடைந்து (எ-று) ருரு

மருச்சமழ்கொன்றைவனமலிவைகையின்வடபா
லருக்கவுன்னினடைபொழுதடைவதாயகனித்
திருக்களாவனதிருப்படுநலமன்னச்செப்பி
யருக்கதன்மலர்வேணியனடிடணிந்தைய.

(இ-பொ-ள)

வேகவதியின் உத்தரதீரத்தில் நறுமணங்கமழும் கொன்றைவனத்தில் வீற்றிருந்தருளாநின்ற திருவுளங்கொண்டார் அப்போது எம்பெருமானது திருவுளக்குறிப்பை நந்திகேசுரர் உணர்ந்து சுவாமீ இந்த அலங்காரமான கொன்றைவனத்தில் எழுந்தருளியிருப்பதே நன்மையென்று பிரார்த்திக்கத் தேனும் நல்ல எருக்கம்புஷ்பத்தையணிந்த ஜடாமகுடத்தையுடைய அவ்வாப்புடையீசானது திவ்யதிருவடிகளில் நமஸ்கரித்து சுவாமீ (எ-று) ௬௬

இத்தலப்பெயரென்பெயராகவீங்குறைபு
மத்தநின்றிருநாமமுமதற்கிசைபெயரா
யுத்தமப்புவியிடபபுரேசனென்றுரைப்ப
நித்தமாவரந்தருகெனக்கொடுத்தனப்பின்னிமலன்.

(இ-பொ-ள.)

இந்தஸ்தலத்தின் பெயர் அடியேன் பெயரை முதலிலுடைய இடபபுரமாகவும் இவ்விடத்தில் எழுந்தருளும் ஐயனே தேவரீர் திருநாமமும் அதற்கிசைந்தபெயராய் உத்தமமான இப்பூவுலகில் இடபபுரேசனென்றியாவரும் சொல்லவும் என்றும் அழியாதபெருமைபொருந்திய வரத்தைத்தந்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க அவ்வாறுகொடுத்து பின்னரும் மலரஹிதராகிய அச்சிவபிரான். (எ-று) ௬௭

இன்னமோர்வரந்தருதும்யாமென்னவெம்பெருமான்
மன்னுதென்றிசைக்கிழ்பொ [illegible] சந்
துன்னுதீர்த்தமொன்றுனபெயராற்கண்டருளி
பன்னியப்புனலாலெமையாட்டெனப்பணித்து.

(இ-பொ-ள)

இன்னும் நாம் ஒருவரங்கொடுக்கின்றோம் அஃதென்னவெனில் நாம் நிலைபெற்று எழுந்தருளியிருக்கும் ஸ்தானத்திற்குத் தெக்ஷிணபாகத்தில் ஓம்புவித்து குதிக்கும் தாமரைகள் நெருங்கிப் புஷ்பித்திருக்கும் ஓர் தீர்த்தத்தையுன் பெயராலேயே செய்து வேதங்களால் துதிசெய்து அந்தந்தீர்த்தத்திலுள்ள ஜலத்தினால் நம்மை அபிஷேகிப்பாயாக என்று கட்டளையிட்டருளி (எ-று) ௬௮

இடவதீர்த்தத்தைததெரிசிக்கிற்பரிச்சிக்கிலினிமை
தொடரவுடகொளிற்குடைந்து நறமுதற்றொகைநா
ளுடையமெய்ப்பயனடைவரீதுண்மையென்றுரைத்து
வடிவினமேம்படுநந்தியைமனமகிழ்வித்து.

பின்னரும் இவ்விடபதீர்த்தத்தைக்கண்களால் பார்த்தால் தர்மத்தையும் கையால் தீண்டினல் பொருளேயும் அன்போடுகொண்டால் இன்பத்தையும் அதில் ஸ்நானஞ்செய்தால் மோக்ஷத்தையும் உண்மையாக அடைவர் இதுசத்தியம் என்று திருவாய்மலர்ந்தருளி அழகுமிகுந்த நந்திகேசுரரைச் சந்தோஷமடையச்செய்து (எ-று) ௧௯

அம்பிகைகுரவங்கமழ்குழலணங்கவள்சேய்
தும்பிமாமுகன்றன்னெடிைங்கமர்ந்தனன்சுருதி
யெம்பிரானணியாப்பனூரிறையவனிமையோர்
தம்பிரானுமைதனிப்பிரான்சராசரத்தலைவன.

(இ-பொ-ள)

எமது வேதநாயகரும் அழகிய ஆப்பனூரிலெழுந்தருளிவிளங்கும் கடவுளும் தேவர்களுக்கிறைவரும் உமாதேவியினது ஒப்பற்ற நாயகரும் சரம்அசரம் என்னும் இருவிதமான ஜீவர்கட்கும் மேலானவரும் ஆகிய திருவாப்புடையீசர் அம்பிகையாகிய குரவங்கமழ்குழலம்மை யவ்வம்பிகையின் புத்திரர்களாகிய யானைமுகவிநாயகமூர்த்தி முருகக்கடவுள் என்னும இவர்களுடன் அவ்விடபபுரத்திலெழுந்தருளினர் (எ-று) ௨0

வேறு.

ஆதிநாளிடவபுரப்பேரானகாதைவரவிதுசொற்றோ
ரீதிலசொலொருகவிகற்றோரீறிலாதபொருள்செவியுற்றோர்
வேதநாதர்கயிலைவரைக்கேகமவிவாழ்வரெனமுனிவர்கட்கே
சூதனோதவனிருபொற்றாள்சூடினாகடமதுசிரததே.

இ-பொ-ள

முற்காலத்தில் இடபபுரமென்னும் நாமமுண்டான சரித்திரத்தினவரலாறாகிய இதைப்பிறர்கேடகச்சொனனவர்களும் இப்புராணத்திற்கூறும ஓர்செய்யுளைக் கற்றவர்களும் அச்செய்யுளின் முடிவில்லாத வியாக்கியானங்களை காதால் கேட்டவர்களுமவேதநாயகராகிய சிவபெருமான் எழுந்தருளிவிளங்கும் திருக்கைலாசமலையையடைந்து சுகமாய்வாழ்ந்திருப்பர் என்று நைமிசாரண்யவாசிகளுக்குச் சூதமஹரிஷியருளிச்செய்ய அது கேட்ட அந்தைமிசாரண்யமஹரிஷிகள ஞானசாரியராகிய சூதபுராணிகரது அழகிய திருவடிகளைததமது சிரசின்மேற் பேரானந்தத்துடன சூட்டிக்கொணடார்கள். (எ-று) ஏ ஏ அசை ௨௧

இடவபுரச்சருக்கம் முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் உ௪அ.

# அன்னவினோதச்சருக்கம்.

:o:

பின்னர்முனிவராப்பனூர்ப்பெருமானிடவபுரநாத
னன்னவினோதனெனுந்திருப்பேரடைந்தநிலையிங்கருளென்னச்
சொன்னமொழியாற்சூதமுனிசுடர்ச்செஞ்சடிலமுடிதுளக்கிக்
கனன்மதரம்பழுத்தனையகதைநீர்கேண்மினெனமொழிவான்.

(இ-பொ-ள)

பின் அந்நைமிசாரண்யவாசிகள் திருவாப்பனூரிலெழுந்தருளிவிளங்கும் திருவாப்புடையீசரும் இடவபுரத்தில் வீற்றிருந்தருளும் இடவபுரேசருமாகிய பரமசிவன் அன்னவினோதனென்னுந்திவ்விய திருநாமத்தைப் பெற்றதன்மையை இப்போதடியேங்களுக்குத்திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்துகொள்ள அம்மஹரிஷிகள் கூறியவார்த்தையால் சூதபுராணிகர் பிரகாசம்பொருந்திய சிவந்த ஜடாமகுடமுள்ள சிரசை யானந்தத்தால் அசைத்து நீங்கள கரும்பினமாதுரியமானது மிகமுதிர்ந்தாற்போன்ற ஆச்சரித்தைக்கேளுங்களென்று சொல்ல ஆரம்பித்தார் (எ-று) க

உம்பர்தொழுங்கந்தரனுப்பனூர் நின்றிடவபுரத்தினமர்ந்
திம்பர்வணங்கவிருந்ததற்பினிறைவனடியர்ச்சனைபுரியு
நம்பிசிவவேதியர்திலகனலங்கூர்குடும்பத்துடனடந்தே
யம்பொன்சடிலரளித்ததிருவடையாளத்தினெறிச்செல்வான்.

(இ-பொ-ள)

தேவர்களெல்லாரும் வணங்குகின்ற காளகண்டத்தையுடைய ஆப்புடையீசர் திருவாப்பனூரிலிருந்து இடவபுரத்தில் விரும்பி இவ்வுலகத்தவர் யாரும் வணங்கும்படி வீற்றிருந்தருளியபின் அத்திருவாப்புடையீசர் திருவடிகளைப் பூசிக்கின்ற ஆதிசைவபிராமணர்களுக்குட் சிறந்தவருமபுருடரிற் சிறந்தவருமான அர்ச்சகர் நன்மைமிகுந்த குடும்பத்துடனே நடந்து அழகிய பொன்போன்ற ஜடாபாரத்தையுடைய திருவாப்புடையீசர் கொடுத்த அடையாளத்தின் வழியே செல்வாராயினர் (எ-று) உ

நடக்கும்வழிமேலரிபிரமர்நயனங்களிகூர்தரவணங்கக், கிடக்கு
ந்தருமவிடைப்பெருமான்கிளர்காற்சுவடும்பொற்பூவுந், தடக்குங்
குமப்பூண்முலைமணையாடன்டாறகாட்டிவிரைந்துவிணணி, நடக்கு
சடையாரசேவடியீதார்க்குக்கிடைக்குமெனத்தொழுவான்.

(இ-பொ-ள)

அவ்வாறு நடந்துசெல்லும் மார்க்கத்தில் மஹாவிஷ்ணு பிர்மதேவர் இவர்கள்கண்கள் கண்டுகளிக்கவும் வணங்கவும்இருக்கின்ற

தந்தமதேவதையாகிய ரிஷபதேவரது அடிச்சுவடும் அதனருகே சுவடுதோறும் பொன்மயமாகிய கொன்றைப்புஷ்பமும் தமக்கு முன் ஆக்ஞாபித்தருளியவாறே யிருப்பதைத்தம் பின்வரும் குங்குமக்குழம்பினையும் ஆபரணங்களையுந்தரித்த மலைபோன்ற ஸ்தனங்களையுடைய பத்தினியிடத்தில் காட்டிக்காட்டித் தேவகங்கையையடக்கித்தரித்த ஜடாமகுடத்தையுடைய நமது பரமசிவத்தினது திவ்யதிருவடிகளாகிய இவை யாருக்குக்கிடைக்குமென்று விரைவாய் வணங்கினர் (எ-று) ௩

தொழுதுதொழுதமணிவிழிநீர்துளும்பத்துளும்பத்தடித்துநடித், தழுதழுதுளைந்துருகிமகிழ்ந்தாரானமையினலடிச்சுவடு, முழுதுங்கண்மேலொற்றியொற்றி முதிர்கற்புடையாளுடன் சிவன்பே, ரொழுதநாவனநன்வழிச்சென்றிடவபுரந்தனையடைந்தானல்.

இ-பொ-ளா.

வணங்கிவணங்கி அழகியகண்களினின்றும்ஜலமானது ததும்பித்ததும்பிவழிய ஆனந்தக்கூத்தாடியாடபுலம்பிக்கரைந்து உளமுடைந்து ஆனந்தமடைந்து ஆராமையால் அவ்வடிச்சுவடுகளையெல்லாம் தம்கண்களில் ஒற்றியொற்றி மிகமுதிர்ச்சிபெற்ற கற்புத்தன்மையையுடைய நாயகியோடும் சிவநாமங்களையே சதா உச்சரிக்கும் நாவையுடைய அவ்வர்ச்சகர்தமக்குக் கிருபையுடன்காட்டிய அவ்வழியேசென்று நந்தநகரத்தையடைந்தார் (எ-று) ஆல் அசை ௪

அந்தண்கைலைமலைமருந்தையமுதையமரர்சிகாமணியைச் செந்தண்பவளச்சிவக்கொழுந்தைத் திருவாப்புடையபெருமானை மைந்தர்மலைமாதொடுமிடவமடுநீரொடுங்கண்டதிசயித்துச் சிந்தைமலர்ந்துகுவித்திருகை சிரமேற்கூடியீதுரைப்பான்,

(இ-பொ-ளா)

அழகிய குளிர்ச்சிபொருந்திய திருக்கைலாசமலையிலுள்ள சஞ்சீவியாகியும் தேவாமிர்தமாகியும் தேவர்களுக்கெல்லாம் சிரோரத்னமாகியும் செவ்விய குளிர்ச்சிபொருந்திய பவளம்போலுந்திருமேனியையுடைய சிவக்கொழுந்தாயும் விளங்கும் திருவாப்புடையீசனைத் திருக்குமாரர்களோடும் பர்வதராஜகுமாரியாகிய குரவங்கமழ்குழலம்மையோடும் ஆழ்ந்த ரிஷப தீர்த்தத்தோடும் தெரிசித்து ஆச்சரியமு மனமகிழ்ச்சியுமடைந்து இரண்டுகைகளையும் சிரசிலஞ்சலியாகக்கூப்பி இதனைச்சொல்வாராயினர் (எ-று) ௫

வாயுளிருக்குநான்மறையோய் வானுளிருக்கும்பெருந்தேவ ராயுளிருக்குமணிமிடற்றோ யறிவுளிருக்குந்திருவுருவோய் வேயுளிருக்குமணிபசுந்தோள் விமலைகுரவங்கமழ்குழலெந் தாயுளிருக்குமொருபுறத்தோய் தர்தாய்வழிநான்வந்தேனல்.

(இ-பொ-ள்.)

திருவாயிலிருக்கும் இருக்குமுதலிய நான்குவேதங்களையுடையவரே தேவலோகத்தில் வசிக்கும் பெருமைபொருந்திய தேவர்கள் ஆயுசை நிலைபெற்றிருக்கச்செய்த அழகிய காளகண்டத்தையுடையவரே அறிவுவடிவமாய் விளங்குபவரே மூங்கிலையொத்த அழகிய ப்சிய தோள்களையுடைய மலரகிதமுள்ள குரவங்கமழ்குழலம்மையாகிய எமது தாய்வீற்றிருந்தருளும் ஓர் பாகத்தையுடையவரோ தேவரீர் அடியேன் வருகிறதற்கு மார்க்கத்தைக் காட்டியருளினீர் அவ்வழியேவந்துசேர்ந்தேன் (எ-று) ஆல் அசை ௬

வந்தேனுனையாளுட்டேதற்குவைவையைநீருண்டருச்சனைக்குச்
செந்தேன்மலருண் டிவ்வனத்திற்றேவேயரியதிருவமுதுக்
கந்தோயாதுண்டென்னிடையேயறியாய்கொல்லோசிறுவிலைநாட்
டந்தாதரிப்பார்யாரியானித்தலத்திலறிந்ததுனையன்றே.

(இ-பொ-ள்)

இவ்வாறு வந்தவனாகிய அடியேன் தேவரீரை அபிஷேகஞ்செய்வதற்கு வையைநதியில் ஜலமிருக்கிறது அர்ச்சிப்பதற்கு இக்கொன்றைவனத்தில் செவ்வியதேனொழுகுகின்ற புஷ்பங்களிருக்கின்றன சுவாமீ அருமையாகிய மஹா நைவேத்தியத்திற்கு அடியேனிடத்தில் என்ன இருக்கிறது ஐயோ இதனைத்தேவரீர் அறியீரோ இந்தப்பஞ்சகாலத்திலே வேண்டியவற்றைக்கொடுத்து யார் ஆதரிப்பார், அடியேன் இந்தஸ்தலத்திலறிந்தது தேவரீரையல்லவா. (எ-று) ௭

உண்ணுவமுதேயுனைப்பூசித்தன்பனெனதுவிருத்தியவை
பண்ணுதொழியிற்சீவனமெப்படியென்றிரந்துமொழிந்திடலுங்
கண்ணூர்காணவருவுருவின் காட்சியிலிங்கத்திடைத்தோன்றிப்
பண்ணூர்மறையோய்வந்தனையோபாவையோடுமென வினவி.

(இ-பொ-ள்)

உண்ணமுடியாத தேவாமிர்தமாயுள்ள தேவரீரை முன் பூஜைசெய்து பின் உண்பதுதான அடியேன் நூலவிருத்தியாதலால் அது செய்யாவிடின் எப்படி ஜீவனஞ்செய்கிறது என்று தங்குறைகளைச்சொல்லிப் பிரார்த்திக்கவும் கண்களாற் பார்த்தற்கருமையான திருவுருவத்துடன் பிரத்தியக்ஷமாகச் சிவலிங்கத்தினின்றுந்தோன்றி இசைபொருந்திய வேதங்களை யோதியுணர்ந்த ஏ பிராமணோத்தமனே உன் குடும்பசகிதமாய்வந்து சேர்ந்தாயா என்று வினவியருளி (எ-று) ௮

உரிவவாப்பனூரிடைநின் றுயர்வெள்விடையினடந்திங்ஙன்
மருவியாட்சிபெறவிருந்தேம்வருந்திவிடைத்தேகெனவந்தித்

தரியதலமாதியமூன்றமடியேன்பெயர்கொண்டருளுகெனப்
பரிவினுரைப்பமகிழ்ந்தவரம் பாலித்தேமிப்பார்விளங்க.

(இ-பொ-ரை)

நமக்குரித்தாயிருந்த திருவாப்பனூரினின்று நீங்கி மேன்மை பொருந்திய வெண்மையான ரிஷபதின்மீதாரோகணஞ்செய்து நடத்திவந்த இவ்விடத்திற்சேர்ந்து ஸ்காபிதமாக வீற்றிருந்தருளினேம். அப்போது வருத்தமுற்ற நமது நந்திதேவன் நம்மைவணங்கிச் சுவாமி அரிய ஸ்தலம, தீர்த்தம், மூர்த்தி யென்னும் மூன்றும் அடியேன்பெயரால் விளங்கவேண்டுமென்று விரும்பிப் பிரார்த்தித்துக்கொள்ள நாமும் சந்தோஷித்து இவ்வுலகத்தில் விளங்கும்படி வரத்தைக்கொடுத்தருளினேம் (எ-று) க

இப்பானீவேண்டுறும்பொருளுக்கிந்தவேகவதிமணலுன்
கைப்பால்வாரிக்கொடுவனமட்கலனிட்டறலிட்டுலேயேற்றி
வெப்பார்கட்டத்தெரிமூட்டிமெய்யனபுறத்தியடிலமுதாத்
தப்பாதனேயெமக்குநிவேதனஞ்செய்தனையிற்கொடுபோதி.

(இ-பொ-ரை)

பின் நீ வேண்டிக்கொண்ட விஷயத்திற்கு இந்தவைகையாற்றிலுள்ள மணலே உன் கையால்வாரிக்கொண்டுவந்து மண்ணுலாகிய ஓர்பாத்திரத்திலிட்டு அதில் ஜலத்தையும் பெய்து அடுப்பில்வைத்து வெவ்விய விறகில் அக்னியை மூளச்செய்து யதார்த்தமான பக்தியைச்செலுத்திச்சமைத்தால் தவறாமல் அன்னமாகும் அவ்வன்னத்தை நமக்கு நிவேதனஞ்செய்து பின் அப்பிரசாததை உன வீட்டிற்குக் கொண்டுபோய் (எ-று) ௨

கற்புக்குரிய துணைவியொடுங்காதற்குரியபுதல்வரொடு
மற்புக்குரியநீயுமகிழ்ந்தருந்தியருந்தியெமைவழிபட்
டிற்புக்குறைவாயீதியார்க்குமிசையேலிவையெ பகல்வெளியாஞ்
சொற்புக்குறுமப்பகலடிசில் தோன்றுநிருக்குஞ்சொன்னேமால்.

(இ-பொ-ரை)

கற்பிலேசிறந்த உன்மனையாளோடும் ஆசைக்குப்பாத்திரமாயுள்ள புத்திரரோடும் மெய்யன்புடையநீயும் மனமகிழ்ந்துண்டு நம்மையும் தொழுதுகொண்டு உன வீட்டிற்குச்சென்று வசிப்பாயாக இவ்விரகசியத்தை எவருக்குஞ் சொல்லாதே இந்த விஷயம் எந்த தினத்தில் வெளியாய்ப் பிறர் கேட்கலாச்சதோ அன்றுதின முதலாக அன்னமாகமாட்டாது மணலாகவேயிருக்கும் சொன்னேம் (எ-று) ஆல் அசை கக

ஈகெலாமுன்பொருட்டுனைத்தேமென்றேயிவிக்கத்தட்புகு
சாதனிட்பபுரப்பரமனல்குங்கருணைத்திறம்போற்றிச்

சிதமலிவைவயையிற்படிந்ததிருவெண்மணல்வேண்டிபெடுத்துக்
காதனீர்விட்டுலைப்பெய்துகனல்வாய்த்துவரிட்டடப்புகுந்தான்.

(இ-பொ-ளை)

ஏ பிராமணோத்தமா இவைகளை யெல்லாம் உனக்காகத்தான் சொன்னேம் என்று திருவாய்மலர்ந்து அச்சிவலிங்கமூர்த்தத்தினிடமாக அந்தர்த்தானமாக எட்டொருட்குமிறைவராகிய இடபபுரத்தில் வீற்றிருந்தருளும் இடபபுரேசா தமக்குப்பிரசாதித்த திருவருட்டிறத்தைத்துதித்து குளிர்ச்சியை யுடைய வையைமாநதியில் ஸ்நானஞ்செய்து அழகிய வெண்ணிறமுள்ள இவ்வாற்றுமணலை வேண்டியவளவுகையாலெடுத்து மட்பாத்திரத்திலிட்டு அன்போடும் தண்ணீரைப்பெய்து உலையேற்றி அக்கினியினிடமாக விறகைவைத்துச்சமையல் செய்ய ஆரமபித்தார் (எ-று) ஏ அஉச சஉ

அடும்போதானைதஞ்சுமமுதாக்குமணியையருபொருளை
நெடுமபோதுளத்தினினைத்திடனுநெற்பாலடிசிலெனப்பாகம்
படும்போதன்னமறியாதபரனையாட்டிதருந்தேன்வாய்
விடும்போதச்சித்தன்னமுநிவேதித்திறைஞ்சிமனைபுகுந்தான்.

(இ-பொ-ளை)

அவ்வாறு சமையல்செய்யுங்கால் அனேகரையரிப்பவராகியும் விஷத்தையும் அமுதாகவாக்கிக்கொண்ட மாணிக்கம்போன்றவராகியும் யாருமடைதற்கரிய பரம்பொருளாகியுமுள்ள இடபபுரேசனை நெடுநேரமளவும் மனத்தில் தியானித்துக்கொண்டிருக்க நெல்லினிடமாக ஆக்கும் அன்னத்தைப்போலப் பக்குவமாகும் சமயத்தில் பிரமதேவராகிய அம்சப்பக்ஷியால் அறியப்பெறாத திருமுடியையுடைய அவ்விடபபுரேசனை அபிஷேகஞ்செய்து நறியதேன் வாயினின்றுந்துளிக்கின்ற புஷ்பங்களினல் பூஜித்து அன்னத்தையும் நிவேதனஞ்செய்து வணங்கித் தம்வீட்டிற்குப் போனார் (எ-று) சங

அணியாப்புடையார்கொடுத்ததிருவமுதைக் குடும்பத்துடனருந்தித், தணியாடபசிதீர்த்தகத்துவகை தழைத்துலகம்வியவாதப், பணியாற்சைவனியற்றிவருநாளிலொருநாடபரந்தபசிப், பிணியாற்றமிழ்நாட்டுயிர்வருந்தும்பெற்றியார்த்தங்கவன்மனையான்.

(இ-பொ-ளை)

பெருமைபொருந்திய திருவாட்புடையீசர் தந்தருளிய பிரசாதத்தைத் பத்னி குழந்தைகளுடன உண்டு தணியாத உதராக்கினிதணிந்து மனதில் மிகுந்த மகிழ்ச்சியடைந்து ஊர்ச்சங்கதிகள் ஒன்றையும் விசாரியாது அத்திருவாப்புடையார் கட்டளையினல் நடத்திவருங்காலத்தில் ஒருநாள் பசிவியாதியால் இப்பாண்டிதேச

த்திலுள்ள சகலஜீவர்களும் மிகத்துன்பமடையுந்தன்மையை அ
வ்வர்ச்சகரது மனையாள் பார்த்து (எ-று) கச

காந்தனிடத்தினைவணி நகண்களிப்பச்சிலம்புபுலம்பநறுஞ்
சாந்தமணிந்தகனைந்ததம்பத்தகம்பநடந்தவரிக்குயிலும்
வாய்ந்தகிளியும்வாயடைப்பமதுரந்தளிப்பமலர்முருக்கிற்
சேர்ந்தபவளமணிச்செவ்வாய்திறந்தாடிறந்திங்கிவைகேட்பாள்

(இ-பொ-ள)

தந்நாயகனிடத்தில் அவரது இரண்டு கண்களும் பார்த்துச் சந்தோஷிக்கவும் காலிலணிந்த சிலம்புகள் கல் கல என்று சப்திக்கவும் நறுமணக்கமழும் சந்தனக்குழம்பு பூசிய அழகிய ஸ்தனக்களிரண்டுங் குலுங்கக்குலுங்கவுநடந்து வரிகள்பொருந்திய குயிலும் அழகுவாய்ந்த கிளியும் நாணத்தால் தங்கம் வாய் புதைத்திருக்க மாதுரியமொழிக முருக்கம்பூப்போலச் சிவந்த அழகிய பவழத்துண்டம்போலும் செவ்விய வாயைத்திறந்து இவ்வாறு வினவுவாள் (எ-று) கரு

இவ்வூர்மனிதர்பசியென்னுந்தீக்கிலம்பாடெனுநெய்நிறைந்தெழுப்
பெவ்வூர்புகுவோமுய்வதற்கென்றியம்பயாமிவ்வூர்புகுந்தேம் [பி
சைவாங்கிவப்பயானுலக்கையாச்சாதிலக்காத்திருப்பத்
தெய்வீகப்போமுதுகந்தினமுந்தநவதேவனென்றாள்.

(இ-பொ-ரை)

ஏ பிராணநாயகரே இவ்வூரிலுள்ள மனிதர்கள் யாவரும் பசியென்னும் அக்கினிக்குத்தாரதம்மென்கிற நெய்யைப்பெய்து அதனால் உதராக்கினியை விருத்திசெய்து வருந்தியிப்பசிநோய் நீங்கிப்பிழைப்பதற்கு எந்தஊருக்குப்போவோமென்றேங்கிச் சொல்ல நாம் இவ்வூரில் வந்திருக்கின்றோம் அன்றியும் நான் கையிடமெல்லாம சிவக்க உலக்கையெடுத்துக்குத்தாமல் வீட்டையே காத்துக் கொண்டிருக்க திவ்வியமான சிறந்த அன்னத்தை நாடோறும் அதிகமாய்க்கொண்டுவந்து கொடுப்பது எப்படியென்று கேட்டாள். (எ-று) கசு

அமுதினுரைக்குமறுத்தெதிர்சொலாடான்சிறுபோதிருந்துமலர்க்
குமுதமணிவாய்த்திருவேயான்கூறினுலையமுதுதவா
நமதுவிருத்திகெடுமபசித்தீநலமையுந்தொடர்ந்துகெடுமதனாற்
சுமதியுடையாயகேளற்கசடமாவிரு நீயெனச்சொன்னான்.

(இ-பொ-ரை)

அமிர்தம் போலும் மதுரமான வசனத்தையுடைய தந்நாயகியின், வார்த்தைக்குத்தயத்து மறுமொழியொன்றுஞ்சொல்லாதவரா

ச்சிறிதுநேரம் தாமதித்திருந்தபின் செவ்வல்லிமலர்போன்ற அழகியசிவந்தவாயினையுடைய இலக்குமிபோல்வாய் நான் அவ்விரகசியத்தை வெளிப்படையாய்ச் சொல்வனேல் நாளைக்கு அன்னம் கிடைக்காது அதனால் நம்முடைய குலவிருத்தியும் மாறும் ஊரார்எல்லாம் வருத்தும் உதராக்கினியானது நம்மையுந்தொடர்ந்து தகிக்கும் ஆதலால் நல்லறிவுள்ள ஏ பெண்ணே நீ கேளாதே சும்மாயிரு என்றுசொன்னார் (எ-று) கஎ

கேட்டாண் மதிவாணுதற்குறுவேர்வெர்ந்தாள் புகைந்தாளிதழ் துடித்தா, ளட்டாவேற்கட்கடைசிவந்தாள்சிரித்தாள் புருவமேனெறித்தா, ளொட்டாமரைமென்முகம்புலர்ந்தாளண்பா நன்று நன்று சொல்லிச, காட்டாயெனின்யானின்னேயுன்காற்கீழ் விடுவனுயிரென்றாள்.

(இ-பொ ரை)

இவ்வாறுதங்கணவர்கூறியவார்த்தையைக் கேட்டபார்ப்பினியாளவள் மூன்றாம்பிறையையொத்த பிரகாசம்பொருந்திய நெற்றியிலேகுறுவெயர்வையையுடையளானாள் கோபக்குறிப்புடையளானாள் உதடுகள் துடிக்கப்பெற்றாள் தீட்டிய கூரியவேலாயுதம் போன்றகடைக்கண்கள் சிவப்படைந்தாள் கோபநகை நகைத்தாள் புருவங்களைமே லேறநெரித்தாள் அன்றலர்ந்த மிருதுவாகிய தாமரைமலர்போன்ற முகம்வாடினாள் ஏ பிராணநாயகா நீர்சொன்னது நன்றாயிருக்கிறது நன்றாயிருக்கிறது அதைவிபரமாய்ச்சொல்லாவிடின் நான் இப்போதே யுன்காலின்கீழே உயிரைவிடுவேனென்று சொன்னாள் (எ-று) கஅ

அந்தமாற்றஞ்செவிகுடைந்துளாவிப்பதைப்பமனம்பதைப்பப்
பந்தயாக்கைநடுங்கிநம்பார்ப்பனியேபனிமாமதிக்கண்ணி
யெந்தையாப்பனூரிடைப்பண்டியற்றுஞ்செயலுமறிதியவ்வூர்ச்
சிந்தைநீத்திவ்விடையடைந்தசெயலுந்தெரிதிதெரிதியால்

(இ-பொ-ரை)

இவ்விதம் நாயகிகூறிய பழிச்சொல் தம்மிருகாதுகளையுங்குடைந்து உயிரும் மனமுந்துடிதுடிக்கப் பாசத்தனையாலாகிய சரீரமுநடுங்கி யென் பிராணநாயகி குளிர்ந்த பெருமைபொருந்திய சந்திரனை மாலையாகத்தரித்த நந்திருவாப்புடையீசர் அத்திருவாப்பனூரில் முன்செய்த செய்கையையு மறிவாய் அன்றியும் அவ்வாப்பனூரில் வசிக்கவேண்டுமென்ற திருவுள்ளத்தைவிட்டு இவ்விடத்தில் வந்திருக்கிற செய்தியையு நீ நன்றாயறிவாயல்லவா (எ-று) ஆல்-அசை கக

பின்னரணியாப்புடையபிரான்பெருந்தாட்டுணைகைகுவித்திறைஞ்சி, யென்னை வருத்தும் பசிப்பிணிதீர்த்தாளென்றிரப்ப வெதிர்தோன்றிச், சொன்னவுபாயமென்சொல்கேன் சொன்னாற்சுரருமதிசயிப்பா, ரன்னநடையாய்நீகேட்கி லனந்தானந்தமடைதியால்.

(இ-பொ-ள)

பின் அழகிய திருவாப்புடையீசர் பெருமைபொருந்திய இரண்டு திருவடிகளையுங்கைகூப்பி வணங்கிச்சுவாமீ அடியேனை வருத்துகின்ற பசிநோயை நிவிர்த்திசெய்து காத்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க நேரே சிவலிங்கத்தினிடமாய்த்தோன்றிக்கட்டளையிட்டருளிய தந்திரத்தை நானென்னசொல்வேன் அதைச்சொன்னால் தேவர்களுங்கூட ஆச்சரியமடைவர் அன்றி அன்னம்போலுமிருதவான நடையினையுடைய பெண்ணே நீ கேட்டால் அளவில்லாத ஆனந்தமடைவாய் (எ-று) ஆல் அசை உ0

அன்னவுபாயம்யாதெனினந்தனை நீர்வைகவதிமணலை, யுன்னதார்வதிரம்பவெடுத்துலைவைத்தடிலோதனமாகும, பின்னர்நிவேதித்தருந்திநனைப் பிறருக்குரையேலுரைக்கினதி, துன்றுமணலாமெனச்சொன்னான் சொன்னேன்சொன் னேனெனலோடும்.

(இ-பொ-ள)

அத்தன்மைத்தானஉபாயம் என்னவெனின் சங்குகள் உலாவித்திரிகின்ற தண்ணீரையுடைய வையையாற்றிலுள்ள மணலை யுன்னுடைய ஆசைதீரம்ப வாரியெடுத்து உலையேற்றி சமைப்பாயேல் அது அன்னமாகும் பின்பு நமக்கு நிவேதனஞ்செய்து நீ போசனஞ்செய்வாய். இந்த இரகசியத்தையாரொருவருக்குஞ்சொல்லாதே சொல்வாயேல் வையையாற்றிலுள்ள மணலாகவேயிருக்கும் என்று ஆஞ்ஞாபித்தருளினர். சொனனேன்சொன்னேன் என்றவளவில (எ-று) உக

செவ்வாய்க்கமுதாயினவித்நாட்செவிக்குமமுதாயினவென்றே
வைவாயரவமணிந்தபிரானருளுமடிகளருச்சனைசெய்
மெய்வாய்நிறைவேதியனளபும் வியந்தானந்தக்கடற்படிந்தான்
சைவாகமநூன்முழுதுணர்ந்தோனசாவாத்துயரக்கடல்வீழ்ந்தான்.

(இ-பொ-ள.)

அப்பார்ப்பனியித காறும் செவ்விய வாய்க்கு மாத்திரம் அமுதாயிருந்தது இன்று காதுக்கும் அமுதாயிற்று அழகியவாயையுடைய சர்ப்பத்தை யாபரணமாகத்தரித்தருளிய சர்வலோகைகநாயகராகிய அன்னவினோதமூர்த்தியினது திருவருளையும் அக்கடவுளது திருவடிகளைப்பூசிக்கின்ற மெய்ம்மைநிறைந்த தன்நாயகரது பக்தியையும் நினைத்து ஆச்சரியமடைந்து பேரானந்தப்பெருங்

கடலிற்படிந்தான் சிவாகம முதலியசாஸ்திரங்களை முழுதும் ஆராய்ந்தறிந்தவராகிய அவ்வர்ச்சகர் உடனே இறந்துவிடாது மிகப் பெரிய துக்கசாகரத்திலமிழ்ந்தினர் (எ-று) ௨௨

## வேறு.

அப்பகல்கழிந்ததெதிர்பகலிப்பகலடியவர்க்கெளியானை, முப்பர
ம்பொருண்முதல்வனைவழிபடின்முதிர்புனன்மலர்போலுஞ், செப்
புமின்னமுதமைப்பதெப்படியெனத்தெருமராலுறுங்காலை, யொப்
பில்கற்புடைமறைக்கொடிபதிக்கிவையுய்த்துரைத்தனண் மாதோ.

(இ-பொ-ரை)

அன்றுதினம் போகமறுநாளில் இன்றைக்கு அன்பர்களுக்கு எளியவராயும் மேன்மையையுடைய திரிமூர்த்தி பராயுமுள்ள முழுமுதற்கடவுளாகிய அவ்வாப்புடையீசனைவழிபட்டால் அதற்குட்பிரதிதினமும் அமைத்துவைக்கும் முதிர்ந்ததிருமஞ்சனமுமடஷ்பமும் போலசொல்லத்தக்க இனியமஹா நைவேத்தியஞ் செய்வது எப்படி யென்று மயங்கிக்கொண்டிருக்கும் சமயத்தில் நிகரில்லாத கற்பினையுடைய பூங்கொடிபோல் வானாகிய அப்பார்ப்பனி தந்நாயகருக்கு இவ்வாறான வார்த்தைகளைச்சொன்னாள் (எ-று) மாதோ அசை ௨௩

ஐபநீயுயிருடலியானிதனில்வெறுயதென்மருளேன்மற், றுய்ய
நமபொருட்டுரைத்தசொன்மையலாலொருவருமறியார்நீர், வை
கைநானந்தி படிந்துமுன்போலுலை வைத்தடன்மனைற் சோறும
பொய்யுருதரனருண்மொழிபிம்மெனப் போகெனட்புகன்றுளாள்.

இ-பொ-ரை

பிராணநாயகரே நீர் உயிராயிருக்கிறீர் நான் அவ்வுயிர்க்கு உடலாகயிருக்கிறேன் ஆகலால் இதில் வேறானதென்ன மயக்க வேண்டாம் அன்றியும் நாம உயிர்பிழைக்கத்தக்கதாக நம்மாட்டின்புவைத்துக் கட்டளையிட்டருளிய திருவாக்கு நம்மிருவருக்கன்றி வேறொருவருக்குத்தெரியவாராது. ஆதலால் நீர் நன்மையான வைகையாற்றில் ஸ்நானஞ்செய்து முன் செய்வதுபோல உலையேற்றிச்சமையமப்பிரோஸ் அம்மணல் வழக்கம்போல அன்னமேயாகும் அப்பரமசிவன நமக்காக அருளிச்செய்த திருவாக்குத்தவறாது ஆதலால் விரைந்துசெல்லுமென்று சொன்னாள் (எ-று) மற்று ஆல் அசை ௨௪

அம்மொழிப்படியீசனைப்பூசைசெய்யருத்திமுனீர்த்தேகச்
செம்மனத்தவன்கடனகழீஇயந்நதித்திருமணலுலைவாய்ப்பெய்
திமமெனப்புகுந்தட்டில்வாய்த்தவர்முழுதெரிந்தெரிந்தனங்காணு
நம்மைநற்பயனுலந்ததென்றவ்வெரியுமாமுற்றெழச்சோர்வான.

(இ-பொ-ரை)

அந்தவார்த்தையின்படி சிவபெருமானைப்பூசைசெய்யவேண்டுமென்று ஆசையானது முன்னேயிழுத்துச் செல்லக்கலக்கமில்லாத மனத்தினராகிய அவ்வருச்சகர் நித்தியகர்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு அவ்வைகையாற்றின் மணலை உலையிலிடமாய்ப்பெய்து சீக்கிரமாகப்போய் மடைப்பள்ளியில் விறகுகளையெல்லாம் அடுப்பில்வைத்து எரித்தெரித்துப்பார்த்தும் அன்னமாகாமையால் நமக்குப் பூர்வபுண்ணியத்தின் நல்லபிரயோஜனமானது முடிந்துவிட்டதென்று அவ்வடுப்பிலுள்ள அக்கினியானது தன வயிற்றிற் பசியாயுண்டாகச்சோர்வார் (எ-று) ௨௫

சன்னிதிக்கண்வந்தடியறவீழ்ந்தருக்ககைமையிற்பணிந்தேத்தி
யென்னினிச்சொல்வ தனக்கியான்யாவையுமிருந்திடத்தறிவாய்நீ
தென்னவிற்பழிக்கஞ்சிநின றுணர்த்தினனேரிழைதகையன்றூற்
கன்னியுத்தமிக்கொருபுறமளித்ததங்கடவுளேயெனநாதன்.

(இ-பொ-ரை)

பின்பு திருவாப்புடையீசரது சந்நிதானத்தில் வந்து வேரற்றுக்கீழேவிழுகின்ற விருக்ஷத்தினது தன்மைபோலச் சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்துத் துதிசெய்து சுவாமீ தேவரீருக்கு இனியான்சொல்லவேண்டிய சங்கதி என்ன இருக்கிறது தேவரீரெல்லாவற்றையும் இருந்தவிடத்திலேயேயிருந்து தெரிவாய் ஆனாலும் சொல்லுகிறேன தேற்றையநினைத்தில்பழிக்குப்பயந்து நின்று சொன்னேன இது வேதவிரதேசிய ஆபரணங்களைத்தரித்த ஸ்திரீயினது இச்சையினாற்சொன்னேனல்ல அழியாதகற்பினையுடைய உத்தமியாகிய உமாதேவிக்கு ஓர் பாகத்தைக்கொடுத்தருளிய என்தெய்வமே என்று வேண்டச்சாவலோகைக நாயகராகிய திருவாப்புடையீசர் (எ-று) ௨௬

வருத்தமொன் றுறிலடியவர்விரை ந்தெதிர்வந்துநின்றிரந்தோதுங்
கருத்தறிந்தவைமுடிப்பதுவிரதமாங்கண் ணுதலெதிர்தோன்றி
யருத்திகூர்திருமறையவசைவருவதிகவுத்தமகேணி
திருத்தவையயந்துறைமணலமுதடுஞ் செயலினிமுடியாதால்.

(இ-பொ-ரை)

மெய்யன்பர்களுக்கு ஏதேனுமொரு துன்பம் வந்து நேர்ந்தவிடத்து அவர்கள் சீக்கிரமாய் சந்நிதானத்தின் முன்பு வந்து நின்றுகொண்டு குறையிரந்துசொல்லுங்கருத்தின்குறிப்பைத்தெரிந்து அவ்விடையூற்றை நிவர்த்திசெய்து இரக்ஷிப்பதையேவிரதமாகக்கொண்ட நெற்றிநேத்திரத்தையுடைய அவ்விடபபுரேசர் நேரேதெரிசனங்கொடுத்து அன்புமிக்க அழகிய பிராம்மணா ஆதி

(இ-பொ-ள்)

வேதகானஞ்செய்யும் பிராம்ஹண வடிவங்கொண்டவராய்த் தமது திருமேனியில் விபூதி உருத்திராக்ஷங்களைத் தரித்தவராய் முத்திநெறிக்குச் சாதனமாகிய நல்ல தவவொழுக்கமுள்ளவராய் ஒருவர் தம் தனியேவந்து நம்மை ஏ இராஜனே நியாயமொரு சிறிதுமில்லாத ஆப்பனூரினின்று நீங்கிவந்து நாமும் நமதுதேவியும் பின்னையும் வசிப்பதற்கு வீடில்லாமல் வையையாற்றின் கரைப் பக்கத்தில் இருக்கின்றோம் (எ-று) ௯௰

அன்றியும் பசித்திருந்தனமமுதினுக்கடைந்தனநின்பாலியா
மென்றுகூறியங்கணமறைந்தனனென்றலுங்கனிந்தூறுந்
தன்றிறத்தினிக்குஞ்சுவையனச்செவிப்புலன் சுவைப்பமந்திரர்யாரு
நன்றுநன்றெனமகிழ்ந்தணியாப்பனூர்நாதனைப்புகழ்காலை.

(இ-பொ-ள்.)

இஃதன்றியும் மிகப்பசித்திருக்கின்றோம். ஆதலால் நாம் உன்னிடத்தில் அன்னத்திற்காகத்தான் இப்போது வந்திருக்கின்றனம் என்று கூறி யங்கே மறைந்தருளினார் என்று சொன்னவளவில் மந்திரிமுதலியயாவரும் மிக நைந்திருக்கின்ற ஓர் பழத்திற் பொருந்திய அற்புதமான மதுரத்தைப்போலக் காதாற்கேட்டுக்களிக்க நன்றாயிருக்கின்றது நன்றாயிருக்கின்றது என்று பேரானந்தமடைந்து அழகிய திருவாப்புடையீசரது மஹத்வத்தைப்புகழ்ந்து பேசிக்கொண்டிருக்கும் சமையத்தில் (எ-று) ௯௧

ஆதியாகமவேதியனரசவையணுகியவனம்மைவி
யீந்தயாப்புடைநாயகர்திருவெண்ணீறெனக்காங்குவித்தேற்று
நீதியானுதனிலவுறத்தரித்தனனிமலனர்ச்சகன்பின்னர்ச் [ன்.
சோதிவான்மதிவேந்தகேளற்புதஞ்சொல்லுகேனெனச்சொல்வா

(இ-பொ-ள்.)

முதன்மையான சிவாகமங்களில் விதித்தவழியொழுகும் அவ்வர்ச்சகப்பிராமணன் இராஜசபையிற்சென்று அங்கேயிருந்து இஃது திருவாப்புடையீசருடைய வெண்ணிறம்பொருந்திய திருநீறாகும் என்று கூற மனுநீதியின்வழியே செங்கோல்செலுத்தும் அசீசதுணபாண்டியமஹாராஜன் தன்னிருகரங்களையுங்கூப்பி வண

ங்கி அச்சிவப்பிரசாதமாகிய திருநீற்றை வாங்கி நெற்றியில் பிரகாசிக்கத்தக்கதாய்த் தரித்துக்கொண்டார். பின்னர் மலரிதராகிய பரமசிவனையர்ச்சிக்கும் அப்பிராமணோத்தமர் பிரகாசம்பொருந்திய உயர்ந்த சந்திரகுலதிலகராகிய ஏ பாண்டியமகாராஜாவே அத்தியற்புதமான சங்கதியொன்று சொல்லுகிறேன் கேட்பீராக வென்று சொல்வாராயினர் (எ-று) கூஉ

மற்றுநீதியிலாப்பனூர்விடுத்ததும்வரும்வழிக்கடையாளஞ்
சொற்றதுந்திருமனையவளுடன்குறிதொடர்ந்துபின்படர்ந்திங்ஙன்
ஹற்றதுந்துறைமணலமுதாக்கதுமுண்மையில்லவள்பாற்போ
யற்றதும்பரன்விடைகொடுத்ததுந்தமறைந்தனனையாதே.

(இ-பொ-ரை)

சர்வவியாபியாகிய திருவாப்புடையீசர் நீதியில்லாத திருவாப்பனூரைவிட்டு நீங்கியதையும் தாம் வரும்மார்க்கத்துக்கு அடையாளம் சொன்னதையும் பின் இலக்ஷமீகாமுள்ளநாயகியுடன் அடையாளத்தைப்பார்த்து அதின்வழியே நடந்து இங்கேவந்ததையும் வையையாற்றிலுள்ள மணலையே அன்னமாகச்செய்து நிவேதிக்கச்சந்தோஷித்து அங்கீகரித்ததையும் இந்த இரகசியமான உண்மையை தன்மனையாளிடத்தில்சொல்ல அதனால்இதுவரையில நடந்தவிஷயமானது தடைபட்டதையும் அதன்பின் திருவாப்புடையீசர் தனக்கு அனுமதிசெய்து கட்டளையிட்டருளியதையும மறவாது இரமமாய்ச்சொன்னார் (எ-று) மற்று அசை கூங

வேந்தர்சேகரன்குதூகலித்தருகினன்வேந்தவைபுளர்கோமான்
சாந்தநீற்றினன்கனவுரைபுகன்றதுஞ்சைவநூற்சிகையாளன்
கூர்ந்தவந்நிலைபகர்ந்ததுஞ்சருக்கரைக் குன்றிற்றேன்மழைநான்
றாந்தகைத்தெனமகிழ்ந்தனர்புகழ்ந்தனராப்புடையவர்நாமம். [ற

(இ-பொ-ரை)

அரசர்களுக்கு மகுடம்போன்றவராகிய சுகுணபாண்டிய மஹாராஜன் பேரானந்தமடைந்து களித்தார். அவ்விராஜசபையிலுள்ள மந்திரிமார்முதலியயாவரும் விபூதியைத்தரித்த சாந்தமான நமது மஹாராஜா தான்கண்ட சொப்பனத்தை சொல்லிக்கொண்டிருந்ததும் அதற்குத்தக சிவாகமநூன்முடிபுகளையுள்ளவாறேயுணர்ந்த இவ்வர்ச்சகர் அன்புகூர்ந்து இங்கேவந்த இவைகளைச்சொன்னதும் மலைபோலக்குவிந்திருக்கிற சர்க்கரைக்குவியலின்மேல் தேன்மழைபெய்தாற்போல அத்திருவாப்புடையீசரது திவ்யதிருநாமங்களை மனமகிழ்ச்சியுடன் கொண்டாடித் துதித்தார்கள் (எ-று) கூச

இரைத்தகாதன்மு னீர்த்தெழவேறிய வெழுந்தமுன்செலச்சார்
த, வரைத்தரோசனுமமைச்சர்பின்வரப் பெருவரைப்புறத்திரைக்
கையா, லரைத்தசாந்தணிந்தலர் சொரிந்தமுதமக்கருத்தியார்த்
தெழும்வையைக், கரைத்தனிச்சிவக்கொழுந்தினைவிரைந்தசெல்
காவலன்கண்டானுல்.

(இ-பொ-ள)

இவ்வாறு இராஜசபையில் சொல்லிக்கொண்டிருந்த அவ்வரு
ச்சகப்பிராமணர் திருவாப்புடையீசர்மீது ஆசையானது இழுத்து
ச்செல்ல எழுந்திருந்து முன்னேதாம்போகப் பொதியமலையினி
ன்றுற்பத்தியான சந்தனமணிந்த பூமியையாளுகின்ற அச்சகுண
பாண்டியமகாராஜனும் மந்திரிமார் தம்மைச்சூழ்ந்து பின்வர
பெரியமலையின்புறத்தில் அலைகளாகிய கைகளால உரைத்த சந்த
னச்சாந்தைத்தரித்தும் புஷ்பங்களாலருச்சித்து அவ்விடத்து அமு
தையும் நிவேதித்து சப்தித்தவருகின்ற வையையாற்றின் கரையி
லெழுந்தருளியிருக்கும் ஒப்பற்ற சிவக்கொழுந்தாகிய கடவுளை
விரைந்து செல்லும் பாண்டியமகாராஜன பார்த்தார் (எ-று) ஆல்
அசை ௨௫

கண்டகட்பொறிவழியெழும்புனலூாங்கலத்தமுத்திரைந்திரா
வண்டலிட்டியழிதரமயிர்முகிட்பெழமலர்க்கரங்குவித்தேகித்
தொண்டருக்கெளிவருங்கருணையங்கடறுணையடிமுடிசூடத் [ஞல்.
தண்டெனத்தரைமிசைப்பணிந்தெழுந்தருடனழத்திடக்கரைந்தா

(இ-பொ-ள)

தெரிசனஞ்செய்தகண்களின்வழிப்பொங்கியெழும் நீரானது
மார்பிலேசேர்ந்து தூங்கிய முத்துமாலையைப்போலச் சந்தித்து
அழிந்துக்கொண்டு ஒழுகவும உரோமாஞ்சங்கொள்ளவும் தாம
ரைமலர்போன்ற கைகளைக்கூப்பிச்சென்று மெய்யன்பர்களுக்கு
மிக எளிமையாயெழுந்தருளிவந்து காக்ஷிகொடுக்கும் அழகிய கி
ருபாசமுத்திரமாகிய அவ்விடபபுரேசரது இரண்டுதிருவடிகளும
தமது சிரசிற்பொருந்த தண்டாகாரமாய்ப் பூமியில் நமஸ்கரித்து
எழுந்து திருவருள் சுரக்கத்தக்கதாக மனமுருகித் துதிக்கினனுா
(எ-று) ஆல் அசை ௨௬

## வேறு.

விரையிருக்குஞ்செழுங்கமலமேலிருக்கும்பொருளுணரா
வுரையிருக்குஞ்சதுர்மறையினுச்சியிருக்கத்தனிவென்
வரையிருக்கத்தொழுமடியார்மனமிருக்கமணிவையைக்
கரையிருக்குஞ்செயலென்னேகரைகடந்தபரமேட்டி.

(இ-பொ-ரை)

எவ்வகைப்பொருளின் வரம்பிற்குமப்பாற் பட்டுவிளங்கும் பரமசிவனே வாசனைபொருந்திய செழிப்பான தாமரைமலரின் மேல்வீற்றிருக்கும் பிரமதேவருமறியாத நன் பொருள்வாய்ந்த நான்குவேதங்களின் சிரசாகிய உபநிஷத்துகளிருக்கவும் ஒப்பற்ற வெள்ளியங்கிரிபோன்ற ரிஷபமிருக்கவும் வணங்குகின்றமெய்யன்பர்களது இருதயகமலமிருக்கவும் இவற்றையெல்லாம்விட்டு இவ்வவையைநதிதீரத்தில் எழுந்தருளியிருக்குஞ்செய்கை என்னகாரணமோ (எ-று) ௩௭

ஆடளிக்குநறுந் தண்பெயம்புயற்கும்பாற்கடல்வாய்
நீடளிக்குளறிதுயில்கொண்டியவற்குங்கற்பாந்த
நாடளிக்கும்பிடும்யோகநற்றவர்க்குமற்றவர்க்கும்
வீடளிக்குநீசனவில்வீடிரந்தசெயலென்னே.

(இ-பொ-ரை)

அங்குமிங்குந்திரிகின்ற வண்டுகளுக்கு நல்ல தேனையுண்பிக்கின்ற தாமரைமலரில்வீற்றிருக்கும் பிரமதேவருக்கும் திருப்பாற்கடலினிடமாய் நீண்டஆலிலையில் ஞானநித்திரை செய்துகொண்டிருக்கும் விஷ்ணுமூர்த்திக்கும் கற்பாந்தகாலத்தையும் கடந்திருந்தும்பிடிக்கின்ற நல்லயோகிசர்களுக்கும் மற்றவர்களுக்கும் மோக்ஷத்தைக்கொடுத்தருளுந்தேவரீர் அடியேன்சொப்பனத்தில் வந்து வீடுகேட்டசெய்கை என்ன ஆச்சரியம் (எ-று) ௩௮

கமழ்மூலைச்சிற்றரும்பன்னமூரலினங்கனியமலை
சமைவுறத்தனிடத்திருப்பத்தனியோதநஞ்சொன்றி
திமிரநற்கந்தாமிருத்திநிறைதருவிண்ணுட்டவர்க்கு
மமுதளிக்குநீசனவிலமுதிரந்தபரிசென்னே.

(இ-பொ-ரை)

நறுமணம்வீசும் சிறியமுல்லையரும்புபோன்ற தந்தங்களையுடைய இளமைபொருந்திய அழியாதகற்புவாய்ந்த நின்மலசொரூபியாகிய உமாதேவிபொருந்தவாமபாகத்தில் வீற்றிருக்க சுத்தமான திருப்பாற்கடலிற்றோன்றிய ஆலகாலவிஷம்பொருந்தி நிறைய நல்ல கழுத்தினிடமாயிருக்கச்செய்து கற்பகவிருக்ஷத்தினிழலிலே நிறைந்து தங்கிய தேவர்களுக்கும் அமிர்தத்தைக்கொடுத்தருளிய தேவரீர் நாயேன்சொப்பனத்தில் எழுந்தருளிவந்து அன்னத்திற்கு யாசித்த தன்மை என்ன அதிசயம் (எ-று) ௩௯

என்றிணையவளைகபன்னியிறிலகளிப்படைந்திறைவன்
நன்றியநுண்மதியமைச்சர்தம்மொடும்பொனசொரிகொண்டை

மன்றல்மலர்த்தருநிழலுள்வதிபவற்குமலைமகட்கு
நன்றமைபொற்றிருக்கோயிலினிதெடுக்கநனிந்நினைந்தான்.

(இ-பொ-ள்)

என்றிவ்விதமாய்த்துதிசெய்து அளவில்லாதசந்தோஷத்தையடைந்த சுகுணபாண்டியமஹாராஜன் தன் பக்கலிருக்கின்ற புத்திநுட்பமுள்ள மந்திரிமாருடன் பொன்வர்ணமுள்ள வாசனைபொருந்திய புஷ்பங்களைச்சொரிகின்றகொன்றைவிருக்ஷத்தினிழலில் வீற்றிருந்தருளும் திருவாட்புடையீசருக்கும் பர்வதராஜகுமாரியாகிய உமாதேவிக்கும் எழுந்தருள தன்மைபொருந்திய அழகியதிருககோயிலை யினிதாகச்செய்துமுடிக்க மிகவும் பரியாலோசனைசெய்தார் எ-று) ௬௰

வேறு.

சிற்பநூற்பொருண்முழுவதுங்கைகொடுதேற்றுஞ்
சற்பினோர்தமையழைத்திருகண்சிறைப்படுத்தும்
பொற்பினுன்மகமேருவின்முடிமிசைபுனைய
நற்பொன்மாமுடிவகுத்தெனமானதனகமைத்து.

(இ-பொ-ள்)

சிற்பசாஸ்திரத்தின்பொருள்களையெல்லாம் கையால் தெளியச்செய்யும் கல்விமான்களாகிய சிற்பர்களைக் கூப்பிட்டுப்பார்க்கின்றவர்கள் இரண்டுகண்களையும் தமக்குள்ளாக்கிக்கொள்ளத்தக்க பேரழகுபொருந்த மகாமேருமலையின் சிரசின்மீது தரிப்பதற்கு நல்லஉயர்ந்த மாற்றுள்ள பொன்னினால் கிரீடஞ்செய்தாற்போல விமானத்தை நன்றாய்ப்பொருந்தச்செய்து எ-று) ௬௧

அருத்தமண்டபமாதிமாமண்டபமறுகாற்
பொருத்தபீடிகைமண்டபம்பொன்னனாரடு
திருத்தமண்டபத்திருமதில்கோபுரநிமலற்
கருத்தியான்முடித்துமைக்குமப்படிவகுத்தமைத்து.

(இ-பொ-ள்)

முதன்மையாகிய அர்த்தமண்டபமும் மகாமண்டபமும் ஆறுகாற்பீடமும் வேறுமண்டபங்களும் இலக்குமியையொத்த அழகிய ஸ்திரீகள் நடனஞ்செய்யும் நிர்த்தமண்டபமும் திருமதில்களும் கோபுரங்களுமாகிய அவற்றை மலரகிதராகிய அவ்விடபபுரேசருக்கு ஆசையுடன் செய்து முடித்து உமாதேவிக்கும் அவ்விதமாகவே செய்து முடித்த (எ-று) ௬௨

பாநுமுற்படப்பகர்பரிவாரவானவர்க்கு
மேனிலதனினல்லுறையுளும்விதிமுறைதிருத்தி
வானுயர்த்தவெள்விடைக்கொடிமரம்பலிபீடத்
தானியற்றினன்வேறுளபணிகளுஞ்சமைத்து.

(இ-பொ-ள்)

சூரியன் முதலாகச்சொல்லுகின்ற பரிவார தேவதைகளுக்கு மேலே நல்ல தகுதியான கோவில்களையும் கிரமமாகச் செய்து மேலேயுயர்த்தக்கூடிய வெண்ணிறமான ரிஷபமெழுதியிருக்கும் கொடிகட்டத்தக்க துவஜஸ்தம்பமும் பலிபீடமும் மற்றும்செய்ய வேண்டிய திருப்பணிகளையும் செய்துமுடித்தார் (எ-று) ௪௩

நந்திதீர்த்தத்தின் ஞாங்கர்சூழ்படித்துறைநவிற்றிச்
சந்தியாமடங்கண்டுகற்றளிப்புறஞ்சாரி
சிந்துமாதவிவலம்புரிகணவிரஞ்சிறைத்தேன்
வந்துசூழ்மலர்மலியுநந்தனவனம்வைத்து.

இ-பொ-ள்.

இடபதீர்த்தத்தின் பக்கத்தில் சூழவும் படித்துறைகள் கட்டி சந்தியாமடங்களுமியற்றிக்கல்லினாலமைத்த கோயிலின்புறத்தில் தேன்சிந்துகின்ற வசந்தகாலமல்லிகை நந்தியாவர்த்தம், அலரிமுதலிய புஷ்பச்செடிகளை அழகிய சிறகுகளையுடைய வண்டுகள்வந்து மொய்க்கும் மிகுந்த புஷ்பங்கள் உண்டாகும் திருநந்தனவனமும் வைத்து (எ-று) ௪௪

விருதமாலையினீர்புகவயல்வளங்கிளர்கு
மருதநன்னிலவரைப்பினிலூர்களும்வழங்கிப்
பெரிதுபூசனையியற்றிப்பின்பேரியந்துவைப்பக்
கருதுமன்பர்கண்களித்திடநல்விழாக்கண்டு.

(இ-பொ-ள்)

விருதமாலையென்னும்யாற்றின் தண்ணீர்பாய அதனால் செழிப்புடையதான வயல்கள்சூழ்ந்த நல்லமருதநிலப்போக்கில் கிராமங்களும் ஆலயத்திற்காக மானியஞ்செய்து மிக்கவிசேஷமான பூசைகளைநடத்திப் பின் பெரியவாத்தியங்கள் கோஷிக்கவும் தியானிக்கின்ற மெய்யன்பர்களிருகண்களும் கண்டு பேரானந்தமடையவும் நல்ல சிறப்பான திருவிழாவும் நடாத்தி (எ-று) ௪௫

இன்பமுற்றடியவர்குடிபுரப்பதற்கிசைந்து
முன்புவையைவெண்மணலமுதுகந்தருண்முறையா
லன்புநெக்குநின்றிடவபுரோசனையிறைஞ்சி
னன்பிலூலெலேத்தனைவிஞோதனென்றழைத்தான்

(இ-பொ-ள்)

இன்பமடைந்து தமது மெய்யடியராகிய அர்ச்சகர் குடும்பத்தை யிரக்ஷிப்பதற்கு இணங்கி முன்னே வைகையாற்றிலுள்ள வெண்ணிறமான மணலையே அன்னமாக விரும்பி ஒப்புக்கொண்டருளியதன்மையால் எலும்புகள் கட்டுவிட்டுருக நின்றுகொண்டு அவ்விடபபுரோசனை வணங்கித் தனது பேரன்பினால் அன்னவிநோதன் என்று பெயர்சொல்லியழைத்தார் (எ-று) சசு

சன்னிதித்தெருவீதியினருச்சகன்றனக்கங்
குன்னதத்திருமாளிகையெடுத்துமற்றுள்ள
நன்னலத்தகத்தடியவர்க்குறையுளுநவின்று
மன்னுமெய்த்திருவைதிகர்நியமமும்வகுத்து.

(இ-பொ-ள்)

பின் அவ்வன்னவிநோதமூர்த்தி சந்நிதானவீதியிலே அர்ச்சகப்பிராமணருக்கு அங்கே உயர்ந்த அழகியகிரகம் கட்டியுமின்னுமிருக்கின்ற நல்ல சிவத்தியானஞ்செய்யும் மனதையுடைய சிவனடியார்களுக்குத் திருமடங்களும் செய்யச்சொல்லியு முண்மையாகிய சிறந்த வைதிகமார்க்கத்தவர்களுக்கு வசிக்கத்தக்க இடங்களும் நிலைபெற ஏற்படுத்தி (எ-று) சஎ

நீதிமன்னவர்வணிகர்பின்னவர்குடிநெருங்கும்
வீதிதுன்னுநலாவணமமைத்தநீள்விண்ணோர்
கோதினன்னகரொனும்படிசெய்தனன்குளிர்வெண்
சோதிமின்னியமதிகுலக்கோமகன்சுகுணன்

(இ-பொ-ள்)

குளிர்ந்த வெண்ணிறமுள்ள பிரகாசத்தை வீசும் சந்திரகுலத்திற்றோன்றிய சுகுணபாண்டிய மகாராஜன் மனுநீதியின்வழிச் செங்கோல் செலுத்தும் அரசர்களும் வைசியர்களும் சூத்திரர்களுமாகிய குடிகள் நெருங்கியிருக்கின்ற அந்தந்தத்தெருக்களையும் சேர்ந்து விளங்கும் நல்ல கடைவீதிகளையும் தகுதியாய் முடித்துப் பெரிய குற்றமில்லாத நன்மையான தேவலோகந்தானிதுவென்று பார்ப்போர் சொல்லும்வண்ணம் செய்துமுடித்தார் (எ-று) சஅ

இத்தகைச்சுகதருமநற்பணிசெயுமியல்பாற்
சத்தமுத்தமிழ்நாடெலாமழைவளஞ்சுரப்ப

நல்ல சம்பத்தையும் பூர்ணாயுசையும் சிறந்தகீர்த்தியையும் அடைவார் யாதொரு துன்பத்தையுமடையார் எப்போதும் பசியால் வருந்தார் மாறில்லாத ராஜசமானனென்று யாவரும் சொல்லும் வண்ணம் பெருகி வாழ்வார் என்றுந் திருவாய்மலர்ந்தருளினார் (எ-று) அரோ - அசை ௫௧

அன்னவினோதச்சருக்கம் முற்றிற்று.

---

ஆ_ திருவிருத்தம் ௨௫௧

## சந்திரசேனச்சருக்கம்.

---:o:---

கேட்டமாதவர்குழாம்பின்னுங்கேட்பது
வேட்டனம்யாந்தனிவிடைப்பிரான்பெயர்
சூட்டுமத்தீர்த்தத்தின்கதைசுருக்கிமுன
காட்டினைவிரித்தினிக்கழறுவாயெனரூா.

(இ-பொ-ள.)

என்றிவ்வாறுகூறக்கேட்ட தவம் மிக்க அந்நைமிசாரணியவாசிகள் சுவாமீ அடியேங்களின்னமும் கேட்க விரும்புகிறோம் ஆதலால் தேவரீர் ஒப்பற்ற நந்திதேவர் திருநாமங்கொண்டு விளங்கும் அந்தத்திதீர்த்தத்தின் மகிமைபொருந்திய சரித்திரத்தை முன்னே தொகுத்துக்கட்டளையிட்டருளினீர் ஆதலால் இனி விரிவாய அடியேங்களுக்குத் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்துகொண்டார்கள் எ-று) க

நந்திநாயகப்பெயர்த்திருத்தநங்கதை
சிந்தியாவிருவிழிப்பனிப்பத்தேக்கிய
புந்தியான்சூதனும்புராணதேசிக
னந்தணீர்கேண்மினென்றறைதன்மேயினான்.

(இ-பொ-ள)

திருநந்திதேவரது திவ்யதிருநாமம்பூண்ட அந்நத்திதீர்த்தத்தின் திவ்யசரிதத்தை நினைத்து இரண்டு கண்களினின்றும் ஜலமானது தாரைதாரையாகச்சொரிய நிறைந்துவைத்த மனத்தையுடையவராகிய சூதபுராணிகராகிய ஞானசாரியர் நைமிசாரணியவாசிக

ளைப்பார்த்து ஏ மகரிஷிகளே கேளுங்களென்று சொல்லத்தொடங்கினார் (எ-று) உ

பண்டைநாண்மந்திரியுடனோர்பார்த்திபன்
குண்டைநீர்மடுவிடைக்குடைந்துமேற்குலக்
கெண்டைவாணயனியாற்கிடைத்ததீப்பழி
விண்டயர்வுயிர்த்தனன்விரைந்தென்றோதினன்.

(இ-பொ-ள்.)

முற்காலத்தில் ஓர் அரசன் தனது மந்திரியுடனே தண்ணீர் நிறைந்த அவ்விடத் தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து அதனாலே பிராமணகுலத்துதித்த சேற்கெண்டையைப்போன்ற ஒளிபொருந்திய கண்களையுடைய ஓர் பெண்ணினால் தங்களுக்குக்கிடைத்த மிகக் கொடிய பழியானது நீங்கி விரைவாய் தமது துன்பங்களினின்று நீங்கினார் என்று சொன்னார் (எ-று) ௩

முதுமறையிருடிகண்மொழிந்தவேந்தன்யா
ரதுபெயரெதுநகரிவற்குப்பூசுர
வதைநெடும்பழியெவள்வாஞ்சையாலுற்ற
ததுதொடர்ந்தலைப்பவீங்கடைந்தவாறெவன்.

(இ-பொ-ள்)

பழமையான வேதங்களில்வல்ல அந்நைமிசாரணியவாசிகள் சூதமகரிஷியைப்பார்த்து சுவாமீ தேவரீர்கூறிய அரசன் யார் அவர் பெயர் என்ன எந்த நகரம் இவ்வரசனுக்கு பிராமணனைக் கொன்றதனாலாகிய பெரியபிரம்மஹத்தியானது எந்தப்பெண்ணினிச்சையால்வந்தது அப்பிரமஹத்தியானதுபின்தொடர்ந்து அலையச்செய்ய இவ்விடத்திற்கு வந்து சேர்ந்தது எப்படி (எ-று) ௪

உளமதியமைச்சனோடுற்றிந்நீர்மடுவி
விளமதிமருடருவெவ்வினையிற்றீர்ந்துசூழ்
வளமதினற்றளிவாயிறைஞ்சுநன்
முளமதிக்கண்ணியங்கடவுண்முன்செலா.

(இ-பொ-ள்)

புத்தியினையுடைய மந்திரியுடனே வந்துசேர்ந்து இந்நந்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து உண்டாகிய புத்தியை மயக்கும் கொடிய பாவத்தினின்று நீங்கிச் சுற்றிலும்வளைந்த திருமதில்களையுடைய நல்ல ஆலயத்தின் வாயிலிலே நமஸ்கரித்து தன்மையாய்

ளைத்த சந்திரனாகிய மாலையைத்தரித்தருளிய அழகிய சிவபெரு ரு
ான் திருமுன்னேசென்று (எ-று)

திலையடிபணிர்தரிதினைத்துதி
யாதியவ்வரசன்றனகர்க்கணுற்றன
ரிதினிதெமக்குதனியம்புவாயென
யியின்வரன்முறைநிகழ்த்துவாணரோ.

(இ-பொ-ள்)

முழுமுதற்கடவுளாகிய அன்னவிசேஷமூர்த்தியைப் பாதங்க ளில் நமஸ்கரித்து அருமையாகிய என்ன ஸ்தோத்திரஞ்செய்து அ ந்த அரசன் தன் நகரத்திற்குப்போய்ச்சேர்ந்தான் இவைகளையெ ல்லாம் அடியேங்களுக்கு இனிதாக நன்றாய்த் திருவாய்மலர்ந்தரு ளவேண்டும் சுவாமீயென்று பிரார்த்திக்க நீதியாய்க் கிரமமாகச் சொல்வாராயினர் (எ-று) அரோ - அசை,

டுமின்கொடியனுருணர்த்துநாதரைக்
டுமிச்கல்விமேனிலையிற்கோதற
தாடும்வெண்கதிர்மதிளைந்தடைப்பதொத்
தாடும்வெண்கொடிதிகழவந்திமாநகர்.

(இ-பொ-ள்)

வெள்ளிய கிரணக்கற்றைகளையுடைய சந்திரனிடத்துள்ள மா சைத்தடைப்பதைப்போன்றசைகின்ற வெண்ணிறமான கொடிக ள்கட்டி விளங்கும் மேல்வீடுகளிலே ஊடலைச்செய்கின்ற மின்னற் கொடிபோன்ற ஸ்திரீகள் தாங்கள் விரும்பும் நாயகர்களுடன் கூடி றமறத்தெரிவிக்கும் இனியபுணர்ச்சியையனுபவிக்கின்ற சிறப்பி னையுடையது அவந்திமாநகரம (எ-று)

மறையொலிமுழவொலிமாதராடலின்
றுறையொலியரவொலிதன்னநாடொறுங்
கறையணிமிடற்றுமாகாளவீசனுண்
டுறைதருமுலகுயிர்க்குவகைநல்கியே.

(இ-பொ-ள்)

தினந்தோறும் வேதங்களை ஆரோகண அவரோகணக்கிரம மா யத்தியயனஞ்செய்வதனாலாகிய கோஷமும் மத்தளவாத்தியத் தின் சப்தமும் ஸ்திரீகள் டரதசாஸ்திரப்படி நடிப்பதனாலாகிய ஓ சையும் சிவனடியர்கள் ஹரஹர என்னும் முழக்கமும் நிறை அழகிய காலகண்டத்தையுடைய மகாகாளவீசுரன் அவ்விடத்தில்

உலகிலுள்ள பலவுயிர்களுக்கும் இன்பத்தைக்கொடுத்து எழுந்தருளுவர் (எ-று) ஏ-அசை ௮

முனைவருமுழுதுணர்மோனருந்தவந்
தனைவருமனைசெறிந்திருக்கும்யோகரு
மனைவருமுனிவருமர்னறமூவரு
மனைவருஞ்சரிப்பதாலளகைதோற்குமால்.

(இ-பொ-ள)

முனிவர்களும் யாவற்றையும் அறிந்தடங்கிய மௌனிகளும் மற்றைய தவசிகளும் சிவயோக சமாதியின்கண் தறிபோலசைவற்றிருக்கும் சிவயோகிகளும் இல்லறத்துக்குரித்தாக நற்குண நற்செய்கைகளையுடைய மனைவியோடுகூடிய கிருகஸ்தர்களும் இவரல்லாத ஏனைய மூன்றாச்சிரமிகளும் ஆகிய யாவரும் சஞ்சரித்துக்கொண்டிருப்பதால் இவ்வுத்திமாநகரத்திற்குச்சிவபெருமான் தோழராகிய குபேரமஹாராஜாவினது அளகாபுரியும்நிகராகாது (எ-று) ஆல்-அசை ௯

அத்திருநகர்புரத்தளிக்குமன்னவன்
பைத்தலைச்சுடிகைமீக்கிடந்தபாரகம்
தைத்ததண்புயப்பொருவிலீண்டடற்
சித்திரத்தெழினலஞ்சிறக்குஞ்செவ்வியான்.

இ-பொ-ள.

இத்துணைச்சிறப்பினையுடைய அவ்வுத்திமாநகரைக் காக்கும் அரசனையொவின் ஆதிசேடனது படம்பொருந்திய தலையிலுள்ள உச்சிக்கொண்டையின்மேற்கிடந்த இடமகன்ற இப்பூமியைத் தனதுவலிமைபொருந்திய புஜத்தின்கண்வைத்துத்தாங்கிய மிக்க வல்லமையுடையவனும் மடலிலெழுதுஞ் சித்திரத்தினழகைப்பார்க்கினும் சிறந்த அழகினையுடையவனும் (எ-று) ௧0

கழுதுவாய்சிவப்புறப்பகைஞர்கன்னிய
ரழுதுகண்சிவப்புறவரசர்பொன்முடி
யுழுதுகால்சிவப்புறக்கணக்கர்க்கொண்கர
மெழுதுகைசிவப்புறவெறிக்கும்வாளினான்.

(இ-பொ-ள)

பேய்பைசாசங்களினவாய்கள் சிவக்கவும் சத்துருக்களமனைவியர்கள் அழுதழுது கண்கள் சிவக்கவும் அரசர்கள் சிரசிற்றரித்திருக்கும் பொன்மயமான கிரீடங்கள் பட்டுத் தன் கால்கள் சிவக்

சிலைவிளையாடுந்தோட்செம்மலெண்டிசைத்
தலைவிளையாடும்பேர்ச்சந்திரசேனனே.

(இ-பொ-ள)

கொலைத்தொழிலைச்செய்து விளையாடுகின்ற வேலாயுதத்தைத்தரித்த பெருமையிற்சிறந்தவரும் ஸ்திரீகளது ஸ்தனங்களை எப்போதும் விளையாடிக்கொண்டிருக்கும் அழகிய மார்பையுடையவரும் வலிமைபொருந்திய வில் தவழ்ந்துகொண்டிருக்கும் புஜங்களையுடைய அரசனும் அஷ்டதிசைகளிலேயும் பரவிய சந்திரசேனன் என்னும் பெயரையுடையவரும் ஆகிய ஓரரசனிருந்தார் (எ-று) ௧௫

ஆமத்தார்வேந்தனதமைச்சனன்னவன்
காமத்தாலழிதருங்கருத்துக்கேற்பநற்
றாமத்தார்குழலியர்த்தரீட புணர்ப்பவ
னாமத்தாற்சுகுணன்சென்னடையிற்றூர்க்குணன்,

(இ-பொ-ள)

ஆகிய மாலையையணிந்த அந்தச்சந்திரசேன மஹாராஜனுடைய மந்திரியாரொனின் அந்த அரசன் காமாதுரனாயழிவெழியுங்கருத்துக்கிசைய நல்லவாசனைபூட்டப்பெற்றமாலையையணிந்த கூந்தலையுடைய ஸ்திரீகளைத்தேடிக்கொண்டுபோய்ச்சேர்த்து விடுகிறவனாகி நல்லொழுக்கமென்பது ஒரு சிறிதுமில்லாத துன்மார்க்கமுடைய சுகுணனென்னும் பெயர்மாத்திரமுள்ளவன் (எ-று) ௧௬

அன்னவனொடுந்தனியரசனேர்ட்கன்
மன்னியகாமநோய்மலருமாலையி
லுன்னதநெடுங்கொடியுபரிகைக்கணே
கன்னலஞ்சிலைகடைகுனழப்பவைகினன்.

(இ-பொ-ள)

ஒப்பற்ற சந்திரசேனமஹாராஜன் அந்தச்சுகுணனென்னும் மந்திரியுடனே ஒருநாளில் நிலைபெற்ற விரகநோயானது விகசிதமாகின்ற மாலைக்காலத்திலேயுபரமான நீண்டகொடிகள் கட்டிய உப்பரிகையிலே மன்மதன் தனது அழகிய கரும்புவில்லை வளைக்க இருந்தார் (எ-று) ௧௭

மருக்கமழ்ந்நகர்வீதிவாய்ப்பெருந்
திருக்குலமறையவர்தெரிவைமேம்படு
மரக்கிளையூட்டினலமுறைத்தீற்றிய
முருக்கிதழ்வாயினனமுதசமூரலாள்.

(இ-பொ ரை)

தேவலோகத்திலுள்ள தேவர்களுங்கூட விருப்புற்று அவ்விடத்து அத்தேவர்கள் காலால்நடந்து பூமியில் வரத்தக்க சோழநாட்டுடன் செல்கின்ற பூசுரரென்னும் பிராமணர்களது வெண்ணிலாகிய வளையலையணிந்த பெண்ணை அறிவில்லாத விசாலமான பூமியைக்காத்துவருகின்ற அச்சந்திரசேனமகாராஜன் இச்சந்தப்பார்த்தான் (எ-று) உக

வேறு.

மிருமலர்க்குழலோகுழல்வளர்ந்ததனுள் வரிந்தளிர்த்துமேவவணரூர், திருநுதநுதலோ திலதமோதெறித்த சிறுசெப்புநவமோவெழுதங், கருவிழியழகோ கடைவிழிதருடிப் பாகாமேனர்க்களங்கம்வளவிடுத்த, நிருபமேயவனைப்பூதுவெனவ்வவருநிசழ்த்துபொன்னோலைவார்குழையோ.

(இ-பொ-ரை)

வாசனைபொருந்திய புஷ்பங்களைத்தரித்த கூந்தலோ அக்கூந்தலை வாக்கெடுத்து அதனுட்பூசிய சிந்தூரப்பொடியோ வளைந்த அழகிய நல்ல நெற்றியோ அந்நெற்றியிற்றீட்டிய பொட்டோ தெறித்த சிறிய கொடியோல் நீண்டுவளைந்த புருவமோ எழுநய கரியகண்களின் அழகோ கடைக்கண்களின் அசைவோ இஃது காளைப்பருவத்தையுடைய ஆடவர்களுக்கு உருவமில்லாத மன்மதன் அனுப்பிய ஓலைச்சுருளையொத்திருக்கின்றதென்று பார்ப்பவர்கள் சொல்லத்தக்க பொன்னோலையினிடமாகத் தொங்கும் ஜிமிக்கியோ (எ-று) உஉ

கண்ணடியனையகபோலமோநாசிகாபரணத்தின்முத்தசைவோ, தண்ணறுங்கனிவாயதரமோவிரதந் ததும்பிமேல் வழிந்ததேன்மொழியோ, வண்ணலங்கமுகினணியியன்மிடறோ வமைத்தடந்தோள்களோசிவந்த, வண்ணவிற்பவளங் கிளைத்ததன்கிளையின் வாய்ந்ததன்மணிவிரல்வடிவோ.

(இ-பொ-ரை)

கண்ணாடிபோன்ற கன்னமோ மூக்குத்தியினிடமாய்க் கட்டித்தொங்கும முத்தினது அசைதலோ நறுமணியவாசனையையுடைய வாயிற்பொருந்திய கொவ்வைக்கனியை நிகர்த்த உதடுகளோ மதுரமபொங்கி மேலேவழிந்த தேனைபோலுமினியமொழிகளோ பெருமைபொருந்திய அழகிய கமுகவிருக்ஷத்தின் அலங்காரமான கழுத்தோ விசாலமான மூங்கிலையொத்த தோள்களோ சிவப்பு வாணத்தையும் பிரகாசத்தையுமுடைய பவளக்கொடியினின்றுங்

ப்புவிட்டெழுந்த கொழுந்துகளைப்போலப் பொருந்திய நல்ல
அழகிய விரல்களின் வடிவமோ (எ-று) ௨௩

சந்தனக்கலவைச்செழுநறுஞ்சேற்றிற்றண்பனிநீரினுண்முளை ந்த, சுந்தரக்கமலத்துணைமுகையிலெனச் சுணங்குபூத்தெழுந்த நறுமுலையோ, வந்தியிற்கிளைத்தவணிமயிரொழுங்கோ வொருபிடி நுசுப்பினதொசிவோ, மைந்தருக்கமுதமூற்றிருந்தொழுக வாய்ந் தபேரல்குலின்வளப்போ,

(இ-பொ-ள)

செழிய நறுமணங்கமழும் புனுகுஜவ்வாது முதலிய வாசனை வஸ்துக்கள் கலந்த சந்தனக்குழம்பாகிய சேற்றிலே குளிர்ந்த பன்னீரில முளைத்த அழகிய இரண்டாகிய தாமரை அரும்புகள் தானிவையென்றுசொல்லப் பொன்போலுமழகிய தேமல்படர்ந்து விளங்குகின்ற ஸ்தனங்களோ உந்திஸ்தானத்தினின்று முளைத்த அழகிய உரோமத்தினதொழுங்கோ ஒருபிடிக்குளடங்கிய இடையினதளர்ச்சியோ காளைப்பருவமுடைய ஆடவர்களுக்கு விஷயாமிர்தமானது ஊற்றுப்போல் சுரப்புற்றொழுகப்பொருந்திய விசாலமான நிதம்பத்தினழகோ (எ-று) ௨௪

நாவலாறடுத்தகரை வளர்கதலி நலங்கவர்பொலங்கவானெழிலோ, சேவலார்முடித்தமதிமனைப்புறணிற்றிருத்திய தசைசூழ்ந் தாளோ, தூவலார்ப்சுழித்தூணியிணைகணைக்காற் றேற்றமோசிறடித்துணையோ, பாவலாருலாகருமுவமையுங்கடந்த பாவையோவி வளென நினைந்தான.

(இ-பொ-ள.)

மகாமேருவைச் சூழ்ந்துசெல்லும் ஜாம்பூநதமென்னு நதியையடுத்த கரையில் வளர்கின்ற செழிய வாழைத்தண்டின நலத்தைக்கிரகித்த பொலிவாகிய தொடைகளின் அழகோ வலிய ரிஷபத்தின்மீதெழுந்தருளிய சிவபெருமான் தரித்தருளிய பாலசந்திரன் தனதுவடிவிற்றிருந்திப் பூரணமானாற்போலத் திருத்தமாகிய சதைப்பற்றுள்ள முழங்காலோ தூவத்தக்க அம்புறாத்தூணியைப் போன்ற கெண்டைக்காலின தோற்றமோ இரண்டு சிறியபாதங்களோ பலகலைகளிலும் வல்லவர்களாகிய புலவர்கள்கூறும் உவமானத்தையுங்கடந்து விளங்கும் ஓர் சித்திரப்பாவையோ இந்தப் பெண் என்று நினைத்தான் (எ-று) ௨௫

நினைத்தநெஞ்சுருவிமலர்க்கணைதுளைப்ப நெட்டுயிர்ப்பெறிந்து ளைந்துளைந்து, மனைத்தவமுனிவர்பெருங்குலக்கற்பின் மடந்தை யென்றறிந்துந்தன்மனத்துட், டினைத்தனையெனினுமுதுக்குறைவி

லனைத் தெரிவைதோணலநுகர்காதல், பனைத்தனைவளரப்பார்த்தகண்டிருப்பாப் பார்த்திபனமைச்சனைவாயால்.

(இ-பொ-ள)

என்றிவ்வாறு நினைந்த மனனை மன்மதன் புஷ்பபாணங்கள் ஊடுருவிப்பாய்ந்து துளைக்க அதனால் பெருமூச்சுவிட்டு மிகவாநந்த இலலறத்தில்வாழும் பிராமணர்களது பெருமைபொருந்திய குலத்திற்பிறந்த கற்புத்தன்மைசிறந்த பெண்ணென்று தெரிந்திருந்தும் தன்மனதில் ஓர்தினையளவுங்கூட நல்லறிவில்லாதவனாய் அப்பிராமணஸ்திரீயினது தோளோடுபுணர்ந்து சுகத்தையனுபவிக்கவேண்டுமென்ற இச்சையானது பனையளவாக விருத்தியாக அப்பெண்ணைப்பார்க்க கண்களைக் கிஞ்சித்தும் இமையாது சந்திரசேனமஹாராஜன் சுகுணனென்ற தனமந்திரியைத் திரும்பிப்பார்த்து வாயினால் (எ-று) ௨௬

அழைத்துநீள்சரத்தாற் சுட்டிமாதிவள்போலல்குலின்றுறைப்படியார்வந், தழைத்தமற்றினியிவ்வொருத்தியையமையுஞ் சதவனிதையர்சுகம்விரும்பேன், பிழைத்திடிலுய்யேனொணாதெனமுகமன பேசினன்பேசலுமனையா, ளுழைதனிமகிழ்நன்பிரிவிலாதிருக்கினுஞற்றுவதெவனெனவுரைப்பான்.

இ-பொ-ள.

கூப்பிட்டு நீண்டகணையாற் சுட்டிக்காண்பித்து இந்தப்பெண்ணினது அல்குலென்னுந் துறையிலே மூழ்கவேண்டுமென்னும் இச்சையதிகரித்திருக்கின்றது. இனிமேலும் நூறுஸ்திரீகளுடன் சுகிக்கிறதென்னும சுகத்தையிச்சியேன் இவளொருத்தியேபோதும் இதுதவறுமேல் நான் உயிர்பிழையேன ஆதலாற் போய்க்கொண்டுவாருமென்று உபசாரவார்த்தையாய்ச் சொன்னார் இவ்வாறு சொல்லவும் மந்திரி ஏ மகாராஜாவே அவள்பக்கத்திலே ஒப்பற்ற நாயகனை பிரிவில்லாமலிருப்பானேல் அப்போது நான் என்னசெய்கிறது என்றுசொல்ல அதகேட்ட அரசன் சொல்லுவான் (எ-று) மற்று - அசை ௨௭

சரத்தினைத்துரந்துமதனுடல்பிளப்பத் தாழ்ப்படுதெனிவடனைமுனிவன், சிரத்தனைத்தடிந்து கொணர்கெனசுடர்வாடிணையைதொட்டடியந்திடுங்காலைக், கரத்தினையெடுக்கக் கொடுங்கொலையிதையானை காண்கிலனெனக்கதேடிச், குரத்தினைத்தொடர்காற்பசும்பரித்தேரோன் குறைந்தனன்மலைறந்தனன்குடபால்.

(இ-பொ-ள)

மன்மதன் புஷபபாணங்களைப்பிரயோகஞ்செய்து என்னுடலைப்பிளக்கத் தாமதஞ்செய்வதென்ன அவள்நாயகன் பிரியாதிரு

ப்பானேல் அப்பிராமணனது சிரசைவெட்டிவிட்டு இவனைக்கொண்டுவாருமென்று பிரகாசம்பொருந்தியவாளாயுதத்தைத் தனது திண்ணியகையாலெடுத்துக்கொடுக்கும்போது தொடர்கின்ற கால்களையுடைய பசியகுதிரைகள்பூட்டிய இரதத்தையுடைய சூரியன் ஆ ஆ இந்தப்பெருங்கொடும்பாவமான கொலையை யானபார்க்கமாட்டேனென்று தன்கிரணங்களையடக்கி பிரகாசத்தையுங்குறைத்து அதிசீக்கிரமாக வோடிப்போய் மேலைச்சமுத்திரத்தில்வீழ்ந்து ஒளித்துக்கொண்டார் (எ-று) உஅ

இளமையும்பொருளு மடமையுமாக மிவையொருநாள்ஸ்ரீமான் கெய்துமு, வளமையிலரசன் பழிப்புகழ்பாந்த வண்ணமொத்திருண்டனகங்கு, லளவகன்முறைசெயரசதேவ லாணையாரெழுகுமந்திரியும், விளையொலிநகர்துஞ்சளவுநின்றேகி மிக்கவர்கொடிமனைபுகுந்தான்.

(இ-பொ-ள)

இளமைப்பருவமும் செல்வமும் அறியாமையும் இராஜாங்கமுமாகிய இந்நான்கையும் ஒருங்கேயுடைய நல்ல மாட்சிமையில்லாத அச்சந்திரசேன மகாராஜனது பிரமஹத்தியாகிய பழியினது கீர்த்தியானது எங்கும் பரவியதன்மையை நிகர்த்து இருளானது பரவியிருண்டது பின் வரம்புகடந்து கொடுங்கோன்முறைசெய்யும் சந்திரசேனராஜன் ஏவலான ஆஞ்ஞையின்வழி நடக்கும சுகுணன் என்ற மந்திரியும் நகரத்திலுள்ளவர்கள் சப்தங்களடங்கி நித்திரையாகும்வரையில் தாமதித்துநின்று பின்சென்று மேற்குலத்தவளாகிய அப்பிராமணப்பெண் வீட்டிற்போய் நுழைந்தான (எ-று) உகூ

பனிமலர்த்தளிம மீமிசைத்துயிலும் பார்ப்பனி மருங்குகண்படைகொ, டனிமறைப்பனவன்சிகைத்தலைதடறு தணந்தகூர்ங்கருவியாற்றடிந்து, கனிபழுத்தமைத்தகுதலையந்தீஞ்சொற் கவிரிதழ்க்குவிமுலைக்கணைக்கட், குனிசிலைப்புருவக்கருநெடுங்கூந்தற் கொடியினைப்பிடித்தலுந்துடித்தாள்.

(இ-பொ-ள)

பின்குளிர்ச்சி பொருந்திய புஷ்பசயனத்தின்மீது நித்திரைசெய்கின்ற பிராமணஸ்திரியின் பக்கத்தில் தூங்குகின்ற ஒப்பற்ற வேதங்களையறிந்த பிராமணனுடைய சிகையுள்ளசிரசை உறையினின்று நீக்கிய கூர்மைபொருந்திய வாளினால்வெட்டிவிட்டு மிக

னைந்திருக்கின்ற இளமைபொருந்திய அழகியமாதுரியமான வசனத்தையும் முருக்கம் பூப்போலும் அதரங்களையும் குவிவாகிய ஸ்தனங்களையும் அம்புபோன்ற கண்களையும் வளைவாகிய வில்லையொத்த புருவங்களையும் நீண்டகரிய கூந்தலையுமுடைய பூங்கொடிபோல் வாளாகிய அப்பெண்ணைப்பிடித்தமாத்திரத்தில் பதைபதைத்தாள் (எ-று) ௩௰

வேறு.

இறந்தவீடவற்கேங்கியங்கெய்துறை
துறந்தவாளவற்கண்டுதண்ணென்றழத்
திறந்தவாயினைச்சிக்குறச்சேமியா
மறந்தவாமதிமன்னன்முன்விட்டனன்.

(இ-பொ-ள்)

தந்நாயகன்வெட்டுண்டிறந்துகிடப்பதற்கு ஏக்கமடைந்து அவ்விடத்தில் வந்துநிற்கிற உறையினின்றுநீங்கிய வாளாயுதத்தையுடைய அப்பெருங்கொடும்பாவியாகிய மந்திரியைப்பார்த்து திடுக்கிட்டுப பெருங்கூச்சலிட்டழுதற்குத் திறந்தவாயை கெட்டியாய்மூடி பாபத்தொழிலினின்று மாறுசபுத்தியையுடைய அச்சந்திரசேனராஜன் சமூகத்திற்கொண்டுபோய்விட்டான் (எ-று) ௩௧

விட்டபோதுவிடாநசைவேந்தன்வே
டொட்டபோதசுடுவதெலாநின்கட்
பட்டபோதகுளிர்ந்தனபார்வைநீ
நட்டபோதென்னயப்பறிவாயரோ.

(இ-பொ-ள்)

அவ்வாறு மந்திரிவிட்டவளவில் அவன்பேரில்வைத்த இச்சையானது ஒருசிறிது நீங்காதஅக்கொடுங்கோன் மன்னனாகிய சந்திரசேனன் அவளைப்பார்த்து ஏ தங்காய் என்னைமன்மதன் தனது கருப்புவில்லினின்றும் பிரயோகஞ்செய்த புஷ்பபாணங்கள் தகிக்குந்தன்மையெல்லாம் உனது கடபார்வை என்மேற்பட்ட அப்போதேகுளிர்ச்சியையடைந்தன நீ என்னோடுசினேகித்தபிறகு எனனுடைய தன்மைகளைத்தெரிவாய் (எ-று) அரோ அசை ௩௨

முலைத்தலைச்சுகநல்கிடின்மோகவேள
கலைத்தலைத்தொழிற்காந்தையர்கைதொழ

வலைத்தலைத்திருவன்னவுன்றன்னையென்
றலைத்தலைத்தனிதாங்குவன்யானென்றான்.

(இ-பொ-ள்)

அன்றியும் உனது ஸ்தனங்களோடு சேர்ந்தனுபவிக்கும் சுகத்தைஎனக்குகொடுப்பாயேல்காமஇச்சையுண்டாகும் மன்மதனது சாஸ்திரமாகியகொக்கோகத்திற்கூறிய செய்கைகளைத்தவறாது செய்யும்மற்றையஸ்திரீகளெல்லாம் உன்னைக்கைகூப்பிவணங்கும வண்ணம்அலைகளையுடைய திருப்பாற்கடலிற்றோன்றியமஹாலக்ஷிமியைப்போன்ற சுலாக்கியமான உன்னை யான் என்னுடைய இப் பற்றதலையினிடமாக வைத்துச் சுமப்பேன் என்று சொன்னான் (எ-று) ௩௩

என்றபோதத்திருசெவியிற்றனை
மன்றலுறுமலர்க்கையிற்சேமியா
நின்றநேரிழைநீதியைவேரொடுங்
கொன்றவேந்தனைப்பார்த்திவைகூறுவாள்.

(இ-பொ-ள்)

என்றிவ்வாறுசொல்லியபோதுஇரண்டுசெவியின் துவாரங்களையும்வாசனைவீசுகின்ற செங்காந்தட்புஷ்பம்போன்ற கைகளால் பொதித்துகைத்துநின்றநேரிய ஆபரணங்களைத்தரித்த மஹாலக்ஷிமிபோன்ற அப்பார்ப்பனிமனுநீதியை அடியோடுங்களைந்த அச்சந்திரசேனன என்ற அரசனைப்பார்த்து அடியில்வரும் வார்த்தைகளைச்சொல்வானாயினாள். (எ-று) (௩௪)

கொலைவிழைந்தவர்செய்ந்நன்றிகொன்றவாழ்
தலைவிழைந்தவர்சாதிவிழைந்தவர்
புலைவிழைந்தவர்பொற்பழிந்தேபிற
னிலைவிழைந்தவர்யாவருயர்ந்துளார்.

(இ-பொ-ள்)

உயிர்களையவைகளுக்கு நிலைக்களமாகிய உடம்பினின்றும் பிரியச்செய்தலாகிய கொலைத்தொழிலில் விருப்பமுடையவரும் ஒருவர்செய்த உபகாரத்தை மறந்துயிர்வாழ்தலில் விருப்பமுடையவரும் கள்ளுண்பதைவிரும்பினவர்களும புலாலுண்ணுதலில் விருப்பமுடையவரும் நடுவுநிலைமைதவறி பரதாரகமனஞ்செய்பவருமாகிய இவர்களில் உயர்ச்சி பெற்றவர்கள் யாரிருக்கின்றார்கள் ஒருவருமில்லையென்றபடி (எ-று) ௩௫

தாரமல்லவர்தாயென்பதாயினை
நேருமன்னைதிருபமுன்னேன்மனை

(இ-பொ-ள)

மிகுந்த இச்சையையுடைய காமிகளுக்குள் சிகைப்போன்றவனாகிய அச்சந்திரசேனனென்ற அரசன் பார்ப்பனியினது மலைபோன்ற ஸ்தனங்களின்மேல் தனது வலிமையால் ஆசையோடும் அழகிய கைகளினாலே தழுவும்போது அழகில் தனக்குச்சமானமில்லாதவளாகிய அப்பெண்கூச்சலிட்டு அழுதாள் (எ-று) ௩௧

அனையகாலையரசனைவைதறீஇ
மனையன்பாற்றுயாமாசறமாற்றுவா
னெனவல்வேதியனாணிகவாப்பழி
வினையுருக்கொடுவந்துவிலக்கினான்.

(இ-பொ-ள)

அந்தச்சமயத்தில் அவள் நாயகனாகிய பிராமணன்றான் அச்சந்திரசேனராஜனை வைது தன் மனையாளுக்கு நேரிட்ட துன்பத்தை நன்றாய் நீக்குவோனைப்போல நீங்காத கொடிய வினையாலாகிய பிர்மஹத்திரூபங்கொண்டு அங்கே வந்து விலக்கினான் (எ-று) ௩௨

இடிக்கும்வெம்பகுவாய்திறந்தேங்கும்பற்
கடிக்குமஞ்சவுறக்குங்கண்மேற்கனல்
பொடிக்குநின்றுபுகைந்துயிர்க்கும்பிட
ரடிக்குமஞ்சினங்கூறுமடர்க்குமால்.

(இ-பொ-ள.)

கையாலிடிக்கும் வெவ்விய பிளந்ததன்வாயைத்திறந்து ஏக்கமடையும் பற்களைக் கடகடவென்றுகடிக்கும் அவர்கள பயமடைய அதட்டும் கண்களினமேல் அக்கினிய பொறிபறக்கும் நின்றுகோபத்தாற் பெருமூச்செறியும் பிடரியையடிக்கும் சபதம்சொல்லும் நெருக்கும் (எ-று) ஆல அசை ௩௩

என்னபாவமிதுவென்றழுதகு
மன்னவாபழிதாவெனுமந்திரி
தனையவாபொரவெனுந்தனித்தனி
இன்னல்கூரவிவ்வாறுதொடர்ந்ததால்.

(இ-பொ-ள)

ஆ ஆ இது என்னபாவம் பாவம் என்று அழும் பின்னும் நகைக்கும் ஏ அரசனே பழிகொடும் என்றுகேட்கும் மந்திரியைச்

சண்டைசெய்யவா என்றும் கூப்பிடும் இவ்வண்ணம் தனித்தனி யே துன்பமடையத்தக்கதாய் அவர்கள் பின் தொடர்ந்தது (எ-று) ஆல் அசை சஉ

## வேறு.

மேவுமவந்தியுநாடுமிகந்துபின்வேறேகுங்
காவலன்மந்திரியோடியுழன்றிருகாலோய்வர்
கேவலவெம்பழிதீர்வகைகண்டிலர்கேதாரம்
போவதுபுந்தியினீடுநினைந்தனர்போனாரால்.

(இ-பொ-ள)

பின் தாங்களிருந்த அவந்திமாநகரத்தையும் நாட்டையும் விட்டு நீங்கிப்பிரதேசங்களிற் செல்கின்ற சந்திரசேனராஜனும் மந்திரியும் ஒடி யோடி வருந்தியிருகால்களும் ஓய்ந்தபோசவார்க ள் கேவலமாகிய மிகக்கொடிய பிர்மஹத்தியாகிய தொலையும் வழிகண்டார்களில்லை திருக்கேதாரம் என்னும் திவ்யக்ஷேத்தி ரத்திற்குபோவோமென்று மனதில் மிக நினைத்தவர்களாகிப்போ னார்கள் (எ-று) ஆல் அசை சங

எவ்வுயிரோனுமருந்திடினெஞ்சத்திகவாதே
திவ்வியலிங்கமதாகத்திரட்டருசிவதீர்த்தம்
வெளவுறமூழ்கினர்கேதாரத்தமர்மாதேவன்
செவ்வியதாண்மலரங்கைவணங்கினர்சென்றாரால்.

(இ-பொ-ள)

எவ்வகையான ஆன்மாக்களேயாயினும் மனதாலிகழ்ச்சிசெ ய்யாமல் உட்கொள்வார்களாயின் திவ்யமான சிவலிங்க சொரு பமாகத் திரளச்செய்கின்ற பெருமையுடைய அச்சிவதீர்த்தத்தில் பொருந்த ஸ்நானஞ்செய்தவர்களாகி யத்திருக்கேதாரக்ஷேத்திர த்தில் எழுந்தருளிவிளங்கு மஹாதேவரான கேதாரநாதருடைய சிவந்ததாமரைமலர்போன்ற திருவடிகளை அழகியகைகளைக்கூப் பித்தொழுது அப்பாற்போனார்கள (எ-று) ஆல அசை சச

கொங்கலர்சேர்பிருதூநகலாவிகுடைந்தேகிக்
கங்கையின்மூழ்கினர்காசியிலீசன்கழல்பேணிப்
பங்கமில்சீசயிலம்பணியாவருள்படாகோடி
சங்கரமேவினரங்கணமர்ந்தணைந்தாரால்.

(இ-பொ-ள)

வாசனைபொருந்திய புஷ்பங்கள் நிறைந்த பிருதூநகதீர்த்தத் தில் ஸ்நானஞ்செய்து அப்பாற் சென்று கங்காதீர்த்தத்தில் ஸ்நா

ளரு செய்தவர்களாய் காசிக்ஷேத்திரத்தில் ஸ்ரீ விசுவநாதேசுரா து திருவடிகளை வணங்கிப்பின் குற்றமில்லாத ஸ்ரீசைலத்தில் மல்லிகார்ச்சுனேசுரனைத்தொழுது திருவைபொருந்திய கோடிசங்கரமென்னுந்திவ்வியஸ்தலத்திற் சேர்ந்து அங்கேசிலகாலம் வசித்து அதை விட்டு (எ-று) ஆல் அசை ௬௫

கோதாவிரிகணவேணிபிருவினிகுளிருந்தண்
போதார்பொன்முகிமுதலாநதிகள்புகுந்தாடித்
தீதார்பழியழியாதேதொடர்வுறுசெயலெண்ணித்
தாதாரிதழியரோகாம்பரநகர்சார்ந்தாரால்.

(இ-பொ-ள)

கோதாவிரி கண்ணவேணி பெண்ணேயாறு குளிர்ச்சியான புஷ்பங்கள் நிறைந்துள்ள பொன்முகரிமுதலிய புண்ணியநதிகளிற் சென்றுஸ்நானஞ்செய்தும் பின்னும் குற்றம்பொருந்திய அப்பிர்மஹத்தியானது நீங்காமலே பின் தொடர்ந்து வரும் செய்கையை நினைத்து மகரந்தநிரம்பிய கொன்றைமாலையைத்தரித்த திருவேகாம்பரேசுரர் எழுந்தருளும் காஞ்சிபுரத்தைச் சேர்ந்தார்கள் (எ-று) ஆல் அசை ௬௬

சைவாகமமுறைமலையாள்வழிபடுதண்சூதப்
பைவாளரவணிபவர்தாண்மலர்கள்பணிந்தேகிப்
பெய்வார்மழைதவழ்கிரிசயிலத்துறைபெருமானுஞ்
செவ்வாய்வரதமுகுந்தனைவந்தனைசெய்தாரால்.

(இ-பொ-ள)

பருவதராஜகுமாரியாகிய உமாதேவியார் சிவாகமவிதிப்படி சிவ பூஜைசெய்து பணித்தகுளிர்ச்சியையுடைய மாவிருக்ஷத்தடியில் விளங்கும் ஒளிபொருந்திய படத்தையுடைய சர்ப்பங்களை ஆபரணமாகத்தரித்தருளிய ஏகாம்பரேசுரருடைய திருவடிகளாகிய தாமரைமலர்களை வணங்கிச்சென்று மழைபெய்கின்ற நீண்டமேகங்கள் தவழ்கின்ற அத்திகிரி யென்றஸ்தலத்தில் வீற்றிருக்கும் பெருமையுடையவராகிய சிவந்தவாயையுடைய வரதராஜப்பெருமானை வணங்கினர் (எ-று) ஆல் அசை ௬௭

சூழ்ந்தொளிர்காஞ்சிகடந்துதலன்பலதொழுதேமின்
சூழ்ந்தொளிர்வேணியனுமையுடனுடியதனிமன்றம்

வாழ்ந்தொளிர்தில்லையினெல்லைவணங்கிமகிழ்ந்தேவின்
போழ்ந்தொளிர்கோபுரவாயில்பணிந்துள்புகுந்தாரால்.

(இ-பொ-ரை)

சூழ்ந்துபிரகாசிக்கின்ற காஞ்சிபுரத்தைவிட்ட கன்று பலசி வஸ்தலங்கள் தோறுஞ்சென்று வணங்கி மின்னற்கொடிபோன்று தொங்கிவிளங்கும் ஜடாபாரத்தையுடைய ஸ்ரீ சபாநடேசர் சிவகாமவல்லியுடனே பரமானந்தத்தாண்டவஞ்செய்தருளிய நூப்பற்றகனகசபையானது வாழ்ந்து பிரகாசிக்கின்ற சிதம்பரஸ்தலத்தின் எல்லையைக்கண்டமாத்திரத்தில் பணிந்து பேரானந்தமடைந்து ஆகாயத்தைப்பிளந்து மேலிட்டுப்பிரகாசிக்கும் ஸ்தூலலிங்கமாகிய கோபுரத்தின் வாயிலில் நமஸ்கரித்து உள்ளேசென்றார் (எ-று) ஆல் ஏ ஏ அசை ௪௮

சிமையநெடுஞ்சிலையுடையபரம்பொருள்சிவஞான
மமையநிரம்பியவெளியொளிமன்றி னுளகலாதே
யுமையவளம்பிகைபராசிவசுந்தரியுடனாடு
மிமையவர்கும்பிடுநடமிருகண்களினெதிர்கண்டார்.

(இ-பொ-ரை)

மஹாமேருவை நீண்டவில்லாகவுடைய பரம்பொருளாகிய ஸ்ரீ நடராஜமூர்த்தி சிவஞானம பொருந்திநிறைந்த ஆகாசமாகிய பிரகாசம்பொருந்திய சபையில் நீங்காது உமாதேவியாகியும் அம்பிகையாகியும பராசத்தியாகியும விளங்கும் சிவகாமசவுந்தரியுடனே ஆடுகின்ற தேவர்கள் யாவருங் கைகூப்பிவணங்கும் ஆனந்த திருநிருத்தத்தை நேரே கண்ணாரத் தெரிசித்தார்கள (எ-று) ௪௯

இருவிழிமென்புனலருவிசொரிந்திடவெதிர்வீழா
வுருகினர்நின்றடிபரவினரஞ்சலியுடன்மீளா
வரும்வழிகண்டனருயர்சிவகங்கைநன்மலர்வாவிப்
பொருகரையினபுடையெழுகடனுண்டருள்புகழோனே.

(இ-பொ-ரை)

மெல்லிய இரண்டுகண்களினின்றும நீரானது அருவியைப்போல ஒழுகத்திருமுன்னே நமஸ்கரித்து மனங்கரைந்தார்கள் நன்றுகொண்டுதிருவடிகளைத் துதித்தார்கள் அஞ்சலியாகக்குவித்

தகைகளுடனே திரும்பிவாநின்றவழியில் உயர்ந்த நல்லபுஷ்பங்கள் நிறைந்த சிவகங்கையென்னுந் திவ்விய தீர்த்தத்தின அலைகள் மோதுகின்ற கரையின்பக்கத்தில் சப்தசமுத்திரங்களையும் ஒருமுந்தளவாகத்திரட்டி ஆசமனஞ்செய்த பெரும்புகழையுடையவரும் (எ-று) ௫௰

முதுதிரிபுண்டரநுதலனை மென்சடைமுடியானை
யதிர்கடனஞ்சினையமுதினுகர்ந்தவனையானைச்
சதுர்மறையின்பொருளறிவனையின்றமிழ்தருவானைப்
பொதியநெடுங்கிரிமுடியினிருந்தருள்புரிவானை.

இ-பொ-ள

முதிர்ந்த மூன்றுகுறியாகத்தரித்தவிபூதிபொருந்திய நெற்றியையுடையவரும் மென்மையான ஜடாமகுடத்தை யுடையவரும சப்திக்கின்ற திருப்பாற்கடலிற் றோன்றிய ஆலகால விஷத்தை அமுதாகத்திருவமுது செய்தருளிய சிவபெருமானை நிகாத்தவரும் நானகுவேதங்களின் பொருள்களையெல்லாம் அறிந்தவரும் இனிய தமிழை உலகத்தில்விளங்கச் செய்தவரும் நீண்டபொதியாசலத்தின உச்சியிலெழுந்தருளியவருமாகிய அகஸ்தியமஹாரிஷியைப் பார்த்தாாகள் (எ-று) ௫௧

இனிதுன்றெரிசனமெனவந்தடியிணையெதிர்வீழா
முனிபுங்கவவுனைநனிதம்பினமெனமொழிவார்முன்
புனிதன்சிவமுணர்விழிகொண்டனையவர்புரிபாவந்
தனையுந்தெரிபவனருடந்தெதிர்மொழிதருவானல்.

(இ-பொ-ள)

ஐம்பொறிகளையும்வென்றமஹாரிஷிகளுள் உத்தமோத்தமரான சுவாமிதேவரீரையிப்போதுஅடியேங்கள் தெரிசித்தது மிக நன்று என்று சமீபித்துவந்து இரண்டு திருவடிகளின் முன்னேநமஸ்கரித்து எழுந்து தேவரீரைமிகவும் நம்பினேம் என்று சொல்லிய அவ்விருவரும் முன்னே பரிசுத்தராகிய அவ்வகஸ்தியமஹாரிஷி சிவத்தையறியும் ஞானக்கண்ணினாலே அவ்விருவருஞ்செய்த பாவங்களையும் தெரிந்தவராயவர்கள்மீதருள்கூர்ந்து மறுமொழி சொல்வாராயினர் (எ-று) ஆல் அசை ௫௨

வேறு.

நுவருங்கொடியபாவமுமூர்த்தடனமெங்குநீவி

சியாவருஞ்சதுநாலுங்கட்கினியணிந்தகளூற்றேவர்
தேவரும்பொதுவிருடல்தெரிசித்தீரொலையுங்கண்டீர்
மேவருங்களிப்பான்முன்செய்வெம்பவம்விளம்பித்தீர்வீர்.

(இ-பொ-ள)

நீங்கற்கரிய மிகக்கொடிய பாபகிர்த்தியங்களைச்செய்து வரு ந்திச்சரீரமெல்லாம் நமெலிந்துநின்ற நீங்கள்யார் இனி உங்களுக்கு இக்கொடியபாபத்தினின்றும் நீங்கிப்பிழைக்கும் நாள் சமீபமாயி ற்று அதனால்தான் மஹாதேவராகிய ஸ்ரீமந் நடராஜமூர்த்தி மிக அருமையான பொன்னம்பலத்தில் செய்தருளும் பரமானந்த தாண்டவத்தைத் தெரிசனஞ்செய்தீர்கள் நம்மையுங்கண்டீர் இது நீக்க அடைதற்கரிய செல்வச்செருக்கால் முன்னே செய்த கொடு ம் பாவங்களையெல்லாம் சொல்லித்தீர்வீர் (எ-று) ௫௨

என்றுமாகொலேப்பவேந்தனிறைஞ்சிநின்றெங்கட்கின்ன
னென்றுமாவழங்குமாஞ்செய்தன்மையுமுனவோவைய
முன்றுமழ்நெடியமாடக்கொடிநகரவந்தியான்வேன்
றன்நகையழித்துதேயுஞ்சந்திரசேனனென்பேர்.

(இ-பொ-ள)

என்று அகஸ்தியமஹாரிஷியானவர் திருவாய்மலர்ந்தருள அ தைக்கேட்டசந்திரசேனன் என்ற அரசன்வணங்கி நின்று சுவாமி தேவரீர்தாயேங்கட்கு இங்கேஇந்தக்கிருபைபொருந்திய நல்வசன த்தைச்சாதகமாய்க் கூறத்தக்க தன்மையை நாங்கள் அப்படிசெய் திருக்கின்றேமா ஆயினும் மலைபோன்ற மிக நீண்டதுவஜங்கள் கட் டிய மாடமாளிகையுடைய அவ்வவந்திமா நகரத்தை யாளுகின்ற வன என்பெயர் தனனுடைய நிலைமையினின்றுங் கெட்டுத்தேய்கி ற சந்திரசேனன் எனபதாம (எ-று) ௫௩

என்னுயிரமைச்சனமற்றிவ்விவன்பெயர்சுருணன்யாக்கை
தன்னும்யௌவனத்திற்செல்வத்தருக்கிற்றன்மதிமிக்கூர்ந்து
மனனுயிர்வருத்திவாழ்ந்தேன் மறையவர்பொருள்கூட்டுண்டேன்
கன்னியால்குற்காமக்கடலிடைக்கவிழ்ந்துவீழ்ந்தேன்.

(இ-பொ-ள.)

என்னுடைய ஆப்தமார்த்தமான மந்திரியாகிய இங்கேயிருக்கி ற இவனுடையபெயர் சுருணன் அடியேன்சரீரத்திற்கு பொருந்தி

ப இளமைப்பருவத்திலேசெல்வச்செருக்கினாலே தூர்புத்தியதிகரி
த்து அதனால் பிறவுயிர்களையெல்லாம் இம்சித்துவாழ்ந்தேன் பி
ராமணர்பொருளையெல்லாம் கொள்ளைகொண்டேன்டேன் காமஇ
ச்சையினால் ஸ்திரிகளுடைய நிதம்பமாகிய படுகடலில் குப்புற்று
வீழ்ந்தமிழ்ந்தினேன். (எ-று) ௫௫

நிதம்பகலிரவாய் நூறுநேரிழையவர்தோடோய்ந்து
மதம்படுவிலங்கினின்றேன்மற்றெலாநிற்கயான்செய்
கதம்புரிவினையினொன்றுகழறுகேனொருநாட்டேவர்
பதந்தொடவுயர்ந்தசெம்பொன்படர்நெடுஞ்செய்குன்றேறி.

(இ-பொ-ள)

பிரதிதினமும் பகலிலுமிரவிலுமாக நேரிய ஆபரணங்களைத்த
ரித்த நூறுஸ்திரிகளுடையதோளைப்புணர்ந்து மதங்கொண்டயா
னைபோல மாறுண்டுநின்றேன இவையெல்லாமிப்படியிருக்க இன
னும் நான்செய்தமிகக்கொடிய பாவவினைகளுள் ஒன்றைச்சொல்
லுகிறேன என்னையெனின் ஒரு நாளில்தேவலோக பரியந்தம்
வளாவியுயர்ந்த செவ்வியபொன்னாற்செய்த நீண்டஓர் கட்டுமலை
யிலேறிக்கொண்டு (எ-று) ௫௬

ஒருந்தனிவனொடங்ஙிருஞ்சிறைநேமிப்புட்கும்
பருந்துகாமுகர்க்குந்தத்தமனந்தொறும்பகிர்ந்துவைப்பான்
தருங்கெரிமேல்பால்வெற்பின்முகட்டிற்சேணுறவளர்த்தான்
திருந்துவேளென்னமாலைச்செககர்வந்தணையும்வேலை.

(இ-பொ-ள)

இம்மந்திரியோடிருந்தேன் அவ்விடத்தில் பெரிய சிறகுகளையு
டையசக்கிரவாகப்பறவைக்கும் வருந்துகின்ற தூர்த்தர்களாகிய
காமிகளுக்கும் தம்தம்மனந்தோறும் பாகஞ்செய்துவைக்கும்பொ
ருட்டுயாவரையும் தகிக்கின்ற அக்கினியைத்திருத்தமான அழகி
னையுடைய மன்மதன்மேலைத்திசையிலுள்ள அஸ்தகிரியின் உச்சி
யில் வளர்த்தான் என்று சொல்லும்படி மாலைக்காலத்தில் செவ்
வானம படர்ந்தது அச்சமயத்தில் (எ-று) ௫௭

தேனிருந்தொழுகுங்கொவ்வைச்செங்கனிமணிவாய்க்கெண்டை
மீனிருந்தொளிரும்வாட்கண்மிக்கவர்தெரிவைமைக்கார்
வானிருந்தொளிருமின்னின்மருங்குறன்னாடவந்தா

ளானிருங்கொடியார்வைகுமவந்திநீண்மறுகினம்ம.

(இ-பொ-ள)

தேனுறைந்து ஊற்றிருந்தொழுகுகின்றசெவ்விய கொவ்வைப்ப
ழத்தை நிகர்த்த அழகியவாயையும் கெண்டைமீன்கள் தங்கியிரு
ந்துபிரகாசித்தாற்போன்ற ஒளிபொருந்திய கண்களையுமுடைய
ஓர் பிராமணப்பெண்ணானவள் ஆகாயத்திலிருந்து விளங்குகின்ற
கரியமேகத்திற்றோன்றும மின்னற்கொடிபோன்ற இடையாளாகு
தளர்ந்து அசையப்பெரிய ரிஷபக்கொடியையுடைய சிவபெரு
மான் எழுந்தருளிவிளங்குகின்ற அவந்திமா நகரத்தின் நீண்ட
வீதியினிடமாகவந்தாள் (எ-று) அம்ம அசை ௫அ

கண்டனன்மதியைமோகக்கார்முகின்மறைப்பமேலாம்
பெண்டனமுயங்கினபம்பெறவிவன்றன்றேடந்த
வண்டிமிர்குழலாள்சென்றமனையினையெளிதெனபாற்
கொண்டனைமுனிவனசிற்றங்காறியென்றுரைத்துவிட்டேன்.

இ-பொ-ளா.

நான் பார்த்தேன் உடனே எனது அறிவாகிய சந்திரனை காப
விச்சையாகிய அந்தகாரமான மேகம் வந்து மூடிக்கொள்ள அத
னால் அப்பிராமணப்பெண்ணின் ஸ்தனங்களோடுசேர்ந்தும் இன்ப
மனுபவிக்க உத்தேசித்து இவனோடுவந்தகேள் சப்திக்கின்றகூந்த
லையுடைய பிராமணஸ்திரியானவள் போகும்வீட்டிற்சென்று பிடி
த்து என் முன்னுகைக்கொண்டுவருவாயாக ஒருவேளை அவன் நாயக
ன கோபிப்பானேல் அவனைக்கொன்றுபோடு என்று சொல்லி அ
னுப்பினேன் (எ-று) ௫கூ

சொற்படிமுனிவன்சென்னிதுணித்தவட்கொணர்ந்தான்மானக்
கற்படிபெயராமின்னைக்கரத்தினுலணைக்குமுன்ன
ரற்படிநிறத்திற்சிறியடர்த்ததுபிரமபாவ
நற்படிவலஞ்செய்குற்றேமவிடாதுபிலவிவணத்ய.

(இ-பொ-ளா)

என் சொற்படியே அப்பிராமணன் சிரசைவெட்டி அந்த ஸ்
திரீயைக் கொண்டுவந்துசேர்த்தான் மானமாகிய கற்பினிலையினி
ன்றுநழுவாத அந்தப்பெண்ணை என் கைகளினால் தழுவுமுன்னமே
இருளைபொதிந்தகரிய நிறத்தோடும் சீறிக்கொண்டு பிரமஹத்தி
யானது வந்து சேர்ந்தது அதனால் நன்மையான இப்பூமியைச்சு
ழ்ந்து வருகின்றேம் இன்னமும சுவாமீ அப்பிரமஹத்தியானது என்னை
விடாமல் நீங்காமல் பின் தொடர்ந்து துன்பஞ் செய்கின்றது
(எ-று) கூ

நெய்யடைகனலிற்சீறிநெருங்கியபழிக்குளெய்த்தேங்
கையடையாக்களெம்மைக்காப்பதுங்கடமையென்றார்
மெய்யடைநீற்றுவேணிமெய்த்தமிழ்முனிவன்பாவ
மையடையுளத்திரஞ்சலஞ்சலென்றருளிமாதோ.

(இ-பொ-ள)

நெய்சேர்ந்த அக்கினியைப்போல ஆங்காரமாய்க்கொதித் வருந்திய பிரமஹத்திதோஷத்தால் மிகவுளைத்தோம் ஆதலால் ஸ்வாமி அடியேங்கள் தேவரீருக்கு அடைக்கலம அடியேங்களை இரக்ஷிப்பது தேவரீர்கடமையேயாம என்று இரந்து கேட்டு கொண்டார்கள் திருமேனியிற்றரித்த திருநீற்றையும் ஜடாமுடியையும் உடைய உண்மையானதமிழிற்குப்பிறப்பிடமாயுள்ள அகஸ்திய மஹரிஷியானவர் கரியபாவங்களேகுடிகொண்டிருக்கு மனத்தையுடையவர்களே அஞ்சற்க அஞ்சற்க எனத்திருவருள்சுந்து (எ-று) மாதோ அசை ௬௬

படவரவேணிகாட்டும்பதிநதிவடபாற்றோன்று
மிடவபுரேசன்பாதமிருகடிகைப்போதுன்னி
யுடல்புளகுதிப்பக்கண்ணீரூற்றிருந்தொழுகவாங்கவ்
வடலரசனைப்பார்த்தன்பினருள்கூரந்துரைப்பதானான்.

(இ-பொ-ளை)

படத்தையுடைய சர்ப்பமானது எல்லைகாட்டிய புண்ணியஸ்தலமாகிய திருவாலவாய்க்கு வடதிசையிலுள்ள வையைநதிக்கு வடபக்கத்திற்றோன்றும் ஸ்ரீ இடபபுரேசரது திருவடிகளை இரண்டு நாழிகையளவு தியானித்து சரீரமெல்லாம புளகங்கொள்ள இரண்டுகண்களினின்றும ஜலமானது ஊற்றெடுத்துத்தாரை தாரையாயொழுக அங்கேநின்ற வெற்றிபொருந்திய அச்சந்திரசேனராஜனை யன்புடன் பார்த்துத்திருவருட்பெருக்கோடேந்தி நுவாய மலர்த்தருள்வாராயினார் (எ-று) ௬௭

கனிநறுஞ்சுவைத்தேன்கைப்பக்கற்றுளோர்க்கினிப்பமேனாட்
பனிவளாமுகட்டிலென்பாற்பரஞ்சுடருபதேசித்த
புனிதநற்றமிழ்சேர்சங்கம்பொலிநகர்வடபால்வையைக்
கினிதணித்துறைபுங்காட்சியிடவபுரப்பேர்மூதூர்.

(இ-பொ-ளை)

மிகக்கனிந்த நறியமதுரம்பொருந்திய தேனும் கைத்துப்

பேரகவும் இலக்கண இலக்கியவாராய்ச்சிசெய்த நன்றாய்க்கற்ற
றிந்தவர்களுக்கு மதுரிக்கவும் முன்னுளில் இமோத்கிரியின் உச்சி
யிலிருந்துகொண்டு நம்மிடமாக பரஞ்சோதிசொருபராகிய சிவ
பெருமான் அனுக்கிரகித்தருளிய பரிசுத்தமான நல்ல தமிழ்சேர்
ந்தசங்கமிருந்து விளங்கும் மதுராபுரிக்கு உத்தரதிசையிற்செல்
லும்வையைமாநதிக்குமிகச்சமீபித்திருக்கும்தோற்றமுடையதாய்
நந்திநகரமென்னும் பெயரையுமுடைய பெரிய ஊரொன்றிருக்கின்ற
து. (எ-று)

ஏயவந்நகரிலன்னவிநோதனுமிலிங்கமூர்த்திக்
காயதென்றிசையினந்தியடிகள்பேர்த்தீர்த்தமுண்டான்
மேயவத்தீர்த்தமூழ்கவிறல்வடுகேசன்றீர்ந்து
போயினனபிரமபாவமூநவமெனலுங்கேட்டார்.

(இ-பொ ளா)

அந்நகரிற்றிநகரத்தெழுந்தருளிய அன்னவிநோதராகிய சி
லிங்கப்பெருமானுக்குத் தென்றிசையிலே திருநந்திதேவராது தி
நாமம்பூண்டதிவ்வியதீர்த்தம் ஒன்றிருக்கின்றது பொருந்திய
ந்நந்திதீர்த்தத்தில் முன்னொருகாலத்திலே வெற்றி பொருந்தி
வைரவக்கடவுள் ஸ்நானஞ்செய்து தன்னைத்தொடர்ந்த பிரமஹத்
யானது நிவர்த்தியாகப்பெற்றனர் என்றருளிச் செய்தவளவில்
தைக்கேட்ட அரசன் (எ-று)

குனாமுசவூர்திக்கெய்துங்கொடும்பழிவரவென்னிந்தத்
தினாதவழ்வாவிதோய்ந்துதீர்ந்தசெவ்வாறினறெங்கட்
குனாயெனச்சிறுவிதப்பெருடையவனமகததிற்செந்தா
மனாமகனமராதாப்பண்வந்துமுன்பிருக்குங்காலை.

(இ-பொ-ரை)

குனாக்கின்ற முகத்தையுடைஞாளியை வாகனமாகவுடை
வைரவமூர்த்திக்கு எய்தியகொடிய பிரமஹத்தியானது வந்தக
ணமெனன அலைகர்தவழாநின்ற இந்தஇடபதீர்த்தத்தில் ஸ்நா
ஞ் செய்து நிவர்த்தியானது எப்படி அந்த இப்போது அடியே
ளுக்குத் திருவாய்மலர்ந் தருளவேண்டும் சுவாமீ என்றுகேட்
கொண்டார்கள் அவ்வாறுபிரார்த்தித்த இருவரையும் அகஸ்தி
ஹரிஷிபார்த்துத்தககனுடையயாகத்தில்செந்தாமரை மலரில்
க்கும் பிரமாவானவர் முன்னேதவர்களுக்கு மததியில் வந்தி
கும்போது (எ-று

சராசரசடங்கடோறுந்தனித்தனிகலந்துநிற்கும்

ராயரன் விமலனெந்தைபசுபதிசிரங்கள்போலும்
ராவியசிரங்களைந்தும்விளங்கியதனக்குமென்னுத்
ராணவமடைந்துநின்றானஃதுணர்சுருதிமூர்த்தி.

(இ-பொ-ள்)

சரம் அசரம் என்னும் இருவகையாகிய ஜடங்களிலும் தனி தனியேபுணர்ந்து நிற்கின்ற பராபரனுகியும் மலரகிதராயும் எ துகடவுளாயும் ஆன்மாக்களுக்கெல்லாம் பதியாயும் விளங்கும் சிவபெருமானது சிரசுகளைப்போலவே கலந்த ஐந்துசிரசுகளும், னக்கும் விளங்கியிருக்கிறதென்று அகங்காரங்கொண்டு இருந் தார் அதைய நிந்தவேதநாயகராகிய சிவபெருமான் (எ-று) ௬௬

சினந்தலைநிமிர்ந்தசூலத்திகம்பரக்குமரற்கூவி
மனந்தலைமயங்குந்தண்பூமகன்றலையைந்தினுள்கி
னனந்தலைவிளங்கு மெய்ம்மைநகுதலையறுத்தியென்னு
முனந்தலையறுத்தான்பாவமுடுகியதான்பாற்போகி;

(இ-பொ-ள்)

கோபத்தால் நிமிர்ந்தசிரசுகளையுடைய சூலாயுதத்தைத்தரித்த திருவாணசொரூபத்தையுடைய வைரவமூர்த்தியையழைத்துத் தன் யதார்த்தமானமனநிலையிற்றடுமாறுண்டிருக்கும் குளிர்ச்சியானதாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமாவினது ஐந்துசிரசுகளில் நான்குசிரசுகளின்மத்தியில் விளக்குகின்ற நம்மை அவமதித்துச் சிரித்த சிரசையறுப்பாயென்று ஆஞ்ஞாபிக்குமுன்னேயே யந்த நடுச்சிரசைத்தனது இடக்கரத்தின்கனிட்டவிரல் நகத்தால் அகழ்ந்தார் உடனே பிரமஹத்தியானது வந்துபிடித்தது அப்போது வைரவக்கடவுள் பரமசிவனிடம் சென்று (எ-று) ௬௭

பிரமாவின் நடுச்சிரசுசுவாமியை அவமதித்திகழ்ந்ததற்கும் வைரவக்கடவுள்இடக்கரத்தினகனிட்டவிரலாலகழ்ந்ததற்கும்(உம்) கூர்மபுராணம் வைரவன் பலியிரந்த அத்தியாயம்.

முன்னமெ மனதுநுதனுப்பணுகித்தநீயோமுதல்வனெனப்
பின்னும் வெகுண்டுகூறுதலுமபின்னைபபிறைதாழ்மணி மௌலிப்
பொன்னஞ்சி கரிவலாகுஙழுத்தபுனிதன்காரிமுகநோக்க
வனமே னிடக்லைசநுதியான்மலரானைந்தாந்தலையகழ்ந்தான்,

றுயவிப்பாவம்பாறும்ஒழியெனக்கருள்செய்யென்ன
வையையின்வடபாற்செங்கோல்வழுதிநாட்டிடவதாமச்
செய்யதன்னகருன்டந்தக்திருநகர்கதென்சாராக
வெய்துறமிடவதீர்த்தம்விளங்குமூவுலகுமேத்த.

(இ-பொ-ள.)

சுவாமீ அர்தபிரம்ஹத்திதோஷமானது நீங்கும் மார்க்கத்தை யேனுக்குத்திருவருள் செய்யவேணுமென்று பிரார்த்திக்க அ. ணைப்பார்த்தப்பிள்ளாய்மனுநீதியின்முறையேசெங்கோல்செலு தும் பாண்டியதேசத்தில் வையையாற்றிற்கு உத்தரபாகத்திலே சவ்விய நல்ல இடபபுரமென்னும் சிவஸ்தலம ஒன்றிருக்கின்ற அந்த அழகிய நந்திநகரத்தின் தென்பக்கத்தில பொருந்திய நந்தி தீர்த்தமானது மூன்றுலகும் துதிக்கத்தக்கதாய் விளங்கிக் காண்டிருக்கிறது எ-று) சுஅ

வ்விடைமடுவிஞடியருபவஞ்சழிந்துபின்ன
வ்விடைநம்பாற்சேறியெனட்டளஇப்பழியினீங்கித்
தெவ்விடைமழுவலாளபாற்சென்றனனகாரிமேனை
ஏவ்விடையடைந்தந்நீர்தோய்ந்துறும்பழிகழுவிநீவிர்,

(இ-பொ-ள)

அந்தநந்திதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து நீங்கற்கரிய இப்பிர ஹத்திதோஷத்தினின்று நீங்கிப்பிறகு இங்கே நம்மிடம் வந்து சேருவாயாக என்று கட்டளையிட்டருள அவ்வாறே வைரவக்கடவு முன்னுளில் அந்நந்திதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து பிரமஹத் தோஷத்தினின்று நீங்கிப்பகைவர்களைப்பின்னிடும்படி செய்யும் மழுவைவலக்கரத்திற்றரித்தருளிய சிவபெருமானிடத்திற் போனுர் ஆதலால் நீங்களும் அவ்விடத்திற் சென்று அந்நந்திதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து உம்மையடைந்த பிரமஹத்தியை போக்கி எ-று) சுக

ன்னகரிலிங்கமூர்த்தியன்னவிலைதநாதன்
பொன்னடிவணங்கிவாழ்ந்துபோற்றிநீடவந்தியென்னுஞ்
சன்னகாடைமின்னறுசெப்பலுமவிடைகொண்டேகி
னனவனைச்சனேமவந்துகாவிரிநீர்மூழ்கா.

(இ-பொ-ளா)

அந்நந்திநகரத்தில் எழுந்தருளிவிளங்கும் சிவலிங்கப்பெரு

ஞகிய அன்ன விநோதமூர்த்தியினது அழகிய திருவடிகளைத் தொழுது வாழ்ந்துதுதித்து விசாலமாகிய செவ்விய அவந்தி நகரம்போய்ச்சேருங்களென்று ஆஞ்ஞாபித்தருளிய அகஸ்தி மஹரிஷியினிடததிலனுமதிபெற்றுக்கொண்டு சென்று சந்திர சேனமகாராஜன் சருணன் என்றதனது மந்திரியோடும் மாயூரத்திற்குவந்து காவிரிதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து (எ-று) எ0

லிக என்றதாதுக்குசித்திரித்தல்என்பதுபொருள்படைத்தல்காத்தல்முதலியவற்றால் உலகத்தைச்சித்திரிப்பதாகிய சிவத்தினது ரபாவமேலிங்கமெனப்படும்.

## வேறு.

எருதூர்திருவிடைமருதுநடைய வரிருதாடொழுதடி சருதாரூர்
பாருதூர்நகையிறையுறையூர்பலநெறிபுகுவார்பரவினரொருதா
ர், றருதூரிடைவளர்சடைபோனிறைபுனல்தழலூர்திருவுருமுழு
ருப், விருதூர்கொடிவிடையவர்கான்மலர்சிரமிசைசூடினர்பழி
ணேதீர்வார்.

(இ-பொ-ள)

இடபத்தைவாகனமாக ஊர்ந்துசெல்லும் திருவிடைமருதூர் யிடமாகவுடைய ஸ்ரீ மஹாலிங்க மூர்த்தியினிரண்டு திருவடிளையும் வணங்கி சதிருவடிகளைநினையாதவர்கள் வசிக்குந்திரிபுரங்ளையும் பொருதழிகதபுன்னகையையுடைய சிவபெருமான் எழுதருளிவிளங்கும் பல ஸ்தலங்களின வழியே செல்பவர்களாய்ப் ணிந்தார்கள் பினனும் ஒப்பற்றவெண்ணாவல் விருக்ஷத்தினடியிலெழுந்தருளும் அவ்விருக்ஷத்தின்வேர்களைபோல வளர்கின்றஜடாருடத்தையுடைய அக்கினிமயமான திருமேனிமுழுதுந் தவழ்கிற நிறைந்தஜலம் பொருந்திய விருதாகத்தாம் ஊர்ந்தருளும் ஷபத்தைக்கொடியாகவுடைய சிவபெருமானது திருவடித்தாமரைகளைத் தமதுபிரமஹத்தியானதுதீரவேண்டுமாகச்சிரசினிமேற் சூடினார்கள் (எ-று) எக

## வேறு.

ரிநதியணியரங்கமேல்விழிவளர்கரியசெங்கண்மால்
ருவடிமலர்பணிந்துநீடிரிசிரகிரியிலெந்தைதான்

பரவினர்பழிகழிக்கிலார்பதிபலநெறிகடந்துபோ
யருள்பொழிவழுதிநிதன்றனுடதனை விரைவினடைந்துளார்

(இ-பொ-ள)

காவிரிநதியாற்சூழப் பெற்றழகுவாய்ந்த ஸ்ரீரங்கமென்னுந் திவ்வியஸ்தலத்தில் அறிதுயில் கொண்டருளும் கரியதிருமேனியையும் சிவந்தகண்களையுமுடைய மஹாவிஷ்ணுவின் திருவடித் தாமரைகளை வணங்கிப்பின் நீண்டதிரிசிராமலையில் வீற்றிருக்கும் எமது கடவுளாகிய தாயுமானேசரது திருவடிகளைவணங்கினார் இவ்வாறுபரவியும் இன்னும் பிரமஹத்தியானது நீங்காதவர்களாகி மார்க்கத்திலுள்ள அநேக புண்ணிய ஸ்தலங்களையெல்லாந் தெரிசித்தப்பாற்சென்று கிருபைபொலியும் தென்திசையிலுள்ள பாண்டியநாட்டை யதிதுரிதமாய்ச் சென்று சேர்ந்தார்கள் (எ-று) எஉ

ஸ்ரீ ராமமூர்த்தி இராவணசங்காரஞ்செய்து விபீஷணனுக்கு மகுடாபிஷேகஞ்செய்து அயோத்திமாநகரம்செல்லுங்கால் உடன் வந்தவிபீஷணனுக்கு இராமர் விஷ்ணுதிருவுருவமும் விமானமுங்கொடுக்கப்பெற்று வருங்கால் காவிரியிற் சென்று ஸ்நானஞ் செய்து பூசையைமுடித்து சுவாமியை விமானத்தோடும் அந்நதியின் மணலில்வைத்து அமுதுசெய்துகொண்டும் விமானத்தையெடுக்கப்பெயராது வேருன்றினமைகண்டு கவலைகொண்டபோது விஷ்ணுமூர்த்தியவன் கனவில் வந்து விபீஷணகவலையடையாதே இங்கேஇலக்ஷுமிதவஞ்செய்கின்றாள் அவ்விலக்ஷுமியை நாம் இங்குநடனஞ்செய்யும்படி செய்வித்தலால்இத்தானத்திற்கு ஸ்ரீரங்கம் எனவும் அதில்வீற்றிருந்தருளும் நமக்கு ஸ்ரீரங்கநாதரெனவும் பெயர் வழங்கும் எனறுசொற்பனஞ்சாதித்தார் என்பது திருவானைக்காப்புராணம் திருமால்வழிபடுபடலம்

திருவின் மாதராணடைசஞ் செய்யுமித் தானத்— திருவமாதக லொன் றுசீரங்கமென றுளதா—மருவு சீரங்கநாதரென் றெமக்கு லோவழவகும் பொருவில் பூரணமிழாமுதலெமக்கிவண் பொலியும்

இராவணன், திரிசிராகரன், தூஷணன், என்ற மூவரையும்

தன் சத்துருக்களைத்தடுக்கக் காவலாகநிறுத்தி அரசாக்ஷிசெய்யு ங்கால் கரன தூஷணன இருவரும் பகைவனை ஜெயித்து இராவ ணனையடைந்தார் மற்றைததிரிசிரா அவனனுமதியால் தென்கை லையிலிருந்து ஆலயமுதலிய வற்றையுண்டுசெய்து அம்மலையின் கீழ்நகரமொன்றுண்டாக்கி ச்சுவாமியையவழிபட்டுவருங்கால் தவம் ஒன்று செய்ய சுவாமிதரிசனம் தந்தருளாமையால் இரண்டு தலை யைக்கொய்து நெருப்பிலாகுதியாகப்பெய்து மற்றதையும் அறுக் கும்போது சுவாமி பிரசன்னமாய் உனக்கு வேண்டியவரங்கேளென ன தேவரீர்க்கும் இந்நகருக்கும் என் பெயர் வழங்கவேண்டுமென அப்படியே தந்தருளினு ரென்பது திரிசிராமலைப்புராணத்திற்கா ண்க.

வேறு.

செந்தமிழ்ச்திருநாட்டிடைவிரைந்துசெல்பவர்பூஞ்
சந்தனத்தடவரைமுனிதமக்குமுன்பிசைத்த
சுந்தரப்பெருந்திருநகர் விழியெதிர்தோன்ற
மந்தரப்புயத்தவர்தொழுதிமமெனவருவார்.

(இ-பொ-ள)

செவ்விய தமிழ்வழங்கும் பாண்டித்திருநாட்டில் துரிதமாய்ச் செல்கின்ற அவ்விருவரும் பொலிவாகிய சந்தனவிருக்ஷங்களையு டைய விசாலமான பொதிகாசலத்தி லெழுந்தருளியிருக்கும் அக ஸ்தியமஹரிஷியானவர் தங்களுக்கு முன்னே கட்டளையிட்டருளிய அழகிய பெரியநகரமானது கண்முன்னே தோன்றவும மந்தரமலை போன்ற புஜங்களையுடைய இருவரும வணங்கிச் சீக்கிரமாகவரு வார்கள் (எ-று) (எரு)

தடநசர்க்கயல்வரவரநிழலெனத்தழுவித்
தொடர்பெரும்பழிகாறளர்நதயர்நதபின்றாங்கிப்
படர்திறத்தினைநோக்கினரிருவரும்பலகா
லடதவிற்றினர்பாடினர்மகிழ்ந்தனர்நடந்தார்.

(இ-பொ-ளா)

விசாலமாகிய அந்நகரத்திற்குச்சமீபத்தில் நெருங்க நெருங் கத்தனதேகச்சாயைபோல விடாதனைந்து பினதொடர்ந்து மிகக

கொடிய பிரமஹத்தியானதுகால் தளர்ச்சியுற்றுச் சோர்ந்து பின்னே யுறங்கிவருகிறதன்மையைச் சந்திரசேன மஹாராஜாவும் மந்திரியும்பார்த்தார்கள் பலதரமும் ஆனந்தக்கூத்தாடினார்கள் பாடினார்கள் சந்தோஷமடைந்தவர்களாகிப்போனார்கள் (எ-று) ௭௪

தாணுமெய்த்திருவாட்புடையவர்பெருந்தலத்தி
னேணிபுக்கனர்விலகெனத்தொடர்பழிக்கிசைத்து
மாணுறத்தமைவம்மினென்றழைத்தெனவானங்
காணகர்க்கொடிநிமிர்ந்துபினுடங்குவகண்டார்.

(இ-பொ-ரை)

மெய்ப்பொருளாகிய திருவாப்புடையீசராகிய பரமசிவன் வீற்றிருந்தருளும் பெருமைபொருந்திய இடபபுரம் என்னும் திவ்வியக்ஷேத்திரத்தின் எல்லையையடைந்தவர்களாகிய அரசனும் மந்திரியும் தம்மைத்தொடர்ந்து வந்த பிரமஹத்தியை அந்நகரில் ஆகாயத்தை யளாவத்தக்கதாய் மேல் மாளிகையிற்கட்டிய கொடிகள் இனியவர்களைத்தொடராமல் விலகிப்போவென்று சொல்லி மாட்சிமைபொருந்தத் தங்களைப்பார்த்து ஐயா உங்களுக்கு நல்லகாலம்வந்தது வாருங்கள் வாருங்கள் என்று கூப்பிடுவதுபோல முன்னிமிர்ந்து பின் மடங்குவதைப்பார்த்தார்கள் (எ-று) ௭௫

நஞ்சமுண்ட வாயருவருப்பறநனியமுது
பஞ்சதாண்மலர்முகத்தரற்கருணதிப்பாங்கர்
வஞ்சிபோன் மருங்குடையவர்முகமெனமலருங்
கஞ்சதாண்மலர்த்தடமுநந்தனவனங்களுங்கண்டார்.

(இ-பொ-ள.)

அன்றலர்ந்ததாமரைமலர்போன்ற ஐந்துதிருமுகங்களையுடைய திருவாப்புடையீசருக்கு ஆலகாலவிஷத்தையுண்டருளிய திருவாயின் அசுத்தம் நீங்க பெருமைபொருந்திய அன்னத்தை மிகவும் கொடுத்த வையையாற்றின் பக்கத்திலுள்ள வஞ்சிக்கொடிபோன்ற இடையினையுடைய ஸ்திரீகளது முகத்தைப்போலப்புஷ்பிக்கின்ற புதிதாகியதாமரைமலர்களையுடைய தடாகங்களையும் நந்தநவனங்களையும் பார்த்தார்கள் (எ-று) ௭௬

உவந்தசிந்தையர்புரம்புகுந்திறையவருலாக்கொ
ணிவந்ததேர்விழாவீதியுமண்டபநிலையுஞ்
சிவந்தநுண்டமிழ்ச்சங்கமுமனைகபானசெல்வங்
கவர்ந்துவைத்தனபலபொருட்டெருவுதேர்கண்டார்.

மிக்கமகிழ்ச்சியையுடைய அரசனும் மந்திரியும் அவ்விடபபுரத்தினுட் சென்று அவ்விடபுரேசர் திருவுலாக்கொண்டருளும் உயர்ந்த இரதோற்சவவீதிகளையும் மண்டபநிலைகளையும் செவ்விய நுட்பமான தமிழ்பயின்று கொண்டிருக்கும் இடங்களையும் குபேரனது செல்வங்களையெல்லாம் கவர்ந்து வைத்தாற்போன்ற பலவகைப்பொருள்களும் நிறைந்த தெருக்களையும் நேரே பார்த்தார்கள் (எ-று) எள

வட்டவெண்குடைச்சுகுணனுஞ்செந்தமிழ்மாறன்
மட்டருமலர்க்கொன்றையினார்க்குமுன மணற்சோ
றட்டவேதியர்க்கன்பினுவியற்றிமேலாட
விட்டகேதனமாளிகைவீதியுங்கண்டார்.

(இ-பொ-ரை)

வட்டமாகிய வெண்கொற்றக் குடையினையுடைய செவ்விய தமிழ்வழங்கும் பாண்டியநாட்டையாளும் சுகுணபாண்டியமஹாராஜன் முன்னே தேன்பொருந்திய கொன்றைமாலையைத்தரித்த இடபபுரேசருக்கு வையையாற்றிலுள்ள மணலை அன்னமாகச்சமைத்து நிவேதித்த அவ்வாதிசைவருக்கு அன்புடன் செய்துவைத்த மேலேயாடும்படிகட்டிவிட்ட கொடிகளையுடைய மாளிகைபொருந்திய வீதியையும் பார்த்தார்கள் (எ-று) எஅ

பைந்தமிழ்த்திருஞானசம்பந்தர்தம்பனுவன்
மந்திரப்பதிகத்தினுலமணர்பொய்மதம்போய்
நந்தநற்சிவசமயமேசயத்தம்பநாட்ட
வந்திருக்குர் வைதிகத்திருமாமடங்கண்டார்.

(இ-பொ-ரை)

திருஞானசம்பந்தசுவாமிகள் தமது பசிய தமிழினலாகிய மந்திரபூர்வகமாகவுள்ள தேவாரத்திருப்பதிகத்தினால் சமணர்களுடைய பொய்ச்சமயமானது அழியவும் சற்சமயமாகிய சைவசமயமே மெய்ச்சமயமென்று ஜயஸ்தம்பநாட்டவும் எழுந்தருளிவந்து வீற்றிருந்தருளும் வைதீகசகூட்டம்பொருந்திய அழகியபெரியமடத்தனையும் கண்டார்கள் (எ-று) எகூ

தெளித்தசெம்மணிவெயில்விடத்தருவின்மென்சினைக
டளிர்த்ததொத்தலரம்பையர்பாசிலைதனைத்தனை

றுளித்தபூவுடன்முறியெனக்கொய்துறச்சுரர்கண்
களித்துநோக்கியுன்னதப்புரிமாடங்கள்கண்டார்.

(இ-பொ-ள)

பரிசுத்தப்படுத்திய மாணிக்கங்கள் பிரகாசம் வீசுதலானது கற்பகவிருக்ஷத்தின் மெல்லியகிளைகள் தளிர்விட்டதுபோன்றிருத்தலால் தேவஸ்திரீகள் தங்கள்நாயகர்களை, இதோதோன்றுகிற அவ்விருக்ஷத்தின் பசியகொழுந்தைத்தேன்சொரியும் பூக்களுடன் முறித்துக்கொடுக்கும்படி கேட்க உடனே அத்தேவர்கள் பறிக்கும்படி சென்றுபார்த்து அது இரத்தினங்களின பிரகாசமாக இருக்க நாணிநகைக்கும்படி கட்டியிருக்கும்மேல்வீடுபொருந்திய மாளிகைகளையுங்கண்டார்கள் (எ-று) அ௰

விரும்புமேனிலேயிருந்துதம்மென்குழற்காளைச்
சுரும்புதன்பெடையெனதொடர்ந்தெய்த்திடமீப்போ
யரும்புகற்பகப்பொதுமபர்புக்களியினின்றுடக்
கரும்பனூர்பருமணிக்கழங்காடுவகண்டார்.

(இ-பொ-ள)

யாவரும் இச்சிக்கத்தக்க மேல்வீடுகளிலிருந்துகொண்டு தமது மெல்லியகூந்தலிலுள்ள ஆண்வண்டுகள் தன்னுடைய பெட்டைவண்டென்று நினைத்துப்பின்தொடர்ந்து சென்று இளைக்க மேலேசென்று மொக்குகளையுடைய கற்பகச்சோலைகளிலே புகுந்து வண்டுகளைப்போலே நின்றுடக்கரும்புபோல் வார்களாகிய ஸ்திரீகள்பருத்த இரத்தினங்களபதித்த கழங்குகள்விளையாடுவதையுங்கண்டார்கள் (எ-று) அக

விழித்தபார்வைகளிமைப்பறத்தஞ்செயல்வெறுத்துப்
பழித்தவானரமடந்தையரதிசயம்படவா
னுழித்தவாதுயர்மேடைமேலம்மனையுறைகள்
கழித்தவாளனகண்ணினூராடுவகண்டார்.

(இ-பொ-ள)

விழித்தகண்கள் தங்களுடைய செய்கையைவெறுத்து இமைத்தல் நீங்கத்தங்களை முன் பாதகஞ்சூழ்ந்த தேவஸ்திரீகள் இப்போது பார்த்து ஆச்சரியமடைய ஆகாயவளாயிலுயர்ந்த மேடைக

ளின்பேரில் உறைகளினின்றும் நீக்கிய வாளாயுதத்தைப்போன்ற கண்களையுடைய ஸ்திரீகள் அம்மானைக்காய்கள் விளையாடுகிறதையும் பார்த்தார்கள் (எ-று) அஉ

இன்னதாயநன்னகர்வளங்கண்டுகண்டேகி
நன்னர்மாதவர்மறையவரருச்சனைநவில்வோர்
பன்னகாபரணன்புகழ்விரிப்பவர்பாங்கர்
மன்னுமால்விடைமடுவிடைப்போயெதிர்வணங்கி.

(இ-பொ-ள)

இத்துணைப்பெருஞ்சிறப்பினையுடைய அவ்விடபபுரத்தின் வளங்களையெல்லாம் பார்த்துப்பார்த்துச்சென்று நல்லபெரியதபசிகளும் அர்தணர்களும் சிவார்ச்சனையைக்கற்போர்களும் சர்ப்பாபரணத்தைத்தரித்தசிவபெருமானது பெருமையை விரிவாய்ப் பலருங்கேட்கச்சொல்லுகிறவர்களுமாகிய இவர்களை பக்கங்களில் நிலைபெற்றிருக்கும் பெருமைபொருந்திய அந்தநந்திதீர்த்தத்தின் சமீபத்திற்சென்றுநேரேவணங்கி (எ-று) அங

எறிந்ததெண்டிரைவாவியின்படித்துறையிழிந்தங்
கறிந்தசங்கற்பவிதிமுறையமைச்சனோடாடிப்
பிறிந்திலாக்கொடும்பழிபிறிந்தகழூறப்பிணித்துச்
செறிந்தமாசறவிளங்கினனசந்திரசேனன்.

(இ-பொ-ள.)

தெளிவாகிய அலைகளை வீசுகின்ற அந்தநந்திதீர்த்தத்தின் படித்துறையிலிறங்கியறிந்த சங்கற்பவிதியை முறைப்படிசெய்து மந்திரியுடனேஸ்நானஞ்செய்து பிரியாதகொடியபிரமஹத்தியானது நீங்கி யுள்ளூறப்பந்தித்து நெருங்கிய அஞ்ஞானந்தகாரமும் நீங்க அதனால்சந்திரசேனமஹாராஜன் களங்கமின்றிவிளங்கினான் (எ-று) அச

வெருவரும்பணிவாயுமிழ்சுடரொளிவிளங்கு
மிருவருஞ்சினகரமடைந்திடவபுரேச
னொருவருங்குரவங்கமழ்குழலுமைபாகன்
பொருவருஞ்சரண்பணிந்தனர்வேந்திலைபுகலும்!

(இ-பொ-ள்)

யாவரும் அஞ்சத்தக்க இராகுவென்னும் சர்ப்பம் வாயினின்றுமிழ்ந்தசந்திரனைபோல நிஷ்களங்கமாய்விளங்கும்இராஜனும்மந்த்ரியும் திருக்கோயிலிற்சென்று இடபபுரேசனையும் நீவகாதஞானங்கமழ்குழலம்மையின் பாகருமாகிய திருவாப்புடையீசருடைய நிகரில்லாததிருவடிகளைவணங்கினார்கள் பின் அரசன் இவ்வாறுஸ்துதிசெய்கின்றார் (எ-று)

௮௫

தேவதேவநிராமயதுரியவதீத
மூவராகிமற்றிருவராமொருமுழுமுதல்வ
பாவகாரியருளப்புகாவதிவெம்பரம
தாவுமால்விடைக்கிலகநாயகசரணம்.

(இ-பொ-ள்)

மஹாதேவனே யாதொருநோயுமில்லாதவனே துரியனை அதற்குமப்பாலானவனே திரிமூர்த்திசொருபராயும் இருவராகியும் ஒப்பற்றமுழுமுதற்கடவுளாயும் விளங்குகின்றவனே பாவகாரியங்களைச்செய்பவர்களது உள்ளத்திற் செல்லாத முதன்மையான ஏதுபரமனே தாவிச்செல்லும் பெருமைபொருந்திய ரிஷபவாகனத்தில் ஆரோகணஞ்செய்தருளும் ஆப்புடைநாதனே நமஸ்காரம் (எ-று)

௮௬

இலகம் = ஆப்பு

நாதபன்னகபூடணசுடர்த்திரிநயன
வேதமன்னவிபூதிமேனியவிளங்கில
பூசமன்னவநூபுரமறைச்சிலம்பு
சோதமன்னவிநோதமெய்ப்பரஞ்சுடர்சரணம்.

(இ-பொ-ள்.)

எப்பொருட்குமிறைவனே சர்ப்பாபரணனே பிரகாசம்பொருந்திய சோமசூரியாக்கினியென்னும் மூன்றுநேத்திரங்களையுமுடையவனே கருத்தாயனே விபூதியையுத்தூளனஞ்செய்தருளிய திருமேனியையுடையவனே விளங்குகின்ற எல்லாவுயிர்கட்குங்கர்த்தனே வேதங்களாகிய சிலம்புகளைத்தரித்தருளிய திருவடித்தாமரைகளை யுடையவனே அன்னவிநோதனே உண்மையானபரஞ்

சோதிசொரூபனே நமஸ்காரம் (எ-று) அஎ

அந்தகாரிகங்காதரதிரிபுரமரித்த
மந்தகாசவெண்கயிலைமால்வரைச்சிகாமணியா
மிந்துசேகரநீலகந்தரவெமதிறைவ
சுந்தரன்மலரப்பனூர்த்தனிமுதல்சரணம்

(இ-பொ-ள)

இயமனைக்கொன்றவனே கங்கையைத்தரித்தவனே திரிபுரங்களையுமெரித்தருளிய புன்னகையையுடையவனே பெருமைபொருந்திய வெள்ளிய கைலையங்கிரியில் வீற்றிருந்தருளும் சிரோரத்தினமாகிய சந்திரசேகரனே காளகண்டமூர்த்தியே எங்கட்கிறைவனே திருவாப்பனூரில் எழுந்தருளும் இசைபொருந்திய நான்கு வேதங்களின் ஒப்பற்றமுதற்பொருளே நமஸ்காரம் (எ-று) அஅ

பருமவாளரவல்குலார்மயற் படுகுழிவீழ்
கருமனேன்பெரும்பழிதிறக்கலங்குறுழந்தேன்
றெருமராவகையருள்சுரந்தருணிமிர்திமிலவெண்
டருமமால்விடையூர்திசம்புபசுபதிசரணம்.

(இ-பொ-ள)

பருத்தஒளிபொருந்திய பாம்பின்படத்தையொத்த நிதம்பத்தையுடைய ஸ்திரீகளது மயக்கமாகிய படுகுழியில் வீழ்கின்ற பாவியாகிய நாயேனது பெரியபிரமகத்தியானது இம்சைசெய்ய அதனாற் கலங்குகின்ற துயரத்திற் கிடந்துழைத்த அடியேன் மயங்காவண்ணம் திருவருள்சுரந்தருளிய நிமிர்ந்தமுரிப்பினையுடைய வெள்ளிய பெருமைபொருந்திய தருமதேவதையாகிய ரிஷபத்தின்மீது எழுந்தருளும்பசுபதியே நமஸ்காரம் (எ-று) அகூ

என்னவேத்திநிற்றிறைஞ்சலுமிருசெவிக்கினிப்பச்
சொன்னதோத்திரத்தியுவப்பவம்மாங்கனிதூங்கி
தன்னேர்மாக்கனத்திடையமனிவிலலங்கூர்
மன்னகேட்டியென்றசரீரிமொழிவழங்கும்.

(இ-பொ-ள)

என்றிவ்வாறுஸ்தோத்திரஞ்செய்து நின்று வணங்கிய வளவில் இரண்டுதிருச்செவிகளுக்கும் இனிக்கும்படி சொல்லிய துதியினால் அவ்வாப்புடையீசர் திருவுள்ளத்தில் மிகுந்த சந்தோஷமடைந்து நல்லபெருமைபொருந்திய ஆகாயத்தினின்றுமாய அசரீரி வாக்கா

ல் நன்மைமிகுந்த ஏ அரசனே கேட்பாயாக என்று அவ்வரசன் முன்னே யிந்தவார்த்தையைத் திருவாய் மலர்ந் தருளுவார் (எ-று) கூ0

சினக்குறும்பெறிந்திலங்குவேற்சந்திரசேனு
வுனக்குமந்திரிதனக்கும்வன்பழிதொலேவுற்ற
தெனசகுவித்திருகாஞ்சிரமேற்றினிறைஞ்சி
யனக்குழாம்படர்தடம்பணையவந்திசென்றடைந்தார்.

(இ-பொ-ள)

கோபமாகியகுறும்புகளையெல்லாம் முற்றிலும் போக்கிப்பிர காசிக்கின்ற வேலாயுதத்தைத்தரித்தசந்திரசேனனேஉனக்கும் மந் திரிக்கும் பற்றியிருந்த வலியபிரமஹத்தியானது நீங்கிப்போயிற் றுஎன்று கூற அதுகேட்ட இருவரும் தம்மிருகரங்களையும் சிரசி ற்கூட்டி நின்று வணங்கி அன்னபக்ஷியின் கூட்டங்கள் பரவியிருக் கும் விசாலமான வயல்கள்சூழ்ந்த அவந்திமாநகரத்தைப்போய் ச் சேர்ந்தார்கள் (எ-று) கூக

அடைந்தரசியலமைச்சியலறந்தெரிந்தாற்றி
நடந்துநாள்சழிஇப்பினனர்முன்விடைப்பெயர்தளிநீர்
குடைந்தபுண்ணியமானமீதிவர்ந்திமக்குன்ற
மடந்தைபாகர்தங்கயிலைபுக்கிருந்தனர்மாதோ,

(இ-பொ-ள)

போய்ச்சேர்ந்து இராஜரீகஞ்செய்யுந் தன்மையையும் அதற் கியைய மந்திரித்தனஞ் செய்யுந்தன்மையையு தர்மசாஸ்திரத்தின் வழிதெரிந்து செய்து தாங்களும் அதன் வழியேநடந்து தங்கள்வா ழ்நாளைச்சழித்துப்பின் முன்னேகுளிர்ச்சிபொருந்திய தந்திதீர்த் தத்தில் ஸ்நானஞ்செய்த புண்ணியத்தினாலே தேவவிமானத்தின் மீதேறிக்கொண்டு பர்வதராஜபுத்திரியாகிய உமாதேவியை யோர் பாகத்திலுடைய சிவபெருமான்வீற்றிருந்தருளும் கைலாயத்திற் சென்று பேரானந்தப்பெருவாழ்வை யடைந்திருந்தார்கள் (எ-று) மாதோ அசை கூஉ

வேறு.

தொடரவந்திபுரந்தருள்சந்திரசேனன் சகுணமந்திரியென்றிவர்

தெண்டிரைநாதாவுங், கடவுணதியிலஞ்சிபடிந்துபின்மேவுங் கடிய வெம்பழிநின்றுமகன்றருள்காதை, தடைபறும்படிவிண்டவர்திண் செவிசாருந்தகையரந்தமிழ்வெண்பொனெடுங்கிரியூடு, படர்வரென் றுசிவன்பெயர்நன்குணர்சூதன்பகரவந்தணர்சிந்தையுவந்தனர் மாதோ கஙு

(இ-பொ-ள)

அவ்வவந்திமாநகரத்தையடைந்துசெங்கோல்செலுத்திக்காத்த சந்திரசேனமஹாராஜன் சுகுணனென்னும் மந்திரியாகிய இருவரும் தெளிவாகிய அலைகளையுடைய தெய்வத்தன்மைபொருந்திய நந்திதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து பின்தங்களை யுபத்திரவஞ்செய்த மிகக்கொடிய பிரமஹத்திதோஷத்தினின்று நீங்கித்திருவருள் பெற்ற இச்சரித்திரத்தைத்தடையின்றிச் சொன்னவர்களும் வலியகாதுகளால் கேட்டவர்களும் அளவில்லாத பெருமைபொருந்திய நெடிய வெள்ளியங்கிரியையடைவார்களென்று சிவபெருமானது பெருமைகளை நன்குணர்ந்த சூதமஹரிஷியானவர் திருவாய்மலர்ந்தருள அதுகேட்டநைமிசாரண்யவாசிகள் மிக்கசந்தோஷமானார்கள் (எ-று) மாதோ அசை கஙு

சந்திரசேனச்சருக்கம் முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம். ௩௫௨.

## பாட்களச்சருக்கம்.

---

வேதமுனிவர்பெருந்தீர்த்தமேன்மைவிரும்பிவினவுதலுஞ் சூதமுனிவனச்சோவென்சொல்கேனெங்கோனருடைத்தோ னேதுசெயினுமபரிகாரமில்லாப்பாவியாட்களனென் [ன் றேதுபெயரோன்வஞ்சனைக் கோருறையுளனையானொருமன்றயோ

(இ-பொ-ள)

வேதங்களைநன்குணர்ந்த அந்நைமிசாரணியவாசிகள் பின்னும் மஹரிஷியைப்பார்த்துச் சுவாமீ அந்நந்திதீர்த்தத்தின் பெருமையையினனும்திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்றுவிருப்பமா

யப்பிரார்த்தித்துக்கொண்டவளவில் சூதமஹாிஷியானவர் ஆச்சரியம் ஆச்சரியம் இத்தீர்த்தத்தின் பெருமையை யிருந்தபடி என்ன சொல்லப்போகிறேன் எமது பரமசிவனது திருவருள் சிறிதுமற்றவனும் என்னசெய்தாலும் பிராயச்சித்தமில்லாத மகாகொடியபாவிய கிய பாட்களன் என்றுசொல்லும் பெயருடையவனும் வஞ்சனையாகிய பெண்ணுக்கு வசிப்பிடமாயுள்ளவனுமாகிய ஓர் ௧
பிராமணன் ஒருவன் இருந்தான் (எ-று)

அவனிமடுத்தோய்ந்த ஞற்றுபவமகன்றுசெழியற்கணமச்சுரிவை
புவனிமுழுதர்திறையளப்பப்புரிந்துசிவசாயுச்சியமா
மூவமையொழிந்தபெருப் பதவியுற்றனெனலுமுறுவா [ழ்]ிான்
னெவனிவருமபேறடைந்தனன்மறமெமக்குவிரித்தோதெனமொ

(இ-பொ-ளா)

அப்பாட்களன் இந்நத்திதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து செய்தபாவங்களினின்றும் நீங்கிப்பாண்டியமஹாராஜாவுக்கு இப்பூமிமுழுவதும் கப்பங்கட்டமந்திரித்தனஞ்செய்து சமானமற்றபெருமைபொருந்திய சிவசாயுச்சியபதவியையடைந்தான் என்று திருவாய்மலர்ந்தருளியவளவில் அந்த நைமிசாரண்ய மஹாிஷிகள் சூதபுராணிகளைப்பார்த்துச்சுவாமீ இவ்வரிய பெருமபேற்றைப்பெற்றவன் யார் அதை அடியேனுக்கு விரிவாய் அனுக்கிரகஞ்செய்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்து கொள்ளச் சூதபுராணிகர் சொல்வாராயினர் (எ-று) மற்று அசை ௨

புண்டரீகமலர்ப்பசுநதார்ப் பூகரேசர்மகச்சாலை
கொண்டதூமம்புயலளக்குமக்கொடியின்கொடிகடவையளக்கும்
விண்டநாதமறையொலிபோய்மேகநாதமளந்தப்பா
லண்டகூடமுகடளக்குமலைகநாமப்பெருமூதூர்,

(இ-பொ-ளா)

பசிய தாமரை மலராற் றொடுக்கப்பட்டமாலையையணிந்த ஸ்ரீராமனுடைத்தமர்கள் செய்யும்யாகசாலையி லுண்டாகும் புகைகள் மேகமண்டலபரியந்தம் போய்விரவும் மேல்மாளிகையிற் கட்டியிருக்கும் கொடிகளானவை அம்மேகங்களிற்றோன்றும் மின்னற்கொடிகளைப்போல் விளங்கும் சுரபேதமின்றியத்தியயனஞ்செய்யும் வேதகோஷமானது மேககர்ச்சனையையுமடக்கி யதற்கப்பால்

அண்ட முகபெரியர்தம் சென்றுசப்திக்கும் இத்துணைப்பெருஞ்சிற ப்பினையுடைய அளகாபுரியென்னும் பெயரையுடைய பெரியநகர மொன்றிருந்தது (எ-று) (ஙு)

அரணிதிருத்திக்கடைந்தமைத்தவழல்வாயோமநறுந்தூமஞ்
சுரரையவிதய்ச்திடவழைக்குர்தூதிற்றறக்கம்புகுமடவார் [ற்
கருமென்குழற்கூட்டகிற்புகைபோய்க்கடவுண்மகளிர்முடிச்தருமு
தருவினறுமென்மலர்வாசத்தினையும்விழுங்கிக்கமழுமால்,

(இ-பொ-ள)

தீக்கடைக்கோலைச் சீர்திருத்தஞ்செய்து கடைந்தாக்கிய அக்கினியினிடமாகச்செய்யும் யாகத்திலுண்டாகும் நறியபுகையானது தேவர்களையவிர்ப்பாகங்கொள்ளும்வண்ணம் அழைக்கப்போகின்ற தூதனைப்போல் தேவலோகத்திற்போகும அந்நகரிலுள்ள ஸ்திரீகள் கரியமெல்லிய கூந்தலுக்கூட்டும் வாசனைபொருந்திய அகிற்புகைகள் மேலேபோய் தேவஸ்திரீகள் தங்கள் கூந்தலிலே முடித்திருக்கிற கற்பக முதலிய தருக்களின் மணமுள்ளமிருதுவான புஷ்பங்களின் வாசனையையும் உள்ளடக்கி அதனின்மேலான வாசனையை வீசிக்கொண்டிருக்கும் (எ-று) ஆல் அசை சு

இருகையொருநன்முகப்பிரமரிவர்சொலெனும்வைதிகர்நெருங்கி
தருமதிதியாற்கலிதுரந்துதனழசகுமவ்வூரவதரிதசோ [த்
னுரியபெயர்பாட்கனன்குருவாயுடையதாதையிடத்தினின்றுங்
கருதஞ்சுருதிமுழுவதஞ் சாத்திரமுங்கனியக்கற்றானல்

(இ-பொ-ள)

இவர்கள் இரண்டுகரங்களையும் நன்மையான ஒரு முகத்தையுமுடைய பிரமாக்களோ என்று கண்டோர் சொல்லத்தக்க வைதீகர்கள் அனேகர் நெருங்கித்தரும நீதியாற் பாவங்களைப்போக்கி வசிக்குஞ்செழிப்புள்ள அவ்வளகாபுரியில் பிறந்தவன் பூாட்கனன் என்னும் பெயரையுடையவன் அவன் குருவாயுள்ள தன் பிதாவினிடத்திலேயே யாவரும் மதிக்கத்தக்க வேதமுழுவதையும் மற்றுள்ள சாஸ்திரங்களையும் கசடறக்கற்றுக்கொண்டான் (எ-று) ஆல் அசை ரு

புதநாண்மலர்வாய்க்கவர்தேனீப்பொருவப்புராணமிதிகாசஞ்

சதிகூர்பரதஞ்சோதிடம்வேதாந்தந்தர்க்கம்வாகடநற்
றுதிசேர்பெருங்காப்பியமுதலாச்சொன்னூல்யாவுங்கசடறக்கற்
றதிவாலியவாசாலகனுமாகவடநூற்கலைகண்டான்.

(இ-பொ-ள)

புதிதாகிய அன்றலர்ந்த புஷ்பங்களிலுள்ள தேனைக்கிரகிக்கின்ற ஈயைப்போலப்புராணங்கள் இதிகாசங்கள் தாளவொத்தமைந்த பரதசாஸ்திரம் ஜோதிடசாஸ்திரம் வேதாந்தசாஸ்திரம் தர்க்கசாஸ்திரம் வைத்தியசாஸ்திரம் நல்லயாவரும் புகழ்கின்ற பெரிய காவியங்களுமாகிய இவைமுதலாகச்சொல்லும் சாஸ்திரங்களையெல்லாம் கசடறக்கற்று வாலியப்பருவமுள்ளவனும் வாச்சாலகனுமாகி சமஸ்கிருதத்தில் மிக வல்லவனாயினன் (எ-று) சு

இந்நூல்சொலுத்துந்தேசிகர்க்கொன்றீந்தானலனெட்டுணையே
னு,மந்நூலறிவினன்மேம்பட்டகிலம் புகழ்நற்கவிபாணன், பின்
னூற்பொருளாற்பொருள்தேடும்பெற்றிப்பற்கொண்டனுதினமு,
முந்நூல்புரளுந்தடந்தோளான்மோகித்தூரூர்தொறுமுழலும்.

(இ-பொ-ள)

இந்தசாஸ்திரங்களையெல்லாம் கற்றுக்கொடுத்த ஆசாரியற்கு யாதொன்றும் எள்ளளவுங் கூடக்கொடுத்தானில்லை அந்த சாஸ்திரஞானத்தினால் மேலாகிப்பூமியிலுள்ளவர்யாவரும் மெச்சத்தக்க நல்லவித்துவானாயினன் பின் இக்கல்விப்பொருளாற் செல்வப்பொருளைச்சம்பாதிக்குந் தன்மையைமேற்கொண்டு நாடோறும் பூணூல்புரளுகின்ற விசாலமான புஜங்களையுடைய அப்பாட்களன் பொருளாசைகொண்டு அதனால் ஊர்தோறுமலைந்து திரிவானாயினன் (எ-று) எ

கருத்தோடரசவையணுகிக்கற்றநூல்சோதனையுறத்தி
வருத்தமகலப்பங்குமனைவாங்கிப்பொருள்கூட்டுவதன்றி
மிருத்துமகிடந்தயிலகடம்விளக்கஞ்சாகற்றிலதேனுத்
தருக்குங்காலபுருடன்முகற்றானங்கவர்ந்துந்தனம்வளர்க்கும்.

(இ-பொ-ரை)

இக்கருத்துடன் இராஜசபைக்குப் போய்த்தான் கற்றநல்வி

யைச்சோதனைகாட்டி வருத்தமின்றி வீடுமுதலிய பண்டங்களைவாங்கி திரவியத்தைச்சேர்ப்பதல்லாமலும் மிருத்தியு எருமைக்கடா எண்ணெய்க்குடம் விளக்கு அஜம் எள்ளு பசு செருக்கனையுடைய காலபுருடன் இவைமுதலாகச்சொல்லும தர்த்தானங்கள் வாங்கியும் திரவியத்தை விருத்திசெய்வான் (எ-று) அ

காலபுருஷனென்பது கறுப்புக்கம்பளியால் மனுஷ்யவடிவாகத்தைத்து அதில்நிறைய எள்ளையும் திரவியத்தையும் நிரப்பித்தைத்து அதற்குப்பிராணப்பிரதிஷ்டைசெய்து வைத்திருக்கும் ஓர் பெரிய உருவம்.

பெரியநகர்நன்னதிக்கரைகள்பெயராதிருந்துபுராணநூல்
தெரியவுரைப்பவிரித்துரைத்துந்தேன்போல்வடசொற்சுவைதிரட்டி
யரியபிரபந்தாதி வகுத்தருப்பப்பரிசிற்கவையளித்து
முரியசிராத்தம்பின்னவருக்குழற்றியுழைந்தும்பொருளீட்டும்

(இ-பொ-ள)

பெரிய நகரங்களிலும்நல்லபுண்ணியதீர்த்தக்கரைகளிலும்நீங்காதிருந்துகொண்டு புராணசாஸ்திரங்களைப்பிறருக்குத்தெரிய அதட்டி விரிவாயெடுத்துச்சொல்லியும் தேனைப்போல மதுரமாய்ச்சொற்சுவைபொருட்சுவைபொருந்தச்சமஸ்கிருதத்தின் சாராம்சங்களைத்திரட்டியருமையாகியபிரபந்தங்களைச்செய்து அவற்றைப்பப்பிரயோசனத்துக்காகக்கொடுத்தும் உரியசிராத்தங்களைப்பின்வருணத்தவர்களுக்குச்செய்து அலைந்தும் திரவியங்களைச்சம்பாதிப்பான் (எ-று) க

மண்ணின்முளைத்தபுற்கொடிநீண்மரத்தின்மூலமிலைகாய்பூ, வண்
ணநறுமென்கனிகிழங்கின்மருவுங்குணங்கள்விதந்துரைத்து, மெ
ண்ணின்மருந்ததுண்டிறந்தவுயிரெழுப்புமெனடபண்டிதஞ் சொற்
று, நண்ணுமபிணியைமிகவளாத்துநாளிற்றணித்துநிதிகவரும்.

(இ-பொ-ள)

இப்பூமியில் முளைத்திருக்கிற புல் கொடிகள் உயர்ந்தவிருக்ஷங்களின் வேர்கள் இலைகள் காய்கள் பூக்கள் வர்ணமானநறியமெல்லிய பழங்கள்கிழங்குகளாகிய இவைகளிற்பொருந்திய குணங்களையெல்லாம மிகவாய்ச்சொல்லியும் இறந்தஉயிர்களையும் மீட்டும் பிழைக்கச்செய்யும்மருந்துகள அளவில்லாதன இருக்கின்றன

என்று வைத்தியம் சொல்லியும் பொருந்திய வியாதியை யதிகப் படுத்தி அதை நாளடைவிலேயே சௌக்கியஞ்செயதும் பொருள் சம்பாதிப்பான் (எ-று) ய

அல்லல்புரியுங்கேதுதிசைக்கப்பாற்பிருகுதிசைநமக்கு
மல்கும்பொழுததனகனகவத்துவாகனுபரணம்
புல்குங்குடைசாமரையாதிபொருந்துமெனவும்வறுமையிலாச்
செல்வரிடத்திற்சோதிடனுல்தேற்றித்திரிந்தும்பொருள் கூட்டும்.

(இ-பொ-ள.)

உமக்கு இப்போது கேதுதிசை அது மிகுந்த துன்பஞ்செய்யும் அதன்பிறகு சுக்கிரதிசைவரும்பொழுது திரவியமும் பொன்னும் ஆகிய பொருளும் வாகனங்களும் ஆபரணங்களும் குடைகளும் சாமரங்களும் ஆகிய இவைகளெல்லாம் கிடைக்கும் என்றும் தரித்திரமில்லாத செல்வவான்களிடத்தில் ஜோதிடஞ்சொல்லித்திரிந்தும் பொருளைச்சேர்ப்பான் (எ-று) கக

இவையலாநெய்பாறயிர்மோரெண்ணெய்காட்டமிலவணநற்
சுவைகூர்பலங்காயிலைபயறுசொன்றிமுதலாகியவிற்று [ம்
நவைகூர்பொருள்வட்டியின்மிதப்பநவின்றுகொடுத்துவாங்கியும
றவையால்வெறுக்கைமிகவிளைக்கு மந்தோவாசைக்களவின்றால்.

(இ-பொ-ள.)

மேற்சொல்லியவகையல்லாமலும் நெய் பால் தயிர் மோர் எண்ணெய் விறகு உப்பு நல்ல மதுரமான பழம் காய் இலை பயறு அன்னம் இவைமுதலியவற்றையும் கிரயஞ்செய்தும் பெரியோராலிகழப்பெற்ற பொருளை அதிகவட்டிக்குக் கொடுத்து வாங்கியும் இன்னும் பலவகைகளாலும் பொருளையனேகமாகச்சம்பாதிப்பான் மிக்க ஆச்சரியம் ஆசைக்களவில்லை (எ-று) (ஆல் அசை) கஉ

கங்கையமுனைபிரயாகைகண்ணவேணிகாவிரிமற்
றெங்குநடந்துசேதுமுதலியற்றுந் தீர்த்தயாத்திரைநெய்
பொங்குமோமஞ் சிவபூசைபொருவிலருத்திரசெபமு
மங்கனலகற்பிறர்பொருட்டாலாரதித்தயங்கூலிகொளும்,

(இ-பொ-ள)

கங்கை யமுனைபிரயாகை கண்ணவேணிகாவிரி என்னுமித்தீ

ர்த்தங்களிலும் இவையல்லாதமற்றெவ்விடத்திலுஞ் சென்று சேதுமுதலாகச்செய்கின்ற புண்யதீர்த்தயாத்திரைகளும் நெய்யினுற் சொரிக்கின்ற யாகங்களும் சிவபூஜையும் சமானமற்ற ஸ்ரீ ருத்திரஜெபமும் ஆகிய இவைகளையெல்லாம் அழகிய இடமகன்ற இவ்வுலகில் பிறருக்காகச்செய்து அதற்குக்கூலியாகப்பொருள்களை வாங்கியும் சேர்ப்பான் (எ-று) கரு

## வேறு.

ஆவாவொருநெல்வானுதியளவாகிலுமுதவா
தோவாமலீவகைதேடினனொருகோடிபொன்கன்மேன்
மேவாமமதைகள்மேவினன்வீழ்நாள்படவாழ்நாட்
பூவார்முலைவிலைமங்கையர்தஞ்சேரிபுகுந்தான்.

(இ-பொ-ரை)

ஆ ஆ. ஆ. ஆச்சரியம் இவ்வளவுசம்பாதித்தும் ஒருவர்க்காவது ஒரு நெல்லின்வால் நுனியளவுங்கூடக்கொடாமலும் ஓயாமலுமிவ்வாறு ஒரு கோடி திரவியம் சம்பாதித்தான் அதற்குமேல் அடையத்தகாத அகங்காரங்களையடைந்தான் அன்றியும் தனது வாழ்நாளெல்லாம் வீணாய்ப்போகப்பூமாலைகளணிந்த ஸ்தனங்களையுடைய வேசையர்களது தெருவைச்சேர்ந்தான் (எ-று) கசு

கொல்லுங்கணைவிழிவேசையர்கூடுங்கலவியைநேர்
சொல்லுஞ்சுகமமரமாதர்சுவர்க்கத்தினு * மிலதென்
றல்லும்பகலினும்வேள்களியாட்டந்தவிராமற்
புல்லும்பணையந் † தாலொருபொருளன்றெனநினையும்.

(இ-பொ-ரை)

கொல்லுந்தொழிலையுடைய அம்புபோன்றகண்களையுடைய வேசையர்களோடுகூடியனுபவிக்குஞ் சுகத்துக்கு நிகராகச்சொல்லுஞ் சுகம் தேவஸ்திரீகளது ஸங்கங்களாற்சேர்தலினுமில்லையென்று இராப்பகலாககளிப்புடன் காமஇச்சையனுபவிக்கிறதில் சிறிதும் தவறாமல் அவர்களுடன் சேர்வதற்காகக்கொடுக்கும் பரிசப்பணம் எவ்வளவாயிருந்தாலும் அதை லக்ஷியமாக நினையான் (எ-று) கஎ

வடியோதியரல்குற்சுவைவாஞ்சித்துறுபணையக்

கையோடுறழ்நல் கிப்புணர்காமத்துறைபுக்கான்
பெய்யோகவிண்டுளியாற்றனிபெருங்குளமுடைத்தாங்
கையோபொருளொருகோடியுமற்றானருளற்றான.

[இ-பொ-ள]

மேகம்போற்கறுத்த கூந்தலையுடைய ஸ்திரீகளது அல்குலினிடமாயனுபவிக்கும் சிற்றின்பச்சுவையை விரும்பிப்பொருந்தியபடிசப்பட்டணத்தை அப்போதேகையிற்கொடுத்துச்சேருகின்ற காமக்குழியிலேயே சென்றான் இதனாற்பெய்கின்ற கூட்டமாகிய மழைத்துளியால் நிகரின்றிப்பெருக்கெடுத்த ஒரு குளமானது உடைப்பெடுத்துக் கொண்டாற்போலச்சிவபெருமானது திருவருள் ஒருசிறிதுமில்லாத கொடிய பாவியாகிய அப்பாட்களன் ஐயையோ அதர்மமாகப்பலவழியிலுஞ்சம்பாதித்த அவ்வொருகோடிதிரவியமும் செலவழிந்து நிர்ப்பாக்கியனானான் (எ-று) ௪௬

அற்றானுமென்விலைமாதர்தம் மலையாசையறுமற்
சுற்றார்தருமனையிற்பொருள்சோரஞ்செயதளித்தும்
பற்றுமன்மெய்ம்மறையோர்நறை ‡ படர்தீவினையோமக்
கற்றானிலந்திருடுந்தொழில்கண்டார்கள்கலித்தார்.

(இ-பொ-ள)

அப்படி நிர்ப்பாக்கியனானுமென்ன அவ்வேசைகள் ஸ்தனங்களையேவேண்டுமென்கிற ஆசைசமாத்திரநீங்காமல் சற்றுப்பக்கங்களிலுள்ள மனைகளில் பொருளைக்களவுசெய்துகொடுத்தும் அதுவும் போதாமல் உண்மையான வேதவிதிப்படிப்பிராமணர்கள் செய்யும் தரும புண்ய பரவிய அக்கினிகாரியத்திற்குரிய யாகபசுக்களையுந் திருடுகிறதையும் பார்த்தார்கள் உடனே இரை ௪௭
ச்சலிட்டார்கள் (எ-று)

(இ-பொ-ள)

மறைந்தாலுவர்கோவென்றவனைத்தார்வலைமாமு
றைறத்தார்முடியரசன்றமர்தனுகிச்சினமனமிக்
குறைத்தாங்கவனிருகாலினுளொருகாலறுசாலாய்க்
குறைத்தார்கருவியினால்வினைகொடிதென்றுவிழுந்தான்

(இ-பொ-ள)

வேதங்களையத்தியயனஞ்செய்யும் நாவையுடையபிராமணர்

கள் கோ கோவென்று கூவி அவனைச்சுற்றிவளைந்தார்கள் நவ்வா று வளைக்குமுன் தேன்பொருந்திய மாலையையணிந்த கிரீடத்தை யுடைய இராஜாவினுடைய சிபாயிகள் அவ்விடத்தில்வந்து மனதி ல் மிகக்கோபங்கொண்டு அழுந்தமாய் அப்பாட்களனுடைய இர ண்டுகாலுள் ஒருகால்அற்றகலாகும்படி வாளினால் வெட்டினார் கள் அப்போது ஆ ஆ நான்செய்தபாவம் மிகக்கொடிது கொடி தென்று கீழே வீழ்ந்தான் (எ-று) கஅ

ஊர்நோக்கவுளைந்தங்கணொதுங்குஞ்சரணுறபுண்
ணீர்நோக்குமிரங்கும்தனிநெஞ்சோடுபுலம்பும்
வார்நோக்குமென்முலைவேசையர்வழிநின்றெதிர்நோக்கப்
பார்நோக்குமிருக்குந்துயர்பகருந்தரமன்றால்,

(இ-பொ-ள்)

ஊரிலுள்ளவர்கள் தன்னைப்பார்க்க அதனால் மனமிகவருந்தி யங்கேயோரிடத்தில் ஒதுங்குவான் காலிற்பொருந்திய புண்ணிலி ருந்தொழுகும் இரத்தத்தைப்பார்ப்பான் இதற்கென்செய்வேனெ ன்று பரிதபிப்பான் தனியேமனதோடு புலம்புவான் கச்சிறுக்கிய மெல்லியஸ்தனங்களையுடைய வேசையர்கள் வழியில்நின்றுகொ ண்டு நேரேதன்னைப்பார்க்க அவன்நாணிதலைகுனிந்து பூமியை ப்பார்ப்பான் இருப்பான் இவ்வாறு இடையூறுகளனடையுந்துன்பம் சொல்லத்தகுந்ததன்று (எ-று) ஆல் அசை ௰க

காலனைய்முழுநோயென்றுகலங்குவ்சரமூன்றித்
தானேதவழும்பார்மிசைதளருகைகளுழ்கண்ணீ
ராலுநிலனனையும்படியவ்வூரிடைநின்று
மூலனுடயிருகர்தனியூருர்தொறுமுழலும்,

(இ-பொ-ள்)

காலிலுள்ள விந்தோயானது சரீரமுழுவதுமுள்ள நோயாக மனங்கலக்குவான் பூமியில் கைகளையூன்றிக்கொண்டே தவழ்வா ன தளர்ச்சியடைவான அழுகின்றகண்ணீரினால்இப்பெரியபூமியா னது நனையும் வண்ணம் அவ்வூரிலிருந்து உடலோடு உயிரும் உரு கத்தகதாயத் தனியே ஊரூராகஅலைந்து திரிவான் (எ-று) உ௰

அந்தோசெருமாநாள்வயிரவன்மாகடலெல்ந்து
நொந்தோடகப்பூறபுண்ணுய்பொங்குகிரந்தி

சந்தோவரும்வெஞ்சுலேவிதலேகூர்விரணத்தான்
வந்தோலமிடுேந்தீருமருந்தார்தருமென்பான்.

(இ-பொ-ள)

ஐயோ இவ்வாறு தியங்கியலேயுநாளில் அப்பாட்களனது கு ற்றம் பொருந்திய சரீரமெல்லாம் நொந்து துர்நாற்றம் வீசும் து ர்நீர் ஊற்றெடுத்தோடும் புண்களினாலும் துன்பமிக்க கிரந்தியினு லும்மூட்டுக்களினின்றும்நீங்காதமிகக்கொடியசூலேக்கட்டுகளினு லும் சரீரமுழுதம் குலேகுலேந்து நடுங்கத்தக்க இரணங்களினாலு ம் வருந்தி வந்து ஓவென்றுகூவியழுவான் இக்கொடிய வியாதிக ளெல்லாம் தீரத்தக்கஔஷதம் யார்கொடுப்பார் என்று புலம்பு வான் (எ-று) உக

முன்னேவருபவர்கண்ணொடுமூக்கின்றுளேபுதைப்பக்
கொன்னேமுடைநாறும்பிணிபழுத்தற்றுடல்தலேவா
னென்னேசழிபவதல்வினேயீதென்றறிகில்லேன்
மின்னேர்சடையானன்னவினேதன்பதிபுக்கான்.

(இ-பொ-ள)

இவன்முன்னேவருவோர்கள் கண்களேமூடிக்கொள்வதுடனே நாசித்துவாரங்களேயும் பொத்திக்கொள்ள யாவரும் முடைநாற்ற ம் நாறுகின்ற வியாதிகள் முதிர்ந்து சரீரமெல்லாம் குன்றுவான் இக்கொடியபாவவினேயானது நிவிர்த்தியாதற்குரிய நல்வினே யின் னதென்று தெரியவில்லேயே யிதென்ன என்று வருந்திக்கடைசி யாய் மின்னற்கொடிபோன்ற ஜடாமகுடத்தையுடைய அன்ன வி னோதமூர்த்தியெழுந்தருளியிருக்கும் இடப்புரத்தைவந்துசேர்ந்தா ன் (எ-று) உஉ

மேகச்சுரவேகத்தினின்மேவிப்டசுமடுநீர்
சோகத்துயர்போகத்தனிதோய்வுற்றனனுடனே
யாகத்தறுகால்பெற்றனனுசிற்பிணியறவ்வ
மாகத்தெழுபாலக்கதிர்மானப்பொலிதருவான்.

(இ-பொ-ள)

மேகசம்பந்தமான சுரவியாதியின் தீவிரத்தினால் வந்து இட

பதீர்த்தத்தில் சோகத்தோடுகூடியதுன்பமானது தீரத்தனியே மூழ்கினான் உடனே தன் சரீரத்தில் வெண்டுண்டு போனகலை பெற்றுக்கொண்டான் அதனோடுமேற்றவியாதிகளெல்லாம் நீங்க யாதொருகுற்றமுமின்றி ஆகாயத்திலெழுகின்ற பாலசூரியனைப் போல விளங்கினான் (எ-று) உ௩

ஈதற்புதமீதற்புதமியார்பெற்றனரெனவே
யோதப்பெரிதாடிப்புனலூறிப்பொழிவிழியான்
சோதிப்பெருவாவிக்கரைசூழ்வுற்றெதிர்பணிவா
னாதித்தனிநாதற்றொழவாரவத்தொடுமணையா.

(இ-பொ-ள)

இஃது என்னஅதிசயம் என்னஅதிசயம் இவ்வரியபேற்றைப் பெற்றவர்யார் இருக்கின்றார் என்றுசொல்லிமிகவும் ஆனந்தக்கூத்தாடி ஆனந்தபாஷ்பம்பொழியுங்கண்களையுடைய அப்பாட்களன் மிகப்பெருமையாற் பிரகாசிக்கின்ற விசாலமான் அந்தத்தீர்த்தக்கரையிற்சுற்றிப்பிரதக்ஷிணஞ்செய்து எதிரேநமஸ்கரித்து எழுந்தமுதன்மையான ஒப்பற்ற இடபபுரேசனைவணங்கப்பேரன்புடன் சென்று (எ-று) உச

குரவங்கமழ்குழல்பங்கமர்குழகன்சினகரநேர்
தரவஞ்சலியுடன்வந்திருசரணந்தொழுதெதிர்நின்
றிருகண்களுநிறையும்புனலெழநெஞ்சமுநெகிழ்ச்
சுரகங்கையர்மகிழும்படிதுதியின்கிதுபுகலும்,

(இ-பொ-ள)

குரவங்கமழ் குழலம்மையார் ஒர்பாகத்தில் வீற்றிருக்கின்ற கட்டழகையுடைய திருவாப்புடையீசரது திருக்கோயிலுக்கு முன்னே சிரசின்மேலேறக்குவித்தகைகளுடன் வந்து இரண்டுதிருவடிகளையும் வணங்கிச்சந்நிதானத்தில் நின்றுகொண்டு இரண்டுகண்களினும் நிறைந்துபொங்கி யானந்தபாஷ்பம்ஒழுகமனம் நெக்குநெக்குருகித்தேவகங்கையைத்தரித்த ஸ்ரீ இடபபுரேசர்திருவுள்ளமகிழும் வண்ணம் அடியில்வரும் விதமாய்த்தோத்திரஞ் செய்வார் (எ-று) உரு

வேறு.

அடர்பூதநாதசதுர்வேதகீதவளவாவதீதசரணம்

வடராலகாலநுகர்காலகாலபரநாதமூலசரணம்
நடனபிராமகுணரூபநாமநகவபோததாமசரணந்
திடஞானகோசகைலாயவாசசிவலிங்கேசசரணம்.

(இ-பொ-ள)

நெருங்கிய பூதகணங்களுக்குத்தலைவனே யிசைபொருந்திய நான்குவேதங்களினபொருளானவனே அஷ்டப்பிரமாணங்கள்முதலியவற்றால் அளந்து காணப்படாத எவைக்கும் அப்பாற்பட்டவனே நமஸ்காரம் பரவிவந்த ஆலகாலவிஷத்தைத்திருவமுதுசெய்தருளியஇயமனுக்கு இயமனாயுள்ளவனேபரநாதமாகியவெளியில் விளங்குபவனே எவற்றிற்கும் பிறப்பிடமாயுள்ளவனே நமஸ்காரம் பரமானந்ததாண்டவத்தையுடையவனே பேரழகுடையவனே குணங்களும் உருவங்களும் பெயர்களு மாகிய இக்குற்றங்களற்ற கொன்றைமாலையைத்தரித்தவனே நமஸ்காரம் பலம்பொருந்திய ஞானபண்டாரமாயுள்ளனே திருக்கைலாசமலையை வாசஸ்தானமாகக்கொண்டெழுந்தருள்பவனே நன்மையானவனே ஆப்புடையநாதனே நமஸ்காரம் [எ-று) உகு

பூவாகிமேவுமணமாகிமூடிபுயலாகிநீடுதுளியாய்க்
காவாகிவீசுகொடையாகியீறில்கதிராகிவீறுசுடராய்ப்
பாவாகியோதுபொருளாகிவந்துபழைதாயிருந்துபுகிதாந்
தேவாகியேகவடிவாகிநின்றசிவலிங்கேசசரணம்.

(இ-பொ-ளை)

புஷ்பமாகியும் அதின்வாசனையாகியும் மூடுகின்ற மேகமாகியும் அதிற்பொருந்திய திவலைகளாகியும் சோலையாகியும் அதுகொடுக்கும் கொடையாகியும் கெடுதலில்லாத சூரியனாகியும் அதில்விளங்கும் பிரகாசமாகியும் செய்யுளாகியும் சொல்லப்படும் அதின்பொருளாகியும்வந்து பழமையாயிருந்து புகிதமாகின்ற தெய்வமாகியும் எல்லாம் வேறின்றி ஏகசொரூபமாகியும நின்றயாவர்க்கும் நன்மைபாலிப்பவனே ஆப்புடையீசனே நமஸ்காரம் (எ-று) உஎ

இருளாய்விடிந்துபகலாய்விளங்கியெழுகின்றசோதிசரண
மருளாயுணர்ந்துமதளிவாரசெளிந்தவடிவாமனுநசரணஞ்

சுருளாயடங்கிவிரிவாய்மலர்ந்துதொடர்பவநாசசரணந்
தெருளாய்நிறைந்துமுடிவாகிநின்றசிவலிங்கேசசரணம்.

(இ-பொ-ள)

இருளாகியும் அவ்விருள்விடிந்த பசற்காலமாகியும்விளங்கித்தோன்றும் ஞானசூரியனே நமஸ்காரம் மயக்கமாயும் தெரிந்துதேறுகின்றவர்கள் தேரும்வடிவமாகியகடவுளே நமஸ்காரம் சுருளாயுள்ளடங்கியும் விரிவாய் விகசிதமாகியும் தொடர்கின்ற பாவங்களையெல்லாம் நாசஞ்செய்பவனே நமஸ்காரம் தெளிவாகிப்பரிபூரணமாய்நிறைந்து எவைக்கும் முடிவாகியும் நின்றநன்மையானவனே ஆப்புடையீசனே நமஸ்காரம் (எ-று) உ௦

வேல்காட்டியன்ன விழிகாட்டியல்குல் விலைகாட்டு மாதர்முலைமேன், மால்காட்டிநோய்கொள்வினையேற்குமுய்யுவழிகாட்டியாருமறியச், காலைகாட்டியின்றனருள்காட்டியாண்டகதையென்கொல்கூர்மைசெழுதுஞ்,சேல்காட்டும்வாட்கணுமையாண்மணாளசிவலிங்கேசசரணம.

(இ-பொ-ள.)

வேலாயுதத்தை விதிர்த்துக்காட்டினாற்போலக் கண்களைக்காட்டித்தங்கள் கண்ணியிற் சிக்கச்செய்து பின் அல்குலின் விலையைக்காட்டுகின்ற ஸ்திரீகளது ஸ்தனங்களின்மேல் மயக்கநோய்கொண்டபாவவினையையுடைய நாயேனுக்கும்பிழைக்கும்வழியைக்காட்டியாவருமறிய வெட்டுண்டுபோன காலைப்பின்னும் பெறும்படிகொடுத்துத் தேவரீரது திருவருளையுங்காட்டி யாடகொண்டருளியவாறுதான் என்னகூர்மையாயுள்ளசேற்கணுடைவாள் இவைகளைப்போன்ற கண்களையுடைய உமாதேவிநாயகனே நன்மையாயுள்ளவனே ஆப்புடையீசனே நமஸ்காரம் (எ-று) உக

மாவேட்டமாடுசெழியன்றனன்பின் வலைபுக்குநின்றபெருமானீவேட்டிரங்கிவல்வப்புரந்தநிலையென்கொலையசரணம
பூ * வேட்டிருந்தவயன்மாவிரணடுபுடைதங்குநேசசரணந்
தீவேட்டுவேதமுனிவார்வணங்குசிவலிங்கேசசரணம.

(இ-பொ-ரை)

மிருகங்களைவேட்டையாடிய சோழாந்தகபாண்டிய மஹாரா

ஜன் தன் பாகியவலேக்குட்சிந்நிற்ற கடவுளாகிய தேவரீர்விரும்பி பிரக்கப்பற்று வலியவேவந்து காத்தருளியதன்மையாகிய இஃதென்ன ஆச்சரியம் ஐயனே நமஸ்காரம் தாமரைப்புஷ்பத்தையும் பூமிதேவியையும் இருக்கத இருக்கு பிரமதேவருமமஹாவிஷ்ணுவும் இருபக்கங்களிலும் தங்கியிருக்கின்ற அவையையுடையவரே நமஸ்காரம் அக்கினியைவளர்த்து யாகஞ்செய்து வேதங்களையுணர்ந்தமுனிவர்கள் வணங்குகின்ற சிவபெருமானே ஆப்புடையீசனே நமஸ்காரம் (எ-று) ருயி

ஈயற்றலோபியெழிவற்றகாமியிடருற்றமூடனிதுவோ
பாவத்திறுக்குமுடைதோய்க்குமிங்கொர்பரிகாரமற்றகொடியே
ன்வலக்குண்மூழ்கிவினைவிட்டொழிந்ததுமறுவற்றமேனியுடையான்
சேவிக்கவின்றனருடந்ததென்கொல்சிவகிருபைகேசசரணம்.

(இ-பொ-ள)

ஈகையென்னும் நற்குணமில்லாத உலுத்தன் ஒருக்காலுநீங்காத காமவிகாரி துன்பமடைதற்கேதுவான் மூட்டாள் இதுமட்டுமோ இன்னும்பாவங்களுக்கும் துர்நாற்றம்வீசுகின்றகெட்டவியாதிகளுக்கும் இடமே ஒருபரிகாரமுமில்லாத மிகக்கொடியன் இத்துணைப்பெருங்கொடும்பாவியாகிய நாயினுங்கடையேன் இந்நதீர்த்தத்தில்ஸ்நானஞ்செய்ததுசெய்த பாபங்களெல்லாம் நீங்கிக்குற்றமற்றசரீரத்துடனே வந்துவணங்கஇப்போதுதேவரீர்திருவருளையெனக்குக்கொடுத்தது என்ன அருமை அருமை யாவர்க்கு நன்மையைக்கொடுப்பவனே திருவாப்புடையீசனே நமஸ்காரம் (எ-று) ருசு

என்றேதியோமுடிதாழ்த்திறைஞ்சியிறைமுன்னர்நிற்குமளவிற்
குன்றுதகோயிலடியார்மகிழ்ந்துகூழாமிபுகழ்ந்துவினாவிற்
சென்றேதவந்துசமிழ்நாடனெங்கடிருவாப்பனூர்செயலுந்
தன்றுடிருக்கிமறையான்விளங்குதகவும்பணிந்துவியவா.

(இ-பொ-ள)

என்றிவ்வாறு துதித்துத்துதித்து நமஸ்கரித்துத் திருவாப்புடையீசர்சந்நிதானத்தின் முனநிற்குமளவில் குறைவில்லாத அவ்வாலயத்திலுள்ள சிவனடியார்கள் பரமசந்தோஷமடைந்து கூடிப்புகழ்ந்து அதிதுரிதமாய்ப்போய் மஹாராஜ பீடத்தற்றெரிவிக்க அதுகேட்ட தமிழ்வழங்கும் பாண்டிநாட்டையாளும் கருணாபாண்

டிய மஹாராஜன் அங்கே வந்து எமது திருவாப்புடையீசரது செய்கையையும் பாட்களென்னும் அப்பிராமணன் தனது அற்றுப்போன காலை முன்போலமீண்டும் பெற்றுக்கொண்டு நன்றாய் விளங்குந் தன்மையையும் பார்த்து வணங்கி ஆச்சரியமடைந்து (எ-று) ௩௨

இறைகோயில்வாயின்முறைகூரமைச்சினியல்பூட்டினான்பின்னரசர், இறைகோடிகோடிதரமீவன்கொள்செங்கோல் வளர்த்து நெடுநாட், இறைசேர்ப்பல்போகநனி துய்த்தொழிந்துதொடர்கிலாகே சனருளாற், றனையோர்செலாதசாயுச்சியப்பதவி மேவினனம்மறையோன்.

(இ-பொ-ள)

அப்பாண்டிய மஹாராஜன் தனது அரண்மனையின் வாய்தலில் செங்கோன் முறைசெய்யும் மந்திரித்தொழிலினியல் புகலைக் கொடுத்தார் பின் அப்பாட்களாகிய பிராமணன் மந்திரியாயிருந்து மற்றபதேசத்தரசர்கள் கோடி கோடி யாகக்கப்பங்கட்டவும் அவற்றைப் பாண்டிய மஹாராஜா பெற்றுக்கொள்ளவுமாய் தந்திரமாகச் செங்கோன் முறையைவிருத்திசெய்து அனேக காலம் பல வழியிலும் அடையக்கூடிய பல போகங்களையுமனுபவித்துத் தொலைத்து பின் திருவாப்புடையீசர் திருவருளா லிப்பூமியிலுள்ளார் சாதாரணமாய்ச்செல்லக்கூடாத சாயுச்சியப்பதவியையடைந்தான் (எ-று) ௩௩

கேடுற்றுயர்ந்துவருபாட்களன்னகைகிளர்நேமியானுமருவா, வீற்றமண்ணமிதுதேவர்கோன்முன் விறல்வேளைப்பமருண்மான் மூற்றழன்றோர்தினமற்றநோக்கிமுனிகோதமன்றன்மனையாண் மாற்றுணர்ந்தமுனிசாபமேற்றுவானுடைந்துவல்லான்.

(இ-பொ-ள)

பிராமணகுலத்திலவதரித்தபாட்களென்பவன்கெடுதியையடைந்து பின் உயர்வடைந்து பிரகாசிக்கின்ற சுதரிசனமென்னுஞ் சக்கராயுதத்தைத்தரித்த திருக்கரத்தினையுடைய மஹாவிஷ்ணுவினாலும் அடையப்பெறாத மோக்ஷசாம்பிராச்யத்தைப் பெற்றதிவ்விய சரிதமிது இது நிற்க இன்னும் தேவேந்திரமஹாராஜன் முன்னொருகாலத்தில் வெற்றிபொருந்திய மன்மதன் புஷ்பபாணங்க

ளைப்பிரயோகித்தலைக்க அதனல் காமமயக்கமேலிட்டு மயங்கி அறிவுகெட்டு வருந்தி ஒருநாள் சமயம்பார்த்துக்கௌதமமஹரிஷியின் பாரியாளாகிய அகலிகையினிடத்து வந்து சேர்ந்து அந்தக் கௌதமமஹரிஷியின் சாபத்தைப்பெற்றுத்தனது தேவலோகம் போய்க்கவலையடைந்தான். (எ-று) ௩௪

அயிராணியாதியரமாதருக்குமமரர்க்குநாணியுழிவா
னுயிராசையற்றவுடலான் வருந்தியுநக்குழைந்துகுருமுன்
பெயராநடந்துவருவிப்பணிந்துபெருமாதவன்கவுதமன்
வெயராவுலாத்துவிபசாபயோனிவிளைமேனிகாட்டிநவில்வான்.

(இ-பொ-ரை)

தம்மனையாளாகிய இந்திராணிமுதலிய தேவஸ்திரீகளுக்கும் தேவர்களுக்குநாணிமனமழிபவனாகிய தேவேந்திரன் உயிரின் ஆசைநீங்கிய தேகத்தினுல் வருத்தமுற்றுமனமுருகிவாடித்தமது குலகுருவாகிய வியாழபகவான் சந்நிதானத்திற்சென்று பயத்தோடு நமஸ்கரித்துத் தவசிரேஷ்டராகிய கௌதமமஹரிஷியானவர் கோபித்துச்சொல்லிய சாபத்தால் யோனித்துவாரங்கள்பொருந்தியிருக்கிற தன் தேகத்தைக் காட்டிச் சொல்வானாயினன் (எ-று) ௩௫

மாதர்க்குமல்லன்மைந்தர்க்குமல்லன்மற்றிங்கெனக்குமலனிக்
கோதுற்றசாபமொழியச்சுகுசிகூறென்றுகூறமனமுற்றியான்
றீதற்றசிந்தையொருமித்துநன்குளிர்ந்திருந்துவளையா
மேதக்கவேதமுனிசொற்றதீமைமனைதீரும் வண்ணமொழிவான்

(இ-பொ-ரை)

அடியேன் ஸ்திரீகளுக்கும் உதவாதவனாயினேன் புருஷாளுக்கும் உதவாதவனானேன் அன்றியெனக்குமுதவாதவனானேன் ஆதலால் சுவாமீ யிந்தக்குற்றமாகிய சாபம் நீங்கும்வண்ணம் அனுக்கிரகஞ்செய்தருளல்வேண்டுமென்று தேவேந்திரமஹாராஜன் பிரார்த்திக்க வேதங்களை நன்குணர்ந்த அவ்வியாழபகவான் குற்றமற்ற தமது சித்தத்தை யொருவழிப்படுத்தி நன்றாய் சிந்தனைசெய்திருந்து மலைபோன்ற மேன்மையையுடைய வேதவிதிவழியொழுகும் கௌதமமஹரிஷியாற் கூறப்பெற்ற கொடிய சாபம் நீங்குமாற்றைக் கூறுவாராயினர் (எ-று) ௩௬

இகழ்கின்றசாபமிதுகன்மபூமியினிலன்றியெங்குமொழியா
தகழ்கின்றவீரைபுடைசூழ்தலத்திரவாய்த்தமாலம் † விரவித்
திகழ்கின்றநிம்பமணிமீனவன்றனைபதிரமி * த்திலங்குமெயவரும்
புகழ்கின்றகூடல்வடபாலின் வையைபுணர்கின்றகூலமதன்வாய்.

(இ-பொ-ளா)

யாவருமிகழ்கின்ற இச்சாபமானது கன்மபூமியிலல்லாமல் வேறெவ்விடங்களிலும் நீங்காது ஆதலால் ஏழுமாகிய சமுத்திரத்தாற் சூழப்பெற்ற இவ்வுலகத்தில் அரவு போன்ற வாயினையுடைய இலைகள்பொருந்தி விளங்குகின்ற வேப்பமாலையைத்தரித்த அழகிய பாண்டியனது நாட்டில் மிகப்பிரகாசமுள்ளதாய் யாவரும் பாராட்டிப்புகழ்ந்துபேசுகின்ற நான் மாடக்கூடல் என்ற மதுரா புரிக்கு உத்தரதிசையிலேயுள்ள வையைமாநதியின பொருந்திய கரையினிடத்து (எ-று) ௩௭

விடைநந்திநாமநகர்தானவிளங்கிமிகமல்குமந்தநகரி
னிடைநந்தியானவிறைதேவர்தேவனிறைவனைபுராணபுருடன்
கடைநந்திநீடுகழையண்ணலாதிகயிலாயனானனழுவாட்
படைநந்திநாதனிமவானமடந்தைபதிகிலேசனுறையும்.

(இ-பொ-ளா)

இடபத்தின்பெயரையுடைய நந்திநகரமானது மிகப்பெருகிப்பிரகாசித்துக் கொண்டிருக்கும் அந்நந்திநகரத்தில் நமது தியானத்தில் விளங்கிக்கொண்டிருப்பவரும் நிறைந்த தேவர்களுக்கெல்லாம் மஹாதேவனாகியும் எப்பொருட்குமிறைவனாகியும் முன்னைப்பழம்பொருட்கு முன்னைப்பழம்பொருளாகியும் கடைக்காலங்களிலும் அழிவில்லாத குண்டலத்தையணிந்த பெருமையிற் சிறந்தவராயும் முதற்பொருளாகியும் திருக்கைலாசமலையி லெழுந்தருளிவிளங்குபவராயும் ஒளிபொருந்திய மழுவ யுதத்தைத்தரித்த இடபபுரேசராயும் பர்வதராஜகுமாரியாகிய உமாதேவியினது நாயகராகியும் உள்ளதிருவாப்புடையீசர் எழுந்தருளியிருப்பார் [எ-று) ௩௮

உயர்கிலேசனுறைகோயினின்றுமொருசாயகஞ்செலவிற்
செயனீடெனுதுகைசயூர்நந்திருநாமவாவியுளதவ்

வியனீரின்மூழ்கிலொழியாதசாபவினையாறுமென்னவிடைகொண்
டயல்சூழுமம்பருடனேசாம்புமகலாதுசூழநடவா.

(இ-பொ-ள)

பெருமைபொருந்திய திருவாப்புடையீசர் வீற்றிருந்தருளும் ஆலயத்தினின்றும் ஓர் அம்புபோகிற தூரத்தில் தென்பக்கத்தில் செய்கைமிக்க நந்தி தீர்த்தம் என்று ஒரு திவ்விய தீர்த்தமிருக்கின்றது அந்த விசாலமான தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்தால் நீங்காத வினையாலாகிய இச்சாபம் நீங்கும் என்று திருவாய்மலர்ந்தருள உடனே தேவேந்திர மஹாராஜன் தேவாசாரியரிடத்தி லனுமதி பெற்றுக்கொண்டு தன்னைச்சூழ்ந்து வரும் தேவர்களுடனே நாணமும் நீங்காது சூழ்ந்துவர நடந்து எ-று. ௩௯

தென்பால்விளங்குதமிழ்நாட்டுயர்ந்ததிருவாலவாயின்மருவி
நன்டார்புகழ்ந்ததிருநந்திநாமநகர்மேவியேற்றுமந்நீ
ரன்பாலழாதசங்கற்பமோதியரவென்றுமூழ்கியுடன்மேல்
வன்பால்விளைந்தபகமம்பகத்தின்மலராக்கக்குசிமகிழா.

(இ-பொ-ள)

தென்றிசையில்விளங்கும் தமிழ்நாட்டிலுயர்ந்த திருவாலவா யென்னும் திவ்யஸ்தலத்தைச்சேர்ந்து நன்மையான இவ்வுலகத்தாரால் புகழப்பெற்ற அழகிய நந்திமா நகரம் என்னும்புண்ணிய ஸ்தலத்திற்போய் அதிலுள்ள நந்திதீர்த்தத்தில் மெய்யன்புடன் தவறாத சங்கற்பஞ்சொல்லி ஹரா ஹரா என்றுச்சரித்து ஸ்நானஞ்செய்து தன சரீரத்தின் மேல் அக்கிரமத்தால் உண்டாகிய பெண்குறிகள்யாவும் கண்களைப்போலத்தோன்ற அது கண்ட தேவேந்திர மஹாராஜன் மனமகிழ்ந்து (எ-று) ௪௰

குரவர்கமழ்ந்தகுழல்மங்கைகொங்கைகளுமுயக்குழைந்துதழுவும்
பரமனைசிவர்தடவளம்புரிந்தபர்சொத்தமேனியழக
னரவப்புனைந்தசரணைவிந்தனகிலாகபஞ்செய்வினைஅறவன்
புரபங்கனெங்கள்சிவகிலேகசனுறைகோயில்சென்றுபுகுதா,

(இ-பொ-ள)

பரிமளமிக்க குரவங்களு முழலம்மையினது ஸ்தனங்களான

லைவகசங்கக்குழூந்து தழுவுகின்ற மேலானவனும்சிவப்பு நிறத்தையுடைய பவளமானது நன்ருய்முதிர்ந்த தன்மையை நிகர்த்த திருமேனியையும் கட்டழகினையுமுடையவரும் சிலம்பணிந்த திருவடித்தாமரையை யுடையவரும் சகலாகமங்களும் புகழ்ந்து பேசும் தலைவரும் திரிபுரங்களைப்பங்கஞ் செய்தவரும் நமது சிவனும் ஆகிய திருவாப்புடையீசர் வீற்றிருந்தருளும் ஆலயத்திற் போய்ச் சேர்ந்து (எ-று) ௬௧

திருமுன்பணிந்துவலம்வந்தெண்ணறு திருமேனிகண்டுவியவா
விருகண்களன்றி யாயிரங்களினைறெய்தவந்தபடினீ
தருமந்தமேன்மையென நின்றுகூறியணியாப்பனூருளமலன
பொருமந்தகாரிசரணங்கடாழ்ந்து பூசிப்பதுன்னிவினைவான்.

(இ-பொ-ளை)

சந்நிதானத்தில் நமஸ்காரஞ்செய்து பிரதக்ஷணஞ்செய்து நமது பெருமையிற் சிறந்த திருவாப்புடையீசர் திருமேனியைத் தெரிசனஞ்செய்து கொண்டுவியந்து இப்படிகவுள்ள இரண்டு கண்களையல்லாமல் ஆயிரங்கண்களையிப்போதடையப்பெற்றிருந்த ப்பிரயோசனமானது அருமருந்தன்னமேன்மையையுடையதென்று நின்றுகொண்டு சொல்லி யழகியதிருவாப்பனூரி லெழுந்தருளிவிளங்கும் மலரகிதரும் யுத்தஞ்செய்த அந்தகாசுரனைச்சங்காரஞ்செய்தருளியவருமான திருவாப்புடை யீசரது திருவடிகளிலே நமஸ்காரஞ்செய்து பூசைசெய்யவேண்டுமென்று நினைத்து துரிதப்பட்டான் (எ-று) ௬௨

வானின்றுவர்தநதீர்பொனுடைமணிபாரமாலைகடவுள்ளின்
றனைவந்தகனிதூடதீப மமுதாதிகொண்டுசுரர்தங், கோனின்றபூ
சைவிதியாற்செய்துண்மைகுறையாதவன்பின்வடிவாய், நாநின்ற
வேதமெ ழியாலிரங்கி நயனங்களுழ்ந்துபகர்வான்.

(இ-பொ-ளை)

தேவலோகத்தினின்றும் வந்த தேவகங்கையாகிய திருமஞ்சனம் பீதாம்பரம் இரத்தின ஹாரங்கள் முத்தாரங்கள் தெய்வத்தன்மைபொருந்திய காமதேனுவென்னும் தெய்வப்பசுவினின்றுண்டாகும் பஞ்ச கௌவியம் பழவர்க்கங்கள் தூபம்தீபம் மஹாநைவேத்தியம் ஆகிய இவை முதலானவற்றைக்கொண்டு தேவே

ந்திரமஹாராஜன் நின்றுகொண்டு சிவபூசையைச்சிவாகம விதிப்படி நடத்தி மெய்யன்புவடிவாய் நாவினின்றெழும் வேதங்களால் இரக்கமுற்றுங் கண்களினின்றும் தாரைதாரையாய் ஜலம் ஒழுக அழுது ஸ்தோத்திரஞ்செய்வானாயினான் (எ-று) சங

வேறு.

சீர்பூத்தமலர்ச்சொருக்கும் பிறைக்கிற்றுந்திலகமும்வெண்ணீறுந்தோடுநீர், தார்பூத்தமணிக்குழையுங்கிள்ளையுஞ்சூலமுந்துகிலுஞ்சருமமும்பும், பார்பூத்தசிற்றுதரப்பசுங்கொடிபாகமுந்தனது பாகமுங்கொண், டேர்பூத்ததிருவாப்ப னூருடையதனிமுதனின னிருதாள்போற்றி.

(இ-பொ-ள)

அழகுபொருந்திய புஷ்பச்சொருக்கும் மூன்றும்பிறையாகிய பிளவும் பொட்டும் திருவெண்ணீறும் தோடும் பத்தியாக வைத்திழைத்திருக்கின்ற இரத்தினக் குண்டலமும் கிளிப்பிள்ளையும் சூலாயுதமும் பட்டுவஸ்திரமும் புலித்தோலாடையுஞ் சராசரமாகிய உயிர்களையெல்லாம் பெற்றசிறிய வயிற்றினையுடைய பசிய கொடிபோன்ற உமாதேவியின் பாகத்தையும் தம்முடைய பாகத்தையுங் கொண்டு அழகுபொருந்திய திருவாப்பனூரை இடமாகவுடைய ஒப்பற்ற முழு முதற்பொருளே தேவரீரதிரண்டு திருவடிகளையும் துதிக்கின்றேன் (எ-று) சச

காரணஞானத்தருவேயுபநிடதம்பழுத்த்தமிழுங் கனியேயேத்து நாரணனாரணனளவாவியோமநிராமயபரமானந்தத்தேனேபூரண சோதிச்சுடரேநிரதிசயம் விளைமூலப்பொருளேயோங்கும் பாரணகாளத்தமுதேயாப்பனூரரசேநின் பாதம்போற்றி.

(இ-பொ-ள)

எவைக்கு மூலமாகிய ஞான விருக்ஷமே அதினின்றும் நன்றாய் முதிர்ந்து சொரிகின்ற உபநிடதமாகிய பழமே ஸ்தோத்திரஞ் செய்கின்ற விஷ்ணுமூர்த்தியும் பிரமதேவரும் இற்றென்றளத்தறியக்கூடாத சிதாகாச சொரூபனே நோயில்லாதவனே பிரமானந்தமாகியதேனே பரிபூரணமாய்நிறைந்த பிரகாசம்பொருந்திய ஞான சூரியனே நிரதிசயானந்தமானது உண்டாகின்ற ஆதிமூலப்பொருளே ஆங்காரமாய்ப்பொங்கி வந்த ஆலகாலவிஷத்தை

மழுதாக உண்டருளியவரே திருவாப்பனூரில் வீற்றிருக்கும் அரசே தேவரீரது திருவடிகளைத்துதிக்கின்றேன் (எ-று) சரு

இனையவகைதுதித்தினறஞ்சியருள்பெற்றானந்தவெள்ளத் திழிந்தங்கேறி,நனையமலர்த்தருமணியான்வேண்டுமுபகரண மெல்லாநல்கவீக்கி, வனைகழலாகண்டலனுப்புடையவர்க்குத்தேர்விழாவழாதுசெய்வர், னனையவாணூர்திமதி யவனுமேவினக்குராற் பணமுனற்றி.

(இ-பொ-ள)

இவ்விதமாய்த்தோத்திரஞ்செய்து வணங்கித் திருவாப்புடையீசர் திருவருளையடைந்து பேரானந்தப் பெருவெள்ளத்திலிறங்கியதினின்றுங்கரையேறித்தேன் பொருந்திய புஷ்பங்களையுடைய கற்பகதருவும் சிந்தாமணியும் காமதேனுவும் வேண்டிய துணைக்காரணமாயுள்ளவற்றையெல்லாங் கொடுக்க அலங்காரமாய்க்கட்டிய வீரக்கழலையணிந்த தேவேந்திரனானவன் திருவாப்புடையீசருக்கு இரதோற்சவம் வழுவின்றிச்செய்யும் பொருட்டு அச்சிவபெருமானது வாகனமாகிய இடபத்தினது மாசமாகிய வைகாசிமாதத்தில் அவரதுதினமாகிய திருவாதிரை நக்ஷத்திரத்தில் முதலில் அங்குராற்பணஞ்செய்து (எ-று) சகூ

திருப்புணர்சமூரிவிடைக்கொடியேற்றிச்சோதிநாட்டேர்நடாத்திச், குருப்புணர்தனுளெனலரம்விசாகத்திற்றிருததவிழாக்குறையாதாற்றி, விருப்புணர்தனகத்திருந்து விளையும்வகைப்பெரும்பெருக்கின் வெள்ளத்தாழ்ந்தி, மருப்புணர்கொன்றையன்டிலர்த்தாட்புணைபிடித்துக்கரையேறிவானுடுற்றான்.

(இ-பொ-ள)

அழகுபொருந்திய அவரது வலிய ரிஷபத்துவஜத்தை யாரோகணஞ்செய்து சுவாதிநக்ஷத்திரத்தில் தேரோட்டுவித்துக் குருவாரங்கூடிய விசாகநக்ஷத்திரத்தில் தீர்த்தங்கொடுத்தலான உற்சவத்தையும் சிறப்பாக நடத்தி விருப்பமுடைய தம்மனத்தினிடத்தில் விளைகின்ற சந்தோஷமென்னும் பெருக்கையுடைய சாகரத்தில் அமிழ்ந்தி வாசனைபொருந்திப கொன்றை மாலையைத்தரித்த திருவாப்புடையீசரது திருவடித்தாமரைகளாகிய தெப்பத்தைப்பற்றிக்கொண்டு கரையேறியதாப்பிரகாரம் தனது தேவலோகத்

தைச்சேர்ந்தான் (எ-று) ௪௭

ஆகரிமை புரிசதன்மைப்பெயர்மணிமண்டபத் தணரியாதனத்
திற், பாசுமிமையவர்வணங்கப்புலோமசைப்பெண்புடையிருப்பப்
பசம்பொன்வான, முரசுகிடந்ததிரவமநலகளித்தானிடவபுர மூ
ர்த்திபாதக், கருததல்சற்றகன்றொழியான்கண்கொடுத்தகடவுளை
யார்கருதாரம்மா.

(இ பொ-ள.)

அரசுரிமைத் தன்மையைச் செய்கின்ற சுதன்மையென்னும் பெயரையுடைய இரத்னகஜிதமான மண்டபத்தின்கண் சிம்மாசனத்தில் புகழ்கின்றதேவர்களெல்லாம் பணியவும் தனது பத்தினி யாகிய இந்திராணி பக்கத்திலிருக்கவும் பசியபொன்னாலாகிய தேவவாத்தியங்களெல்லாம் சப்திக்கவும் இருந்து தேவலோகத்தை யிரக்ஷித்தார் ஆயினும் இடபபுரேசரது திருவடிகளைத்தியானித்தலை யொருசிறிதும் நீங்கினாரில்லை ஏனெனின் தனக்குக்கண் கொடுத்த தெய்வத்தை யார்தான் நினையார்கள் (எ-று) அம்மா ௪௮
அசை

வேறு.

பாசங்கூர்தருபாசட்களனீடரிபாவஞ்சாவமு டிக்குறுகாதைதா
னேசங்கூர்மறையேய்ப்பனவாழிதினீத்தேர்ந் துரைகேட்பவரோ
திேனார், தேசங்கூர்புவிமேற்புகழ்சேர்தருசீரும்போகமும்வாய்ப்பு
றவாழ்வோரோர், நாசங்கூர்தலிலாப்பரனாருரைலன்றூர்சிவமாக்
கதிசேர்வரால்,

(இ·பொ-ள)

பாசபந்தங்களையுடைய பாட்சலனென்ற பிராமணன் செய்த பாவத்தையும் பெருமைபொருந்திய தேவேந்திர மஹாராஜாவுக்குக்கிடைத்த சாபத்தையும் நிவர்த்திசெய்த பெருமைபொருந்திய தீர்த்தவிசேஷமுடைய இச்சரித்திரமானது வேதத்தை யொத்திருக்கின்றது ஆதலால் இதனது நியாயத்தைத்தெளிந்து சொல்பவர்களும் அதனைக்கேட்பவர்களும் இடமகன்ற இப்பூமியின்கண் நல்ல புகழ்பெற்ற சிறப்புகளும் நல்லபோகங்களும் வாய்க்கப்பெருகி வாழ்வர் யாதொரு கெடுதியுமில்லாத திருவாப்புடையீசரது

திருவருளால் பெருமைபொருந்திய நான் காவதென்றுசொல்லு ம்படி பொருந்திய சிவசாயுச்சிய பதவியைச்சேர்வார்கள் (எ-று) ஆல்-அசை சக

பாட்களச்சருக்க முற்றிற்று.

---

ஆகு திருவிருத்தம். சாக.

# குபேரச்சருக்கம்.

———:0:———

தனிமாதவர்தந்தவமேசிவமார்
முனிசூதபுராணிகனேமுடிமேற்
பனிமதியார்பதிகொன்றைவனத்
தினிதாகியமான்மியமோதினையால்.

(இ-பொ-ரை)

ஒப்பற்ற மகரிஷிகளுடைய தவமேதிரண்டு ஒருவடிவெடுத்தாற் போன்றவரே நன்மைமிகுந்த தவசிரேஷ்டராகிய சூதபுராணிகரே தேவரீர் ஜடாமகுடத்தின்மேல் குளிர்ந்த பெருமைபொருந்திய மூன்றாம்பிறைச் சந்திரனைத்தரித்த திருவாப்புடையீசர் வீற்றிருந் தருளும் கொன்றைவனக்ஷேத்திரத்தின் இனிமையாகிய சரித்திரத்தைத் திருவாய்மலர்ந்தருளினீர் (எ-று (ஆல் அசை) க

உளமுஞ்செவியும்முருகிப்பருகிப்
புளகந்தரநீபுகலும்பரிசோ
ரளவின்றதனலமைகின்றிலதா
லிளகும்படிநெஞ்செழுமாசையரோ.

(இ-பொ-ரை)

உள்ளமும் காதுகளும் கரைந்து உண்டு உரோமாஞ்சங்கொள்ளத்தேவரீர் திருவாய்மலர்ந்தருளுந் தன்மைக்கு ஓரளவில்லை அதனால் அடியேங்கட்கு மனமுருகும்வண்ணம் எழுகின்ற ஆசையானது அமையவில்லை (எ-று (அரோ-அசை) உ

இருங்கதையொன்றிசையென்றலுமே

துன்னும்பவமோசனசோதனையாந்
தென்னந்திலைசநந்திபுரச்சரிதம்
பன்னுந்தகையனறெனினுட்டாவேன்.

(இ-பொ-ளா)

ஆதலால் இன்னமும் ஒரு திவ்யசரித்திரத்தை யருளிச்செய்யவேண்டும் சுவாமீயென்றுநைமிசாரண்யவாசிகள் பிரார்த்தித்தவளவில் நெருங்கிய பிறவித்துன்பமானது தீர்தற்கு ஓர் பிரமாணமாயிருக்கின்ற அழகிய தெக்ஷிணதிக்கிலுள்ள நந்திமாநகரத்தின் திவ்விய சரிதமானது சொல்லுந்தகுதியுடைத்தன்றெனும் சொல்லுகிறேன் கேளுங்கள் ஏமஹரிஷிகளேயென்று சூதபுராணிகர் சொல்லத்தொடங்கினர் (எ-று) ரு

மேனுமொருமாதவன்மேன்மையுளோன்
ஞானலயமாகியநான்மறையோன்
றேனுர்கமலத்திசைநான்முகனுர்
தானுதரநீடனையன்றனையன்.

(இ-பொ-ளா)

முற்காலத்திலே ஒப்பற்ற பெரிய தவத்தினையுடையவரும் சிரேஷ்டமானவரும் ஞானத்திற்கிருப்பிடமாகிய நான்காகிய வேதங்களையத்தியயனஞ்செய்யும் பிரம்மவம்சத்திற் றேன்றியவரும் தேன்பொருந்திய தாமரையில் வீற்றிருக்கின்ற சதுர்முகங்களையுடைய பிரமதேவருடைய அன்புமிகுந்த புத்திரருக்குப்புத்திரரும் (எ-று) சா

வேறு.

குற்றமிக்கவைம்புலச்செயல்கடிந்துமுக்குறும்புஞ்
செற்றநற்றவர்சேகரன்றீவினைத்திறம்போ
யற்றவிச்சிரவசுவெனவ்ளங்கபிதானம்
பெற்றவுத்தமன்குலத்தினுர்தவத்தினுட்பெரியோன்.

(இ-பொ-ளா)

குற்றமிகுந்த ஐம்புலன்களின் செய்கைகளை நீக்கிக் காமம் வெகுளிமயக்கமென்னும் முக்குற்றங்களையுங் கெடுத்த நல்லதபசிகளுக்கு முடிபோன்றவரும் தீவினைகள்யாவுநீங்கிய விச்சிரவசுவென்றுவிளங்கிய பெயர்பெற்ற உத்தமரும் குலத்தினுந் தவத்தி

னும் பெரியவருமாகிய ஒருவரிருந்தார் (எ-று) ரு

அனையவன் விடையவன் மகிழ்நெடுந்தவமாற்றி
வினையகல் வடதிசையொடு விபுலமும் விளங்க
நினைவின் மாதவக்கொழுந்தென நிகழமுன்பெற்ற
தனையன் புண்ணியசேனனென் றுபார்த்திபப்பெயரோன்.

(இ-பொ ளா)

அவர் ரிஷிபவாகனத்தையுடைய சிவபெருமான் திருவுளமகி ழத்தக்க மிகப்பெரிய தவங்களைச்செய்து குற்றமற்ற வடக்குத்தி சையோடும் உலகங்களெல்லாம் விளங்கத்தக்கதாய் நினைக்குமிடத்து பெரியதவத்தின் கொழுந்தென்றுவிளங்க முன்னே பெற்றெடுத்த ஒப்பற்ற புத்திரனாகிய புண்ணியசேனன் என்பவர் ஒருவரிருந்தார் (எ-று) சு

பாலமைப்பருவந்தொடுத்தாதியம்பரமன்
மேலமைப்புறஞ்சிவபத்திமிக்கெழவிரும்பி
நீலமைக்களத்தரனடியருச்சனை நியமஞ்
சாலமைத்துளிவிழிவழிவரச்செய்துசார்நாள்.

(இ-பொ-ளா)

அவர் இளமைப்பருவமுதற்கொண்டு முதல்வரும் அழகியபரமனுமாகிய சிவபெருமான்மீது பொருந்திய சிவபக்தியதிகரிக்கவிருப்புற்றுக்காளகண்டத்தையுடைய அச்சிவபெருமானது திருவடிகளைப் பூசைசெய்யுமியதி மேற்படக்கரியகண்களின் வழிநீர் சொரியும்படி செய்துவருநாளில். (எ-று) எ

வரையிலெக்கைதனன்புமென்னைபனும்வளர்ந்து
புரையிலெவ்வனந்தழுவவெவ்வனங்களும்புகுந்து
கரையின்மாதவர்த்தொழுதான்றனங்கள்காணூஉத்
தரையினீள்சிவதீர்த்தங்கள்யாவுஞ்சஞ்சரித்து.

(இ-பொ-ளா)

திருக்கைலாயமலையில் வீற்றிருந்தருளும் எமது கடவுளினன்பும் எனதையனாகிய புண்ணியசேனனும் நாள்தோறும் விர்த்தியாகிக் குற்றமற்ற எவ்வனபருவத்தையடைய வெவ்விய அநேகம் புண்ணிய வனங்களிலெல்லாம் சென்று அங்கங்கேயுள்ள அளவில்லாத பெரியதவசிரேஷ்டர்களைக்கணவணங்கிச் சிவபெருமான்

வீற்றிருந்தருளும் திவ்வியக்ஷேத்திரங்களையும் தெரிசனஞ்செய்து இவ்வுலகிலுள்ள புண்ணிய தீர்த்தங்களிலெல்லாஞ்சென்று ஸ்நா ௮
னஞ்செய்து (எ-று).

ஆருமின்சுவையாற்புலவர்கண்மதித்தருந்தச்
சாருஞ்செம்பொருளமுதமுள்ளூறதந்துநாவா
யூருஞ்செந்தமிழ்க்கடலிருந்தருந்தவமுஞற்றப்
பாருந்திண்பெருந்துறக்கமும்புகழ்மலைபடர்ந்தான்.

(இ-பொ-ளா)

பொருந்திய இனியமதுரத்தால் கவிவாணர்கள் நன்குமதித்துண்ணும்படி பொருந்திய நல்லபொருளாகிய அமிர்தமானது உள்ளேதங்கி நாவினிடமாக வூர்ந்து வருகின்ற செவ்விய தமிழ்க்கடலாகிய அகஸ்திய மஹாருஷியானவர் வீற்றிருந்து அரியதவத்தைச்செய்ய அதனால் இம் மண்ணுலகும் விண்ணுலகும் புகழ்கின்ற பொதிகாசலத்தைப் போய்ச்சேர்ந்தார் (எ-று) ௯

இமவரைப்பிடித்தலைநாளெமையொப்பாய்தென்பார்
சமநிறுத்தெனக்குறுமுனிக்கிறைவிடைதரப்போந்
தமர்தலிற்படர்விமலமஞ்சினம்புதைத்தாங்கு
நிமிர்தலிற்பொதியமுமொருகயிலைபோனின்ற.

(இ-பொ-ளா)

எப்பொருட்கு மிறைவராகிய சிவபெருமான் அகஸ்தியமஹாமுனிவருக்கு பர்வதராஜ குமாரியாகிய வெட்டையானைபோன்ற உமாதேவியினது திருக்கல்யாண மஹோத்சவ காலத்திலே நம்மை நிகர்த்தவர் ஆதலால் நீர்போயிருந்து தென் பூமியைச்சமமாய் நிற்கச்செய்யும் என்று ஆஞ்ஞாபனைசெய்தருள அதின்படிச்சென்று அம்மஹாரிஷிவீற்றிருப்பதாலும் விசாலமாக வெள்ளைமேகங்கள் மூடி நிமிர்ந்து விளங்குவதாலும் பொதிகாசலமும் ஒப்பற்ற திருக்கைலாசமலை போல் நிற்கின்றது (எ-று) ௧௦

அவ்வரைப்புறத்தருச்சுனந்தேக்ககிலார
மொய்வினைத்தளிரப்பிரம்வருக்கைகவிண்முகிறேய்
வெவ்வரைக்குலமிலவங்கமேலமென்கொடிகள்
செவ்விமிக்கநன்கறிக்கொடிமலர்க்கொடிசெறிவ

(இ-பொ-ளா.)

அப்பொதிய மலைப் பக்கங்களில் மருதமரம் தேக்கு அகில் ச

ர்தனம் நெருங்கிய வாசனைபொருந்திய துளிர்களையுடைய புளி பலா ஆகாயத்திற் சஞ்சரிக்கும் மேகமண்டலமரியந்தம் உயர்ந்த மூங்கில்கள் இலவங்கம் ஏலம் முதலியமரங்களும் மெல்லிய கொடிகளும் செவ்விதானமிளகுக்கொடிகளும் புஷ்பக்கொடிகளும் நெருங்கியுள்ளன (எ-று) கக

மேன்மைபெற்றவர்தம் புடையாவர்மேவினுந்தம்
பான்மையிற்செயும்பரிசெனப்படர்பணைநிவந்து
சூன்மையுற்றன்மரங்களுந்தங்குணந்துவன்றக்
கான்மணப்பெருஞ்சந்தனபொதுளியகடிர்கா.

(இ-பொ-ள)

நற்குண நற்செய்கைகளையுடைய மேலோர் தம்பக்கலில் யார்வந்துசேர்ந்தாலும் தமது தன்மையைப்போற்செய்வது போலப்பரவிய பூமியினின்றும் மேலுயர்ந்து சூற்கொண்டமேகங்கள்தவழும் பலவேறு விருக்ஷங்களும் தம்முடையநற்குணம் பொலிய வாசனை வீசுகின்ற பெரிய சந்தனவிருக்ஷங்கள் நிறைந்த வாசனைபொருந்திய சோலையையுமுடையது அம்மலை (எ-று) கஉ

முதிர்ந்தசூற்பிடி நரையறக்கற்பகமுறித்தங்
கதிர்ந்தமால்களிறளிப்பனபுளமுக்கையிலகல்லான்
வதிர்தவெண்கயம்பசுந்தருநறுந்தளமுமறுத்தாண்
டெதிர்ந்தசந்தினதிளஞ்சினையிறுப்பனகநீட்டி.

(இ-பொ-ள)

பூர்ணமானகர்ப்பத்தையுடையபெட்டையானையினதாசைதீரத்தேவலோகத்திலுள்ள கற்பகவிருக்ஷத்தின் துளிர்களையொடித்து அங்கேசப்தித்தபெரிய ஆண்யானைகள் தமது துதிக்கைகளால் கொடுக்கின்றன இஃதிப்படியிருக்க விசாலமான தேவலோகத்திலுள்ள வெள்ளையானை யங்குள்ள பசிய கற்பக விருக்ஷத்தினது நறிய தளிர்களை வெறுத்து அவ்விடத்தில் வந்துதோன்றிய சந்தனமரத்தினிளமையான கிளைகளிலுள்ள கொழுந்துகளை விரும்பி அவற்றை முறிக்கின்றது (எ-று) கந

அலத்தகத்தளிரடியரமாதர்புக்காடிச்
சலத்தவானதிக்கரைநினறுதங்குழலீரம்
உலாத்தவேட்டுவர்புனமெறியகில்சுடும்புகைபோய்

நலத்தபூங்குழலியன்மணம் விழுங்கிமேனுறும்.

(இ-பொ-ள்)

செம்பஞ்சுக்குழம்பூட்டிய இளந்தளிர்போன்ற பாதங்களையுடைய தேவஸ்திரீகள் ஜலத்தையுடைய தேவகங்கையிற்சென்று ஸ்நானஞ்செய்து அதன்கரையில் நின்றுகொண்டு தங்கள்கூந்தலிலுள்ள ஈரத்தையுலர்த்த அச்சமயத்தில் இப்பொதியமலையிலுள்ள வேடர்கள் காடுகளிலுள்ள அகில்மரங்களை வெட்டி யதைச்சுடுகின்றபுகையானது அங்கேசென்று நன்மையையுடைய பொலிவாகிய கூந்தலிலுள்ள இயற்கை வாசனையை யுண்டு அதற்குமேலாக வாசனை வீசிக்கொண்டிருக்கும் (எ-று) ௰௪

படிவர்வேள்விவாய் நறைகளும்பன்மலர்மருவுங்
கடிவரையரமகளிர்தோயருவிநீர்க்கடியு
மடிவில் பூவைஞயின்டமுகுரிஞ்சியசந்தின்மணமு
நெடியசாரலின்பரப்பெலாங்குமுகுமுநிகழும்.

(இ-பொ-ள்)

முனிவர்கள் செய்யும் யாகத்திலுண்டாகும் வாசனையும் பலபுஷ்பங்களின் வாசனையும் அழகிய மலையில் வாழுந் தெய்வப்பெண்கள் ஸ்நானஞ்செய்கின்ற அருவியின்கணுண்டாகும் வாசனையுங் கெடுதலில்லாதபுனுகுப்பூனை தன்னிடமுண்டாகும் புனுகைச்சந்தனமரங்களில் தேய்ப்பதனாலுண்டாகும் வாசனையும் நீண்ட அம்மலைச்சாரற் பக்கங்களெல்லாம் குமுகுமுவென்று கமழ்ந்துகொண்டேயிருக்கும் (எ-று) ௧௫

இத்தகைத்தநல்வளைகளங்கண்டுகண்டேகிச்
சுத்தமெய்த்திருவளையிடச்சுருதிகண்முழங்க
முத்திவைப்பெனவாகியாராமஞ்சூழ்முற்றுஞ்
சத்தியத்தனியுறையுள்கண்டதனயல்சார.

(இ-பொ-ள்)

இத்தன்மைத்தான நல்ல அம்மலையின் வளப்பங்களையெல்லாம் பார்த்துப்பார்த்துச்சென்று பரிசுத்தமான உண்மையாகிய

அழகிய அப்பொதியமலையில் வேதங்களெல்லாம் கோஷிக்கச் சோலைகள் சூழ்ந்த அம்முழுவிடங்களிலும் இது மோக்ஷபொக்கிஷமென்று சொல்லும்படி பொருந்திய உண்மையான ஒப்பற்ற ஆச்சிரமத்தைக்கண்டு அதன்பக்கத்திலே போக (எ-று) கசு

மானமாமயிர்க்கொடிக்குண்டுநிற்பவனுகிராற்
கானவேங்கைகணிக்கிமற்றநகனொடுகலக்குந்
தேனிலாமருவியுளரிக்குருளை சென்றெழுகத்
தானமாப்பனைக்கரமநீத்தெடுக்குறுந்தழுவி,

(இ-பொ-ள)

கவரிமானானது தன்னுடையமயிர் சிக்கிக்கொண்டு நிற்க அதைப்பார்த்து அதற்குப்பகையாயுள்ள காட்டிற்றிரியும் புலிகள் தமது கூரிய நகத்தினால் எடுத்து நீக்கி அக்கவரிமானோடு நட்பு கொள்ளும் தேன்பொருந்திய அருவிகளுக்குள் சிம்மக்குட்டிகள் அகப்பட்டுச்சுழன்றோட அதைக்கண்டு அதற்குப்பகையாகிய யானைகள் தங்கள் பகைமையைவிட்டு பனைமரம்போன்ற தமது துதிக்கையினால் அணைத்துத்தழுவியெடுக்கும் (எ-று). சஎ

ஏனைமாக்களுமிவ்வகைபகைதவிர்ந்திருப்ப
தானவாச்சிரமத்தினுண்ணுதல்விழிபகன்ற
ஞானமாச்சிவனுமெனவிளங்கிஞல்வேத
கானவாய்க்குடமுனியவணிருப்பதுகண்டான்,

(இ-பொ-ள)

மற்றையமிருகங்களு மிவ்வாறே விரோதமின்றி யொன்றோடொன்றுறவாயிருக்கின்ற தாகிய அங்கேயுள்ள ஆச்சிரமத்தில் நுட்பமானவிசாலமாகிய நெற்றிநேத்திரத்தையுடைய பெருமை பொருந்திய ஞானஸ்வரூபராகிய சிவபெருமானே யாமென்று சொல்லும்படி பிரகாசித்து நான்குவேதங்களையுங் கானஞ்செய்யும் திருவாயையுடைய அகஸ்திய மஹாமுனிவர் அங்கேயெழுந்தருளியிருப்பதைப்பார்த்தார் (எ-று) சஅ

வேறு.

சித்தமூனைகிழக் கண்புனறளிப்பத்திருமுன்பு சென்றுதாழ்ந்

தெழுந்து, முத்தமிழ்பழுத்ததான்மறைத்தருவேமுதிர்தவக்கதிர்விடு
சுடரே, சத்தியஞானந்தமாக்கடலேசருமமெய்ப்பொருள்பிறந்
தகமே, யித்தகுமலையவனாச்சிகாமணியேயெனத்துதித்தாடிநின்
றுரைப்பான.

(இ-பொ-ள)

உடனே மனமானது உள்ளேகுழைய கண்ணீரானது முத்து முத்தாய் ஒழுகச்சந்நிதானத்தின்முன்னே சென்று சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்தெழுந்து நின்று இயலிசைநாடகமென்னு மூன்று தமிழாகிய பழங்கள்பழுத்த நான்குவேதங்களாகிய விருக்ஷமே மிகமுதிர்ந்த தவமாகிய கிரணங்கள் வீசுகின்ற ஞானசூரியனே உண்மையாகிய பெரிய ஞானானந்த சாகரமே நியாயமாகிய உண்மைப்பொருளுக்கு உற்பத்தி ஸ்தானமே இந்தத்தகுதியையுடைய பொதிகாசலத்திலெழுந்தருளியிருக்கின்ற சிரோரத்தினமே என்று ஸ்தோத்திரஞ்செய்து ஆனந்தக்கூத்தாடி நின்றுகொண்டு சொல்லுவார் (எ-று) ௧௯

என்மனத்தெழுமோர் வேட்கையென்னெனி னியாணிருந்திசை
ப்பாலரோடுமிவ், னன்னிதிக்கொருவனாகவுமடியே னயந்தனன
தற்கொருவழிநீ, பன்னிடக்கடவதெனவலன்மேற்கண்பாய்ப்பிநா
ன்முகன்மகன்மகன்சே, யுன்னினேப்பெளிதினுறத்தருமுபாயமு
ரைப்பலென்றுளத்திஞய்ந்துரைப்பான்.

(இ-பொ-ள.)

சுவாமீ அடியேன் மனத்திலொரு இச்சையுண்டாகிறது அதென்னவென்றால் அடியேன்பெரிய திக்குப்பாலகர்களோடொருவனாகவும் கெடாதநல்லசெல்வத்திற் கொருவனே யாகவுமிருக்க விரும்பினேன் அதற்குதேவரீர் ஒருமார்க்கம் அருளிச்செய்யவேண்டுமென்று பிரார்த்திக்க அப்புண்ணியசேனன்மீது கிருபாவீக்ஷணஞ்செய்து பிரமாவின் புத்திரராகிய புலஸ்தியர் அவர் புத்திரராகிய விச்சிரவசு இவர்புத்திரனாகிய புண்ணியசேனா நீநினைத்தகாரியமானது எளிதிலேகைகூடும் ஒருபாயத்தைச் சொல்லுகிறேனென்று தமது திருவுளத்திலாராய்ந்து திருவாய்மலர்ந்தருள்வாராயினர் (எ-று) ௨௦

இப்பெரும்பொருப்பன்பதிநதிவடபாலிருக்கும்வெள்ளிமடப்பு

ரமதனின், மூப்பெரும்புவனம்பாவ வாப்புடையமுழுமுதலுறைத
ருந்தென்சார்பெரும்வழுந்தொலை த்தவாவளிகுமேற்றுயர்
பெயர்ததடமொன்றுண் டப்பெருந்திருத்தம்படிந்ததன்மருங்கி
லமர்ந்தினிதருந்தவம்புரியில்.

(இ-பொ-ரை)

பெரிய இந்தப்பொதிகாசலததையுடைய பாண்டியமகாரா ஜனது இராஜதானியாகிய மதுரையிற்செல்லும் வையையாற்றிற்கு வடபக்கத்திலிருக்கின்ற தாவள்யமான இடபபுரத்தில் விசால மான மூன்றுலகங்களும் புகழுமுழுமுதற்கடவுளாகிய திருவாப்பு டையீசர் வீற்றிருந்தருளுவா அதன்தென்றிசையில் எவ்விதமான பெரும்பாவங்களையும் நிவிர்த்தி செய்து விரும்பியவற்றைபுடனே கொடுக்கின்ற மிக உயர்ந்த நந்திதீர்த்தம் ஒன்றிருக்கின்றது அந் தப் பெருமைபொருந்திய தீர்தத்தில் ஸ்நானஞ்செய்து அதன் பக்கத்தில் இருந்து இனிதாக அரிய தவத்தைச் செய்தால் (எ-று) உக

திருவருளுருக் கொண்டணிவளர்பவளச்செழுஞ் சடையாப்பு டையமலன், வரும்வரமளிக் குமிந்திரத்திருநேர்வளத்தினில்வை குதியெண்ணில். விரைவினிற்படர்கென்றிசைக்கமுன்பணிந்துவி டைகொடுபொவிவெற்பிழிந்து, பரனருளீப்பவயிச்சிரவண னுட் பரியொடுபதிகனு * ய்ச்சென்றான்.

(இ-பொ-ரை)

திருவருளையே திருமேனியாகக்கொண்டு அழகுவிளங்குகின் ற பவளம்போன்றசெழிய ஜடையினையுடைய மலரகிதராகிய திருவாப்புடையீசர் எழுந்தருளிவருவார் நீ வேண்டிய வரங்களை கொடுப்பார் அதனால் தேவேந்திரசெல்வத்திற்கொப்ப மிக்கவள மையோடிருப்பாய் ஆதலால்மிகத்துரிதமாய்ப்போவாயென்றுகட் டளையிட்டருள உடனேவயிச்சிரவணன அம்மஹரிஷியின் சந்நிதா னத்திலே நமஸ்காரஞ்செய்து விடைபெற்றுக்கொண்டு துதித்து அப்பொதியமலையினின்று கீழேயிறங்கிச்சிவபெருமானது திருவ ருள் முன்னே இழுத்துச்செல்ல மனமகிழ்ச்சியுடன் வழிசெல் வோனாய்ப்போனான் (எ-று) உஉ

உள்ளில்வன்பவங்களொழிப்பதாயக்காணிலுவந்தனயாவு நல்

குவதாய்ச், தள்ளரும்புனித மாச்சிவராச தானியாயுத்தமதலமா
ய்க், கொள்ளுநன் கதிக்கோரெல்லையாய்க் கோதினெடுந்தமிழ்க் குறு
முனிகூறும், புள்ளுறைகமலவாவிசூழிடவபுரத்தினில்விரும்பியு
ள்புகுந்தான்.

(இ-பொ-ரை)

நினைத்தால்வலியபாவங்களையெல்லாம் போக்குவதாயும் பா
ர்த்தால் சந்தோஷமாய் வேண்டியவற்றையெல்லாங்கொடுப்பதா
யும் நீக்கற்கரியபரிசுத்தமான பெரிய சிவபெருமான் வீற்றிருந்
தரசுசெய்யும் முக்கியமான இராஜதானியாயும் மிகநல்ல புண்ணி
யக்ஷேத்திரமாயும் அடைகின்ற நல்லமோக்ஷகதிக்கு ஒரு எல்லை
யாகவும் விளங்குகின்ற குற்றமற்ற நெடிய தமிழாசிரியராகிய அக
ஸ்திய மஹாரிஷியானவர் திருவாய்மலர்ந்தருளிய பறவைகள் வ
சிக்கின்ற தாமரைத்தடாகங்கள் சூழ்ந்த இடபபுரத்தில் விருப்ப
மாய்ப்போனான் (எ-று) உ௩

மலர்குடைந்தாடுந்தேனிருல்வாவி * வதிந்துசங்கற்பநன்கியற்றி
நலனுறமூழ்கிக்கிலகநாமநாயகன்கோயில்சூழ்ந்திறைஞ்சிப்
பலனுறுபூசைவிதிப்படியாற்றிப்பசுமடுப்பாலினிருந்து
குலவுகாரமாரிவருட நாட்கான்மேல்கொளநிறை நீரினுட்குளித்
தும்.

(இ-பொ-ரை)

வண்டுகள் புஷ்பங்களைக்குடைந்து விளையாடுகின்ற இடப
தீர்த்தத்தில் போயிருந்து சங்கற்பஞ்செய்து நன்மைபொருந்த ஸ்
நானஞ்செய்து திருவாப்புடையீசர் எழுந்தருளியிருக்கும் திருக்
கோயிலைப்பிரதக்ஷிணஞ்செய்து வணங்கி மேலான பிரயோசனத்
தைக்கொடுக்கும் சிவபூசையைக்கிரமமாய் நடத்திப்பின் அவ்விட
பதீர்த்தத்தின் பக்கத்தில் நன்றாயிருந்து விளங்கிய மேகங்கள்
மழையைப்பொழிகின்ற மழைக்காலத்தில் கால்கள் மேலாக நி
றைந்த ஜலத்தில் மூழ்கிநின்றும் (எ-று) உ௪

வெயிற்சுடு வேனிலைவகை நெருப்பினனந்தலைநின்றும்வீழ்பனி
நாள், வயிற்குளிர்க்குடையாதாடைநீத்திருந்தும்வள்ளுகிர்மயிர்ச்
சடைவளர்த்தும், இயக்குமைம்பொறியின்வாயில்களடைத்துஞ் சி
லபகலருந்தவநடப்பக், குயிற்குலமருளுங்குரவவார்குழற்பெண்
கொடியொடுப்பரன்வெளிவருமால்.

(இ-பொ ள்)

வெய்யிலானது நன்றாய்ச்சுடுகின்றகோடைக்காலத்தில்பஞ்சாக்கினி மத்தியில் நின்றுகொண்டும் பனிமிகுந்தகுளிர்காலத்திலே அக்குளிருக்குத் தளர்ச்சியடையாது வஸ்திரத்தை நீக்கியிருந்தும் கூரியநகங்களையும் உரோமத்தாலாகிய ஜடையையும்வளர்த்தும் கலக்கஞ்செய்கின்ற பஞ்சேந்திரியங்களின் வாயில்களை அடைத்தும் இவ்வாறுசிலகாலம் அருந்தவஞ்செய்யக்குயிற் கூட்டங்களும் மயக்கத்தக்கவார்த்தையையுடைய குரவங்கமழ்குழலம்மையென்னும் தேவியுடன் திருவாப்புடையீசர் பிரசன்ன மாவார் (எ-று) உரு

மின்பழுத்தமிழ்செஞ்சடைநறுங்கொழுந்தும் வெண்பிறைத்தளிரும்வாண்முகமும், பொன்படைத்தனையமேனியுந்திருவெண்பூதியும்புலியதளுடையு, மன்பணிக்குழையுமபயமுமபய வரதமுமிளிர்கழற்மலரு, மன பிணைப்புரிந்துதொடர்முழுநோக்குமாகிவந்தவனெதிர்நின்றான்.

(இ-பொ-ள்)

மிகுந்த பிரகாசம் வீசுகின்ற செவ்வியகொழுந்து விட்டுவளர்கின்ற ஜடைக்கற்றையும் வெண்ணிறமுள்ளதளிர்போன்ற மூன்றாம்பிறைச்சந்திரனும் திவ்யதேசசு பொருந்திய திருமுகமும் பொற்பிரகாசத்தை வீசும் திருமேனியும் திருவெண்ணீறும் புலித்தோலாகியவஸ்திரமும் நிலைபெற்ற சற்பக்குண்டலமும் இரண்டு திருக்கரங்களும் அபயாஸ்தமும் வரதாஸ்தமும் விளங்குகின்ற திருவடித்தாமரைகளும் தம்மேலன்புடைய வைச்சிரவணனை விரும்பிப்பார்க்கின்ற பரிபூர்ணமான கிருபாவீக்ஷணமும் ஆகிய இவைகளையுடையவராய் எழுந்தருளிவந்து அவ்வைச்சிரவணன் முன்னே நின்றார் (எ-று) உசு

நின்றியாமகிழ்ந்தேம்பெருந்தவப்பிள்ளாய்நெடுந்தவநீத்தெழுந்திருநீ, யென்றுவாய்மலரவுடனெழுந்தாடியிருவிழிநீர் பரந்திழியத், தன்றனைகவருந்திநாள்பலவுழந்ததவமுறக்கொடுவந்ததனையு கொன்றையந்தருவினணிநிழலமர்ந்தகுழகனைப்பணிந்திலவது

ப்பான்.

(இ-பொ-ள)

இவ்வாறெதிரேநின்று பெரியதபசிரேஷ்டனே நாம் மிகமகிழ்ந்தோம் நீ செய்யுந்தவத்தைவிட்டு எழுந்திரு என்றுதிருவாய்மலர்ந்தருள உடனே எழுந்திருந்து அனந்தர்க்கூத்தாடி இரண்டுகண்களினின்றும் தாரைதாரையாயானந்தபாஷ்பம்பொழிய தான்வருந்தியனேசநாளாய்ச்செய்ததவமே திரண்டொருவடிவங்கொண்டு வந்தாற்போல் எழுந்தருளிய அழகிய கொன்றைவிருக்ஷத்தினீழலின்கண் வீற்றிருந்தருளிய கட்டழகையுடைய திருவாப்புடையீசனை நமஸ்கரித்து அடியில் வருமாறு தோத்திரஞ்செய்வார் (எ-று) ௨௭

குணவிராசதத்தின்மலர்மகனாகிக் கோதில்சத்துவகுணத்தரியாயுணர்விருமதத்தினுருத்திரனாகி யுலகெலாமீன்று காத்தழித்து, தணிவில்சாத்கிரத்தில் விசுவனாய்க்கனவிற்றைசதனாய்ச்சுழுத்தியினிற், புணர்பிராக்கினனாயுயிர்தொறும்புணரும்பூரணப்பரஞ்சுடர்போற்றி

(இ-பொ-ள)

இராசதகுணத்தில் பிரமாவாகியும் குற்றமில்லாத சாத்துவிதகுணத்திலே மஹாவிஷ்ணுவாகியும் தெளிவில்லாததாமதகுணத்திலே உருத்திரமூர்த்தியாயுமாகி உலகங்களையெல்லாம் சிருஷ்டிஸ்திதிசங்காரமாகிய கிர்த்தியத்தை முறையேயியற்றியும் சாக்கிரவஸ்தையில் விசுவனாகியும் சொப்பனவஸ்தையில் தைசதனாகியும் சுழுத்தியவஸ்தையில் பிராக்ஞனாகியும் சர்வாத்மாக்களிடத்துங்கலந்திருக்கும் எங்கு நிறைவானபரஞ்சோதி சொரூபனை நமஸ்காரம் (எ-று) ௨௮

ஆதியாய்நடுவாயந்தமாயவைதீரனாகியாய்ச்சருசியுமளவா, நீதியாய்த்தூலசூக்குமவடிவாய்நிர்க்குணமாய்த் தனிமூலத்த, சோதியாய்ப்பரமானந்தமந்திரமாய்ச்சொல்லளவாலளந்தியாரும், போதியாப்பொருளாயுலகெலாநிறைநின்பொன்னடிப்பூந்தளிர் போற்றி.

(இ-பொ-ள.)

முதலாகியும் மத்தியாகியும் முடிவாகியும் இவைகளெல்லா

ந் நீர்ந்த அனுதியாகியும் சுருதிகளாலும் அளவிட்டறியக்கூடாத உண்மைப்பொருளாகியும் ஸ்தூலவடிவாகியும் சூக்குமவடிவாகியும் குணரகிதமாகியும் தனியேயுண்டான அருட்சோதியாகியும் பிரமானந்தமாகிய மந்திரசொரூபராகியும் சொன்மாத்திரையால் அளவிட்டு எவரும் சொல்லத்தகாத பரம்பொருளாகியும் உலகமெங்கும் நிறைந்த தேவரீரது பொலிவாகிய துளிர்போன்ற அழகிய திருவடிகளுக்கு நமஸ்காரம் (எ-று) உக

பிரணவவடிவாயட்டமூர்த்தியுமாய்ப்பேருயிர்க்குயிரதாய்மாயை, யரணநீத்திலங்கு மறுவதாய்ப பரமாகாயமாய் முக்குறும்பெறுந்த, சரணடைந்தவர்கட்கருணிறைகடலாய்ச்சச்சிதானந்தமாய்ச சனன, மரணமில்பொருளா யாப்பனூரமர்ந்த மாசிலாமுழுமுதல் போற்றி.

(இ-பொ-ரை)

பிரணவமந்திரசொரூபமாகியும் அஷ்டமூர்த்த வடிவமாயும் உயிர்க்குயிராயும் மாயையென்னுங் கோட்டையினின்று நீங்கிப்பிரகாசிக்கின்ற சிற்சொருபமாயும் பரமாகாச சொரூபமாகியும் முக்குற்றங்களையுநீக்கி தஞ்சமாயடைந்தவர்களுக்கு நிறைந்த கிருபாசமுத்திரமாயும் சச்சிதானந்தசொரூபமாயும் பிறப்பிறப்பில்லா நித்தியவஸ்துவாயும் விளங்குகின்ற திருவாப்பனூரிலெழுந்தருளிவிளங்கும் நிஷ்களங்கமான முழுமுதற்கடவுளை நமஸ்காரம் (எ-று) கூ0

எண்ணிவிவ்வகைய துதிமொழிந்தங்கமெட்டினுேடைந்தினுமிறைஞ்ச, விண்ணவர்பெருமான் றவர்திஞந்துதிக்கு விழைந்தனம்விழைந்தனகொடுப்பேம், கண்ணுறுதவத்தோய் கேளெனத்திசை வாழ்கடவுளரோடொருவனுமா, யொண்ணிதக் கரசாயழிவிலாச்செல்வத்துறைபதந்தருகெனவுரைத்தான்.

(இ-பொ-ரை)

இவ்வாறாகிய அளவில்லாத ஸ்தோத்திரங்களைச்செய்து அஷ்டாங்கபஞ்சாங்கத்தால் நமஸ்கரிக்க மஹாதேவராகிய திருவாப்புடையீசர் தவசிரேஷ்டனே நீ செய்ததபசைப் பார்க்கினும் ஸ்தோத்திரத்துக்குப் பரமானந்தமடைந்தேம ஆகலால் வேண்டிய வரத்தைக்கேள் கொடுக்கின்றேமென்று திருவாய்மலர்ந்தருள அ

து கேட்ட வைச்சிரவணன் சுவாமீ அடியேன் திக்குப் பாலகர்களோடு ஒருவனாயும் செல்வத்திற்கரசனாயும் ஒருக்காலும் குறைவில்லாத பெருஞ்செல்வத்திலேயே வசிக்கின்ற ஒரு பதவியையும் தந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தான் (எ-று) ௯௧

இருந்திசைப்பாலர்யாரினுஞ்சிறந்தவிந்திரத்திருநிகர்வளத்திற் பொருந்திநன்னிதிக்கோனாகியெண்டிசையிற்பொருவில்சீர்வடதிசைபுரக்க, மருந்திறலுடதியெனப்பெரும்வரங்களாப்புடையமலனங்களிபப, வருந்திநோற்றுயர்ந்தவயிச்சிரவணனுண் மலர்ந்தெழுகளிப்பினைமயங்கி,

(இ-பொ-ள)

பெரியதிக்குப்பாலகர்கள் யாரினுஞ்சிறந்த தேவேந்திர செல்வத்தையொத்த பெருமையிற் பொருந்தி நல்லசெல்வத்திற் கரசனாகி அஷ்டதிசைகளுள்ளும் சமானமற்ற சிறப்பான வடதிசையைக்காக்கின்ற அரியவலிமையையுடையாயென்று இத்தன்மையான வரங்களை மலரகிதரான திருவாப்புடையீசர் கொடுத்தமாத்திரத்தில் வருந்தித்தவங்களைச்செய்து அதனாலுயர்ச்சிபெற்ற அவ்வயிச் சிரவணன் உள்ளமானது மலர்ந்து அதனாலுண்டாகிய பேரானந்தத்தால் மதிமயங்கி (எ-று) ௯௨

மின்னினுஞ்சிறந்த குரவவார்குழற்பெண் விடைமிசையரனொடிமிருப்ப, எனனினுமிவளென்னதவமுயன்றனளோ வெம்பிரானுடனிருந்தனளென, றுன்னினனொரு தொருகணாற்பார்க்க வுமைசிறிதுருத்தலுமுருகி. யந்நிலையொருகண மறைந்துபிரவியா வானுயிரளிப்பவாங்கெழுந்தான்.

(இ-பொ-ள)

மின்னற் கொடியைப்பார்க்கினும் சிறப்பாகிய குரவக்கமழ்குழலம்மையார் இத்திருவாப்புடையீசரோடு இடபவாகனத்தின் மீதிருக்க இவள் என்னைப்பார்க்கினும் என்ன அரியதவத்தைச்செய்தாளோ எமது சிவபிரானுடனேயே யிருக்கிறாள் என்று நினைத்தவனாய்ப் பொறாமையாய் ஒரு கண்ணாற்பார்க்க அதையறிந்த உமாதேவி கிஞ்சிதக் கோபித்தவளவில் அந்தக்ஷணமே கொடுமையாய்ப்பார்த்த அந்த ஒரு கண்ணுமுருகிக்குருடாய் உயிர்போகாமல் திருவாப்புடையீசர் உயிர்கொடுக்க எழுந்தான் (எ-று) ௯௩

எழுந்தயர்பவனைப் பெருந்தவச்சிறுவ வென்னினைந்தனையிவள்
வலியா, மொழிந்திடற்கரிதா லாயினுமொழிவே முழுதலகின்று
ாத்தோம்பி, யுழுந்துருள்பொழுதி னழிப்பவளிவளே யொழிய
ிந்சொருசெயலெமக்கின், றழுந்தயரொழிதி யெம்மில்வேற ல
ீதரு மறைப்பொருளெனவறித.

(இ-பொ-ள)

எழுந்துநின்று தன்புறுகின்றவைச்சிரவணனைப்பார்த்துபெரி
தவத்தினையுடைய சிறுவனே என்னநினைப்பு நினைந்தாய் இவ்வு
ாதேவியினது வலிமையை நம்மாற் சொல்லமுடியாது ஆனாலு
சொல்லுகிறோம் கேட்பாயாக உலகமுழுவதையும் பெற்று அ
வகளைக்காப்பாற்றிப்பின் உழுந்து உருண்டோடுகின்ற அவ்வள
காலத்திற்குள் சங்காரஞ்செய்கின்றவள் இவ்வுமையைவிட நமக்
யாதொருசெயலுமில்லை ஆதலால் நீ தயரத்தோடு மழுவதை
பாழி நமக்கு மிவளுக்கும் யாதொருபேதமில்லை இதைவேதங்
ளின் உண்மைப்பொருளென்றறிவாயாக (எ-று) ௩௪

தேனுமின்சுவையும் பிரித்திடற்கரிதாஞ் செயலெனக்கலந்தக
ாம, வியானுமிங்கிவளுமிருப்பதிங்கிவளேயாவர்க்கு மோருயிர்
ாயால், வானளிந்திரற்குப்பெருந்திருவளித்த வரப்பெருஞ்
சல்வி செங்கமலப், பூநிறந்திகழ் மென்றளிரடியலதோர் புகலி
ினைக்கெனட்புகனருன.

(இ-பொ-ள)

நாமுமிவ்வுமையும் தேனும் அதனது மதுரமும் எப்படி வே
பிரித்தற்கியலாதோ அதுபோல் அபின்னமாகி இருக்கிறோம்
வ்விடத்து இவளே எல்லாவுயிர்களுக்கும் ஒப்பற்ற தாயாகும்
ன்றியும் தேவலோகத்துள்ள தேவேந்திரனுக்குப்பெரியசெல்
களைக்கொடுத்தருளிய சிரேஷ்டமான பெருமையையுடைய சீ
ஷி ஆதலால் இவ்வம்பிகையினது செந்தாமரை மலர்போ
நிறந்திகழும் மெல்லிய தளிர்போன்ற திருவடிகளையன்றி
க்கடைக்கலமாவது வேறொன்றுமில்லையென்று திருவாய் ம
ந்தருளினார் (எ-று) ௩௫

சாதியாங்குலாத்த திருமொழிசிரத்திற் சூடினன்றொழுதிவை
ட்டா, ஜோதியாக்கிளாக்கும் டமமறைமுடிவி னுண்மையுக்க

டர்தாஞருவிற், பாரிமாபபரையே முழுதுமாய்நிறைந்த படைப்
பனவாதியையர்தொழிற்கு, மாதியாங்குரவங் கமழ்குழலுமையே
யஞ்சினேனடைய நின்னடையம்.

(இ-பொ-ள)

ஜோதிர்மயமான திருவாப்புடையீசர் அங்கே திருவாய்மலர்
ந்தருளிய திருவாக்கைச் சிரசிற் றங்கிக்கொண்டவனாய் வணங்கி
இவ்வாறு ஸ்தோத்திரஞ்செய்வான் சொல்லி முறையிடுகின்ற வே
தாந்தத்தின் மதார்த்தத்தையுங்கடந்த எம்பெருமானது திருவுரு
வத்தில்டாதித்திருவுருவமாய் விளங்கும் பராசக்தியே பரிபூரண
மாயெங்கும் நிறைந்து சிருஷ்டியாதி பஞ்சகிர்த்தியங்கட்கும் மு
தன்மையாகிய குரவங்கமழ்குழலம்மையே மிகப்பயந்தேன் உன்
னடைக்கலம் உன்னடைக்கலம் எ-று) நசு

மலர்தலையுலகஞ் செயுந்தவக்கொழுந்தே மலைபழுத்தமிழ்தறு
க்கனியே, குலமறைக்கொடிமேற் படர்செழுங்கொம்பே குதலை
மென் மொழியிளங்கரும்பே, நலநிறைதிருவே குயிலிளம்பெ
டையே நங்கையற்கொருமணிவிளக்கே, யலர்தருகுரவங் கமழ்
குழலுமையேயஞ்சினேனடையநின்னடையம்.

(இ-பொ-ள.)

இடமகன்ற இவ்வுலகமானது செய்ததவத்தின் கொழுந்தே
இமயமலையரசானது பழுத்துக்கொடுத்த நறிய பழமே வேதங்க
ளாகிய கொடிமேலேபடர்தற்காதாரமான செழுங்கொம்பே இள
மையாகிய மிருதுவான மதலைச்சொற்களையுடைய ஞானக்கரும்
பேதன்மைமிகுந்த செல்வமே இளமைபொருந்திய பெட்டைக்கு
யிலேபெண்களுக்கெல்லாமேலான ஒப்பற்ற இரத்தினதீபமே ம
லர்ந்த குரவங்கமழ் குழலுமையே மிகப்பயந்தேன் உன்னடைக்
கலம் உன்னடைக்கலம் (எ-று) நஎ

ஓமெனுமெழுத்தி னொருதனிக்குடம்பை யுள்ளுறைந்தருள்பசு
ங்கிளியே, தேமருகடுக்கை வளர்சடைப்பெருமான் றிருவுளத்தட
மடவனமே, காமருடணிமால் வரைத்தனிமயிலே கயிலையஞ்சயில
மென்மருந்தே, யாமெனுங்குரவங்கமழ்குழலுமையேயஞ்சினேன
டையநின்னடையம்.

ஓமென்னும் பிரணவாக்ஷரமாகிய ஒப்பற்ற கூட்டினுள்வாச
ஞ்செய்தருளுகின்ற பச்சைக்கிளியே வாசனைபொருந்திய கொன்
றைமாலையைத்தரித்த நீண்ட ஜடாமுடியையுடைய சிவபெருமா
னது திருவுள்ளமாகிய தடாகத்தில் விளையாடும் இளமையாகிய
அன்னமே அழகியபெரிய இமயமலையின் ஒப்பற்ற மயிலே அழகி
ய கைலாயமலையின்மேலிருக்கின்ற மருந்தேயாமென்று சொல்
லும் குரவங்கமழ்குழலம்மையே மிகப்பயந்தேன் உன்னடைக்கல
ம் உன்னடைக்கலம் (எ-று) ரு-அ

நிலத்தினிற் பயிராய்ச் சலத்தினிற்சுவையாய் நெருப்பினில்
வெம்மையாய்க்காலிற், சொலத்தகுநடையாய்க் காயத்தினிடமா
ய்ச்சுடரினிற்கதிர்மதிநிலவாய், நலத்தகுபுயலிற்றாரையாய் விளங்
கிநல்லுயிர்த்தொகைபுரந்தளிக்கு, மலர்த்திகழ்குரவங் கமழ்குழ
லுமையேயஞ்சினேனபயநின்னபயம்.

(இ-பொ-ள)

பூமியிற்பைங்கூழாகவும் தண்ணீரில் மதுரமாகியும் அக்கினி
யில் உஷ்ணமாகியும் காற்றிற்சொல்லத்தக்க நடையாகியும் ஆ
காயத்தில் இடமாகியும் சூரியனில் கிரணமாகியும் சந்திரனில் அத
னது பிரபையாகியும் நன்மையைக்கொடுக்கும் மேகத்தினிடத்தி
ல் மழையாகியும் பிரகாசித்து எல்லா வுயிர்களையும் இரக்ஷிக்கின்
ற புஷ்பங்கள் விளங்கும் குரவங்கமழ்குழலுமையே மிகப்பயந்தே
ன் உன்னடைக்கலம் உன்னடைக்கலம் (எ-று) ரு-கூ

கறைமிடற்றிறைவன்விழிகுடியிருப்பக்கவின்குடியிருந்தடிபணை
த்துப், பிறைவடங்கிடந்தமுலைப்பசுங்கொடியேபெண்ணலங்கனிந்
ததெள்ளமுதே, முறைமுறைபுவனசராசரசடங்கண்முழுவதுந்த
னிபிறந்தகமே, யறைமலர்க்குரவங்கமழ்குழலுமையே யஞ்சினே
னபயநினபயம்.

(இ-பொ-ள)

காளகண்டமூர்த்தியாகிய சிவபெருமானது கண்கள் எப்போ
தும் மாறுமற்றார்க்கும் பேரழகுபொருந்தி அடிபருத்துச்சந்திர
ஹாரங்கிடந்து பிரகாசிக்கின்ற ஸ்தனங்களையுடைய மரகதக்கொ
டியே பெண்ணின்நன்மைமுதிர்ந்த தெளிவாகிய அமிர்தமே பூ
மிசளும் தாவரசங்கமங்களாகிய சடபதார்த்தங்களெல்லாம் ஜ
மமாகப் பிறந்த ஒப்பற்ற ஆதாரஸ்தானமே யாவரும் புகழ்ந்து

சொல்லும் குரவங்கமழ்குழலம்மையே மிகப்பயந்தேன் உன்னடைக்கலம் உன்னடைக்கலம் (எ-று)

௪௰

இவ்வகைதுதித்தாங்கன்னை நீசேயானிழைத்ததீங்கிவைபொறுத்தருளென், றவ்விடையிரப்பவாப்புடையமலனவமதித்திகழ்ந்த கணிவன்பெற, றய்வகையளித்தி யெனமகிழ்ந்திறைவியுருமுன்மறைவிழிபொன்போல், வௌவுறவளித்தாளன றொட்டுலகம் வழுத்தினகுபேரனென்றவனை.

(இ-பொ-ள்)

என்றிவ்வாறு ஸ்தோத்திரஞ்செய்து நீ தாய் அடியேன் உன்பிள்ளையாதலில் நாயேன்செய்தஇக்குற்றங்களைப்பொறுத்தருளல் வேண்டுமென்று அவ்விடத்தில் இரந்துகேட்டுக்கொள்ள அச்சமயத்தில் மலரஹிதராகிய திருவாப்புடையீசர் உமாதேவியைப்பார்த்துப்பெண்ணே உன்னைநிந்தித்திகழ்ச்சிசெய்தகண்ணை யிவன் மீண்டும் பெற்றுப்பிழைக்கும் வண்ணங்கொடுப்பாயென்று திருவாய்மலர்ந்தருள சர்வலோகைக நாயகியாகிய குரவங்கமழ் குழலம்மை திருவுளமகிழ்ந்து முன்னேகலைந்து மறைந்து போனகண்ணானது பொன்போலப்பொருந்தும்படி கொடுத்தாள் ஆதலால் உலகத்தார் அது முதற்கொண்டு அவ்வயிச்சிரவணனை குபேரனென்று சொல்லுகிறார்கள் (எ-று)

௪௧

பாவருங்குரவங்கமழ்குழலணங்கும்பரமனுங்கோயில் புக்குறையத், தாவருங்களிப்பினளகையிற்குபேரனசார்ந்திரு நிதிக்கரசாகி, வெருவரும்யக்சர் குய்யகர்வீணைவிஞ்சையர்கின்னரரிறைஞ்சப், பொருவருஞ்சிறப்பின்வடதிசைப்புரவு பூண்டரசியற்றினன்மாதோ.

(இ-பொ-ள்)

சொலற் கரியபெருமை பொருந்திய குரவங்கமழ் குழலம்மையும் திருவாப்புடையீசரும் ஆலயத்திற்சேர்ந்தருள இப்பால் வரங்களைக்கொடுக்க அதனாலுண்டாகிய மனமகிழ்ச்சியால் அளகைமாநகரில் குபேரமஹாராஜன்போய்ச்சேர்ந்து பெரிய செல்வத்திற்கரசனாகி இயக்கர் குய்யகர் வீணாகானஞ் செய்வதில் கைவல்ல வித்தியாதரர் கின்னரர் ஆகிய இவர்களெல்லாம்வணங்க ஒப்பில்லாத சிறப்புகளோடு வடதிசையைக்காத்து அரசாக்ஷிசெய்

தார் (எ-று) மாதோ அசை ௩௨

### வேறு.

ஆயுமுனிமகனளகையதிபதியாயகதையிதையிதயநெகிழ்தர
வாயின்மொழிபவரிதழிவரைபவர்மாசில்செவிவழி யுநகிறுகர்
தீயகலியுகமருவுபவவினைதீர்வர்வறுமைகளொழிவாகுபமய (பவர்
நேயநிதிதனிபெறுவருவமையி னீடுசிவபுரியடைவர்சரதமே

(இ-பொ-ள.)

சாஸ்திரங்களை யாய்ந்த விச்சிரவசுஎன்ற முனிவர் புத்திரனுகிய வைச்சிரவணன் அளகைமாநகரத்திற்குமஹாராஜாவாகிய இச்சரித்திரத்தை மனங்குழைய வாயாற் பிறருக்குச் சொல்பவரும் ஏடுகளில் எழுதுகின்றவர்களும் குற்றமற்ற அதனை அன்போடும் காதாற் கேட்போர்களும் கொடிய இக்கலி யுகத்திற் பொருந்திய பாவவினைகளினின்று நீங்குவார்கள் தரித்திரங்களினுல் வருந்தார்கள் மங்களகரமான யாவரு மிச்சிக்கத்தக்க செல்வத்தை மிகவும் அடைவார் ஒப்பில்லாத பெருமைபொருந்திய சிவலோகத்தை அடைவார் இதுசத்தியமேயாம் (எ-று) ௩௩

## குபேரச்சருக்க முற்றிற்று.

---

## ஆக திருவிருத்தம். ௪௪௪.

# சுதரிசனச்சருக்கம்

—:o:—

புனிதமார்நயிமிசத்தருந்தவர்புகழ்ந்துகிலகபுரேசனும்
வனிதைநாயகியுநிதிபதிக்குநல்வரங்கொடுத்தவிதிகாசமீ
தினிதுகூறினையெனச்சிறந்தபதினெண்புராண முனியெம்பிரான்
கனியிஞேடுமமுதங்கலந்தனையகதையினென்றுபகர்வானரோ.

(இ-பொ-ள)

பரிசுத்தமான நைமிசாரண்யத்திலுள்ள மஹரிஷிகள் குதி

புராணிகரைப்பாராட்டிப்புகழ்ந்து சுவாமி திருவாப்புடையீசரும் உமாதேவியாகிய குரவங்கமழ்குழலம்மையும் குபேரனுக்கு நல்ல வரங்களைக்கொடுத்தருளிய சரிதமாகிய இதை அடியேங்கட்கு நன்றாய்த்திருவாய்மலர்ந்தருளினீரென்று சொல்லவும் அது கேட்ட பதினெண்புராணங்களிலும் வல்ல எமது தலைவராகிய சூத புராணிகர் பின்னரும் நன்றாய்க்கனிந்த பழத்துடனே பாலையுங் கூட்டினாற் போன்ற வோர்திவ்விய சரித்திரத்தைத் திருவாய்மலர்ந்தருள்வாராயினர் (எ-று) அரோ அசை க

வேதவித்தனையவிப்பிரேசர்புரிவேதிமேகலைசெய்வேள்வியு
நாதமிக்ககிடையும்புராணநவினன்னதித்துறையுமுபநிடப்
போதமுற்றவர்மடங்கணந்தனவனங்களும்பொதுளியாவருங்
காதலிப்பவுளதஞ்சமூர்பெரியகஞ்சனூர்பொருவுகஞ்சனூர்

(இ-பொ-ள)

வேதங்களுக்கு வித்துப்போன்ற பிராமணர்கள் செய்கின்ற மேகலைசூழ்ந்த திண்ணையையுடைய யாகசண்டமும் சப்தமிகுந்த வேதாத்தியயனஞ் செய்யும் பள்ளிக்கூடங்களும் சிவபுராணங்களைப்பிறர் கேட்கப்பிரசங்கித்துக் கொண்டிருக்கும் நல்ல நதிதீரங்களும் வேதசிரசாகிய உபநிஷத்துக்களின ஞானார்த்தங்களையறிந்தபெரியோர்வசிக்கும் திருமடங்களும் திருநந்தனவனங்களும் நெருங்கிய யாவரும் இச்சிக்கத்தக்க அன்னதானத்தை வசனமாகக்கொண்டு செல்லும் விசாலமாகிய தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமதேவருடைய சத்தியலோகத்தை யொத்த கஞ்சனூர் என்று நகரம் ஒன்று இருக்கின்றது (எ-று) உ

ஆயனிறைந்ததிரணதிமூன்றநிகழுந்தவூரவதரித்துளா
ருயாகுலத்தரின்முனைவிலுமுத்தமருயாந்துளாரினுமுயர்ந்துளார்
நயனநெற்றியர்தமனசரிற்றலைமைநண்ணினாரருள்செய்கண்ணி
னூரியனிரம்புதிருமேனிமேனிலவெறிக்குநீற்றொளிபழுத்துளார்.

(இ-பொ-ள)

ஜலம் திரணம் காஷ்டம் என்றமூன்றும் பக்கங்களிலெல்லாம் நிறைந்து விளங்கும் அந்தக்கஞ்சனூரில் அவதரித்தவர் பிராமண குலத்தவர்களுள் சிலாக்யமாகச் சொல்லுகின்ற உத்தமர்களாகிய பெரியோர்கள் யாரினும் மிகப்பெரியவர் நெற்றிநேத்திரத்தை யுடைய சிவபெருமானன்பர்களில் முதன்மையானவர் யாரிடத்தும் இரக்கமானபார்வையையுடையவர் அழகுநிறைந்த தமது தேகத்தில் பிரகாசம் வீசும் திருவெண்ணீற்றொளி முதிர்ந்தவர் ௩
(எ-று)

அண்ணல்கண்மணிசிரங்களங்குளமுகையாகமுற்றவு மணிந்துளா
ரெண்ணிலாதசிவநாமமோதியரனர்ச்சனைத்தொழி லியற்றுவார்
மண்ணினூடிகடல்மலைமரங்கொடிமனிதர்புள்விருகமாதியாப்
கண்ணினூடுதெரிபொருளியாவுநிறை சிவமெனப்பரவு காட்சி
யார்.

(இ-பொ-ள)

உருத்திராக்ஷங்களைச்சிரசுகழுத்துகாது கையாகிய சரீரஇடங்களினெல்லாந்தரித்தவர் அளவில்லாத சிவநாமங்களைச் சொல்லிச் சிவபூசையைச்செய்பவர் இப்பூமியிலுள்ள சமுத்திரம் மலை மரம்கொடி மனிதர் பக்ஷிகள் மிருகங்கள் ஆகிய இவைமுதலான கண்ணிற்றோன்றுகின்ற எல்லாவஸ்துக்களையும் எங்கு நிறைந்த சிவமாகவே காணுங் காக்ஷியையுடையவர் (எ-று) ௬

ஈறிலாதசிவனேபரம்பொருளிதற்கொரையமிலையிலையெனத்
தேறினார்கவலைமாறினார்விமலர்சேவடிக்குள்மனம்வைத்தினைப்
பாறினார்வினையுறாறினார்பரமனஞ்செழுத்தின்மணிநாத்தழும்
பேறினார்சுதரிசனரெனப்புவியிசைசகுநற்பெயரிசைந்துளார்.

(இ-பொ-ள)

என்றும் முடிவில்லாத சிவபெருமானே எவைக்கு மேலான பரவஸ்து இதற்கு யாதொருசந்தேகமுமில்லை யில்லை யென்று தெளிந்தவர் கவலைகளெல்லாமில்லாதவர் மலரகிதரான சிவபெருமானது திருவடிகளினிடமாக மனதைப்பதித்துச் சிரமபரிபாலனமானவர் வினைகள்யாவுமில்லாதவர் ஸ்ரீ சிவபெருமானது திருவுருவாய் விளங்கும் பஞ்சக்ஷரத்தைச் செபித்தலினாலே நாத்தழும் பேறியவர் சுதரிசனரென்ற இப்பூமியிலுள்ளார் சொல்லும் பெயரையுடையவர் (எ-று) ௭

நீதிவைதிகசைவத்தவப்பயிர்நிலத்திலேற்றியவர்நிகழுநாட்
சேதிமெய்யாசிவதீர்த்தயாத்திரை தொடங்கியன் பொடுநடந்து
சேர்,பாதமெய்யினொருமாதிருந்தவர்தலங்களபற்பலபணிந்தவ
ர்,சாதிசைவகுலதெய்வமானபரனப்பனூரணிியமருதாள்,

(இ-பொ-ள)

வைதிகமார்க்கம் சைவமார்க்க மென்னும் தவப்பயிரை இப்

பூமியில் விருத்திசெய்த அச்சுதரிசனரென்னும் பிராமணேத்த
மர் இருக்குங்காலத்தில் பரஞ்சோதிசொரூபராகிய சிவபெருமா
னது புண்ணியதீர்த்தயாத்திரை செய்யத்தொடங்கி மனக்கனி
வோடு நடந்து சென்று சிவந்ததிருமேனியினொரு பாகத்தில் உமா
தேவியை வைத்திருப்பவராகிய பரமசிவனெழுந்தருளும் அனே
க சிவஸ்தலங்களிற் சென்று சுவாமியை வணங்கி கடைசியாக
ஆதிசைவப்பிராமணாது குலதெய்வமாகிய திருவாப்புடையீசர்
வீற்றிருந்தருளும் திருவாப்பனூரைவந்து சேர்ந்து வாசஞ்செய்
து கொண்டிருக்கு நாளில் (எ-று) ௬

திருமதந்திமடுநீர்படிந்ததயசந்திதர்ப்பணமுயன்றெழீஇக்
கரையிருந்துதிருநீறணிந்துதிகழ்கண்டிபூண்டுயர்கடன்கழீஇப்
படையிகந்தசிவமானதப்பொருவில்பூசையாற்றியணியாப்பனூர்ப்
பரனிருந்தசிகரமடைந்துவலம்வந்துகந்தெதிர்பணிந்தரோ.

(இ-பொ-ள)

புண்ணிய சொரூபமாகிய நந்திதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்
து உதயகாலத்திற்செய்யவேண்டிய தர்ப்பணாதிகளைச்செய்து எ
ழுந்து அந்நந்திதீர்த்தத்தின் கரையிலிருந்துகொண்டு திருவெண்
ணீற்றைத்தரித்து விளங்குகின்ற உருத்திராக்ஷமாலிகையை யணி
ந்து மேன்மையாகிய நித்தியகர்மானுஷ்டானங்களை முடித்துச்சிவ
பெருமானைக்குற்றமற மானசீகமாய்ப்பூசித்து அழகிய திருவா
ப்புடையீசர் வீற்றிருந்தருளும் திருக்கோவிலிற்சென்று பிரதக்ஷி
ணஞ்செய்து மனமகிழ்ந்து சந்நிதானத்தில் நமஸ்காரஞ் செய்து
(எ-று) அரோ அசை எ

சாந்தநீற்றர் சிவகிலேசர்மகிழ்சன்னிதான மெதிர்நின்றுவே
தாந்தநற்றுதிபுகன்றுபின்குரவவார்குழற்கவுரிதன்னையும், போந்
துபத்திமைபழுத்தநெஞ்சொடு புகழ்ந்துபோற்றி மறிமான்மழு,
வேந்துகைத்தலர்தளிக்குண்மீளவுநொய்தெய்தினர் திருமுன்வை
கினர்.

(இ-பொ-ள)

சாந்தமான திருவெண்ணீற்றையுத்தூளனஞ் செய்ததிருமே
னியையுடைய யாவர்க்குநன்மையைக்கொடுக்கும் திருவாப்புடை
யீசர் திருவுளமகிழ்ந்தவீற்றிருக்கும் சந்நிதானத்தின் முன்நின்
றுகொண்டு வேதாந்தமாகிய நல்ல ஸ்தோத்திரங்களைச்சொல்லி

ப்பின் நீண்டகாலங்கமழ்குழலம்மையையும் சந்நிதானத்திற்சென்று பக்திமேலீட்டால் நெஞ்சோடுதுதிசெய்து வணங்கி மானையுமழுவையுந்தரித்ததிருக்கரங்களையுடைய திருவாப்புடையீசர்கோயிலுள் மீண்டும் சீக்கிரமாகச் சென்றவராய்ச் சந்நிதானத்தின் ௮
முன்னேயிருந்தார் (எ-று)

ஆதியைத்தனதகத்திருத்தியசைவற்றிருந்துபரவசமடைந்
தூரியப்பரமசுகமாலயமதற்றிறந்தபொழுதுணர்கிலா
தேதமற்றதொருதம்பமாமெனவிசைந்தயோகினர்விழித்தனர்
தீதகற்றுதிருவத்தயாமவளையாதல்கண்டுதெரிசித்தனரா.

(இ-பொ-ள)

முதல்வராகிய பரமசிவனைத்தனது மனதிலெழுந்தருளச்செய்து சலனமின்றியிருந்து பரவசமடைந்து அதனாற்பெறும் இலயமாகிய பிர்மானந்தசுகத்தையடைய மனமொடுங்கி யாதொன்றையும் பற்றியறியாமல் குற்றமற்ற ஒரு ஸ்தம்பம்போலப்பொருந்திய ஸ்வானுபூதிநிஷ்டைகூடியிருந்த அச்சுதரிசனர் நிஷ்டைதெளிந்து விழித்துப்பார்த்தார் அப்போது குற்றங்கள் யாவற்றையும் போக்குகின்ற அர்த்தஜாமகாலமாகும் சமயந்தெரிந்து தெரிசன ௯
ஞ்செய்து (எ-று) அரோ அசை

வளைசெய்தற்சிகரிவாயினீங்கிவெளிவந்துபார்த்தபொழுதங்
கு, மறையசைத்தபரனஞ்செழுத்தையவனையபணாச்சிவனையவம
தித், துரைசெய்மக்கள்பவவினையெனக்குழுமியோவியோவியெரி
கடரும்வாய்ச், கருநிறக்கழுதுபவழிநடப்பரியககுல்கண்டு தனி
திறைறனர்.

(இ-பொ-ள)

மலைபோல்விளங்குகின்ற நல்ல திருக்கோபுர வாயிலினின்று நீங்கி வெளியில் வந்துபார்த்தகாலத்தில் சர்ப்பத்தைக் கச்சாகத் திருவரையிற்கட்டியருளிய சிவபெருமானது திருவுருவமாய் விளங்கும் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தையும் அச்சிவபெருமானது திருவடிக்கே பக்திபூணடொழுகும் மெய்யடியார்களையும் சிவபெருமானையும் அவமதித்து இகழ்ந்துபேசும் மாக்கள் பாவகர்மத்தைப்போலக்கூடிவிடும் விட்டுப்பிரகாசிக்கின்ற அக்கினிபொருந்திய வாயையுடைய கரியபைசாசமுங்கூட வழிநடத்தற்கரிய இருட்டை

யைப்பார்த்து தனியாக அங்கேநின்றார் (எ-று) ௧௦

நின்றபோம்வழி மயங்கினா னுறநிவந்தகோபுர நிலக்கண்வந்,தொன் றியாவர்துணைபோதுவாரெனவுளத்திலுன்னினரவ் வெல்லைவா, யென்றுமன்பர் செல்வழிக்குநற்றுணையெனப் புகுந்தருமாப்ப னூர்க், குன்றவார்சிலையனெம்பிரான்றனது கோயில்காவலனின் மேவுவான்.

(இ-பொ-ள)

நின்றுகொண்டு தம்வீட்டிற்குப்போகும் வழிதெரியாமல் மயக்கமடைந்து ஆகாயத்தை அளாவிய உன்னதமான கோபுரவாயிலிலே மீண்டும்வந்து சேர்ந்து யார்நமக்கு இப்போது சகாயமாக வருவார் என்று மனதிலே நினைத்தார் அந்தச்சமயத்தில் எப்போதும் தமது மெய்யடியார் ஒழுகும் மார்க்கத்துக்குநல்ல துணையாகச்சென்று கைகொடுக்கின்ற மகாமேருவைவில்லாக வளைத்துத் தரித்தவராகிய திருவாப்பனூரில் எழுந்தருளிவிளங்கும் எமது கடவுளாகிய திருவாப்புடையீசர் தம்முடைய ஆலயத்தில் காவலாயுள்ள சேவகனைப்போல வருவார் (எ-று) ௧௧

வேறு.

காண்மதக்களிற்றி னுரியெனக்கருங்கஞ்சுகந்தரித்தேநீர்ச், சூன் மழைக்கிடைவெளிப்படாமின்னின்வாளுறையுகத்தோடுங்கி, மான் மழுப்படைகரந்தகைத்தலஞ்சிலைவாளி தொட்டிமையோர்தங் கோனமலர்ப்பதம்புவிதொடுமொலியெழக்கோயிலின்புறம்போந் தான்.

(இ-பொ-ள)

மதஜலத்தைக்கக்குகின்ற யானையைப்பிளந்து அதன்தோலைத்தரித்ததுபோலக் கருஞ்சட்டையொன்று சரீரத்திலணிந்து சமுத்திர நீரையுண்டு அதனால் கர்ப்பமடைந்த மேகத்தினிடையிற்றோன்றுத மின்னலைப்போல வாளாயுதத்தை யுறையிலே போட்டபடியே தோளில் தொங்கவிட்டுக்கொண்டு மானையும் மழுவாயுதத்தையும் மறைத்தகையிலே வில்லையும் அம்பையும் பிடித்துக்கொண்டு மகாதேவராகிய திருவாப்புடையீசர் தமது தாமரை ம

லர்போன்றதிருவடிகள் பூமியிலே தோயும்படி நடப்பதாலுண்டாகும் சப்தங்கேட்கும்படி திருக்கோயிலின் வெளியே வந்தார் (எ-று) கஉ

யார்வர்போமவரெனமறைமுனிவாளழுந்தலும்யானையா
தேவதேவர்சங்கோயில்காவலன்பெயரசெப்புவர்சிவனென்
றேவுஞசநீரெங்கிருந்தெங்ஙனமுறுதிரென்றலுங்கோயின்
மேவிநாதனைவணங்கிமனில்புகவேண்டிநின்றனனென்றார்,

(இ-பொ-ள)

வேதங்களையுணர்ந்த அச்சுதரிசனரென்ற பிராமணர் அங்கே போகிறவர்யாரென்று கூப்பிடவும் சுவாமீ நான் மஹாதேவராகிய இந்திருவாப்புடையீசரது திருக்கோயிலைக்காத்துக் கொண்டிருக்கிறவன் எனக்குப்பெயர் சிவன் என்று சொல்லுவார்கள் இங்கேநிற்கிறநீர் எங்கேயிருந்து எங்கேவருகின்றீர் என்றுகேட்கவும் நான்கோயிலுக்கு வந்து சர்வலோகைகநாயகராகிய திருவாப்புடையீசரைத்தெரிசனஞ் செய்தேன் இப்போது வீட்டிற்குப்போக வேண்டிநிற்கிறேன் என்று சொன்னார் எ-று) கங

என்றலுந்திருமாளிகைகாறும்யானிருள்வழித்துணைச்செல்வே
னின்றநீரினிவருதிரென்றேகவுமணங்கிழ்மணத்தவர்பின்போய்
மன்றன்மாமனையடைதலுமந்தணீமனைபிதுசெலும்யானனென்
முன்றிலார்மனைநீகருவனெனவரன் மொழிபமறவர் சொல்வார்.

(இ-பொ-ள)

என்றிவ்வாறு கூறியவளவில் சுவாமீ நான் உமதுவீடுவரையில் இவ்விருளில்துணையாய் வருகிறேன் ஆதலால் நிற்கிறதேவரீர் இனிவாரும் என்றுசொல்லி முன்னேபோகவும் அவர்பின்னே சுதரிசனனென்ற பிராம்மணோத்தமர் மனக்குளமழவோடுஞ் சென்று மங்கலகரமான வீடுவந்து சேர்ந்தவுடனே சுவாமீ இதுதான் உம்முடையவீடு உள்ளேபோம் நான் என்னுடைய முற்றமபொருந்திய வீட்டிற்குப்போகிறேன் என்று சிவன்சொல்ல அச்சுதரிசனர் என்ற பிராமணர் சொல்வார் (எ-று) மற்று அசை கச

இம்மனைப்புறவெங்கையிருந்திய னினிதமுதபன்றப்பாற்

பொம்மனற்சுவையடிசிலுய்ப்பேனுண்டுபோதியாலெனத்தாழா
செம்மலிற்கிடையாட்டியும்புதல்வருங்கேதேவரெனேழுடு
மைம்முகத்தபாலுளிருளாயதென்மனைப்படர்வேனென்றான்.

(இ-பொ-ள)

இவ்வீட்டின் புறத்திலுள்ள திண்ணையிலிருப்பாய் நான் இனி
தாகிய அன்னத்தை உண்டு பின் உனக்கும் பொலிவாகிய மதுர
மான சாதம் இடுகிறேன் அதையுண்டுபோவாய் என்று சொல்ல
அதைக்கேட்டுத்தாழ்ந்து பெருமையிற் சிறந்த சிவபெருமானை
சேவகர் சுவாமீ என்னை என்வீட்டிலுள்ள மனைவியும் புத்திரர்க
ளும் தேடுவார்கள் எங்கும் பரவிய இருள்நிறைந்த டாதிராத்திரி
யாயிற்று ஆதலால் நான் என்னுடையவீட்டிற்குப் போகிறேன் எ
ன்று சொன்னன் (எ-று) ஆல் அசை கரு

சந்தநான்மறைவேதியர்கணமினித்தாழ்த்தியோதனமேனு
மிந்தவேலையாந்தருதுநின்னில்லிடையேகிமறறயிலென்னு
வெந்தகாய்கறிவருக்கமும்பருப்புநெய்விட்டுறப்பிசைசோறுந்
தந்துபாலனஞ்சருக்கரையொடுநிறைதரக்கொடுத்தனரன்றே.

(இ-பொ-ள)

இசைபொருந்திய நான்குவேதங்களையுமோதி யுணர்ந்தசுத
சனரென்னும் அப்பிராமணர் காவலனைப்பார்த்து நீ நான் போச
னஞ்செய்து வரும்வரையும் பொறுக்காவிடினும் ஒருக்ஷணநேர
ம் தாமதித்திரு இப்போது அன்னமாவது கொடுக்கிறேன் . அதையு
ன் வீட்டிற்கொண்டுபோய் உண்பாய்என்று உள்ளேபோய் பககுவ
ஞ்செய்த பதார்த்த வகைகளும் பருப்பும் நெய்யும் சேர்த்துப் பி
சைந்திருக்கிற அமுதம்கொடுத்துப்பாலோடு கூடிய அன்னத்தை
ச்சர்க்கரையுடனே நன்றாய்திருப்தியாகும் வண்ணம் கொண்டுவ
ந்து கொடுத்தார் (எ-று) (மற்று அன்று வ அசை; கசு

இற்சென்றும்பலிக்குழல் பவர்தாழ்ப்பரோவிருகையும் விரித்தேந்தி
ப், பெற்றிதெனபெண்டீர்சேய்களுமுண்டெனத்தரும் பெட்டியிற்
சுமந்தேக, மற்றிருந்தனறகோயில் புக்கயின்றணிமண்டபம் பலி
பீட முற்றநன்கறிவருக்கமுமடிசிலுமுழுநிறைத்தனர்மாத்தர,

(இ-பொ-ள.)

தாருகாவனத்து ரிஷிபத்தினிகள் ஆச்சிரமத்திலும் சுந்தரமூர்த்திசுவாமிகளுக்காகத் திருக்கச்சூர் என்னும் ஸ்தலத்தில் வீடுகள்தோறுஞ்சென்று பிக்ஷைவாங்கியுழன்றவர் இதற்குப்பின்வாங்குவாரா இல்லை ஆதலால் தம்மிருகரங்களையும் விரித்துத் தாங்கிப்பெற்று இவ்வமுது எனக்கேயன்றி என் மனைவி பிள்ளைகளுக்கும் போதும் என்றுசொல்லி அவர் கொடுத்தபெட்டியோடும் சுமந்துசென்று தாமெழுந்தருளியிருக்கும் திருக்கோயிலை யடைந்து திருவமுதுசெய்து பின் அழகிய மண்டபங்களிலும் பலிபீடத்திலும் எங்கும் நல்லகறிவகைகளையும் அன்னத்தையும் முழுவதும் இறைத்தார் (எ-று) (மற்று மாதோ அசை) கஎ

வேறு.

பின்னர்முன்னன்னங்காணாப்பிறைத்திருமுடிமேலெஞ்சு
மன்னம்வீற்றிருகக வைத்தாங்கதுகொணர்பெட்டிஞாங்கர்
தன்னருகிருகதிந்த தன்சயம்புவிலுறைந்தானுகத்
துன்னிருள்புலருங்காலைத்தொடர்பரிசனங்களீண்டி.

(இ-பொ-ள)

அதன்பின் முற்காலத்தில் பிரமதேவராகிய அன்னப்பக்ஷியால் காணப்பெறாத மூன்றாம்பிறையைத்தரித்த தமது திருமுடியின் மேலே மிஞ்சியிருந்த அன்னத்தைப்பொருந்தியிருக்கும்படி வைத்து அந்த அன்னத்தைக்கொண்டுவந்த பெட்டியைப் பக்கத்தில் சமீபத்திலே வைத்து எப்பொருட்குமிறைவராகிய பரமசிவன் அச்சுயம்புலிங்கமூர்த்தத்திலே அந்தர்த்தானமாயினர் பின்பு மிகநிறைத்திருந்த இருள் நீங்கிவிடியும் சமயத்தில் தொடர்ச்சியாய் வரும் அடியார்கூட்டங்கள்நெருங்கி (எ-று) கஅ

தினகரம்புகுந்துதேவர்தேவனைத்தெரிசித்தேத்த
மனநெகிழ்ந்துநகியாங்குவருதலுமுன்றிலெங்கும்
புனைகறிவருக்கமொய்ப்பப்பொருந்துமோதனங்கண்டியாவர்
வினையிதுவென்னுவஞ்சிமிச்சிலென்றகலவேகி.

(இ-பொ-ள.)

திருக்கோயிலுட்சென்று மஹாதேவராகிய திருவாப்புடையீ

சனாத்தெரிசனஞ்செய்து துதிக்கபணமுருகிக்கரைந்து அவ்விடத்து வந்தபோது திருக்கோயிலின் பற்பசங்கள் முதலிய எங்கும் பதார்த்தவகைகளும் அன்னமும் இறைந்து கிடப்பதைப்பார்த்து இது யார்செய்த செய்கை என்று பயந்து எச்சிலென்று விலகிப் போய் (எ-று) ௧௯

வின்கருப் பொனிற்செய் பூட்டுவித்திருஞ்சதவு நீக்கி
யுள்புகச்சொரறியாங்குமிறைத்திருப்பதுகண்டோர்த்திக்
கள்வரியாரென்னசகண்ணீர்கலுழ்ந்தரனமுன்னரேக
உள்ளறவை சென்னிமேலுமற்றவையிருப்பக்கண்டார்.

(இ-பொ-ளா)

திறக்கக்கூடிய இரும்பாற்செய்யப்பெற்ற பூட்டைதிறந்து பின் பெரிய கதவு யுந்திறந்து உள்ளேபோக அவ்விடத்திலும் அன்னமிறைந்து கிடப்பதைப்பார்த்து யோசித்து இப்படிச்செய்த கள்ளர் யாரென்று கண்ணீர்விட்டழுது திருவாப்புடையீசர் சந்நிதானத்திற் போகவேண்டியார்க்கு வேண்டிய வைகளையீந்தருளும் வல்லவராகிய சிவலிங்கப்பெருமானது திருமுடியின்மேலும் சாதமுங் கறிகளுமிருப்பக் கண்டார்கள் எ-று) ௨௦

உச்சிட்டமிசனையொன்றமுள்கில தஞ்சாகம்பொன்
கச்சிட்டமூலையாள்பாகனைசத்திர்த்திருமுடியின்மேலும்
வைச்சிட்டதெனவெலந்தோவர்தவாறென்றேவென்று
மெய்ச்சிட்டர் திடாருக்கவருவிருநருகிறுால்.

(இ-பொ-ளா)

எச்சிலென்கிற விஷயத்தைக் கொஞ்சமும் நினையாமலும் அச்சங்கொள்ளாமலும் அழகிய பொற்குடமான கச்சறகிய ஸ்தனங்களையுடைய உமாதேவியினது பாகராகிய சிவபெருமானது சோதிர்மயமான திருமுடியிலேயும் வைத்தது என்ன ஐயா இது வந்தவிதம் எப்படியோ என்று உள்ளமுடைந்த பெரியார் முதலிய யாவரும் பயந்தார் பலவகைகரைந்தார் [எ-று] ஆக அ௯௪ ௨௧

அச்செயலைக்கோயிலைக்குமகுர்தவேழ்புரிசெயமாக
ளிச்செயல்புரிதாரயாவரெனச்சிறைதருகிவாய்த
னமைச்சருமேனாதிபாசனைடந்துபடப்பெரியோர்தமமை
நிச்சயித்துவாயினெனைஞர்நத்தியர்த்தவேதாரணனைஞர்.

அந்தச்செய்கையைப்பார்த்துக் கோயிலில் மேல்விசாரணைக் கர்த்தர்கள் இக்கொடியசெய்கையைச்செய்தவர் யாரென்று கோபமடைந்து நீண்டகரிய சுருண்டகூந்தலையுடைய உமாதேவியின பாகராகிய பரமசிவன் வீற்றிருந்தருளும் திருக்கோயிலில் வருகின்ற பெரியோர்களைக் கோயிலதிகாரிகள் இதை நிச்சயஞ்செய்து சொல்லுங்களென்று தடுத்து நிறுத்தினார்கள் அதற்கு அப்பெரியோர் (எ-று) உஉ

முத்திரையிருப்பப்பூட்டுமுறிபடாதிருப்பவுள்புக்
கத்தமண்டபமுமிச்சிலன்னமாங்காங்குச்சிந்திக்
குத்திரக்களவுமின்றிக் குறிதிசைச்சொன்றியாகருஞ்
சித்திரமிதனையொன்றுந்தெளிகிலம்யாகமென்றார்.

(இ-பொ-ள)

வைத்தமுத்திரையும் கெடாமலிருக்க பூட்டும் உடையாமலிருக்க உள்ளேபோய் அர்த்தமண்டபத்திலும் மற்ற இடங்களிலும் எச்சிலன்னத்தை யங்கங்கேயும் இறைத்து வஞ்சகத்தன்மையொருந்திய களவுமில்லாமல் சிவலிங்கப்பெருமான்மீது சாதத்தை யிறைத்திருக்கும் இந்த அதிசயம் ஒன்றும் இன்னதென்று எங்களுக்குத்தெரியவில்லை யென்று சொன்னார்கள் (எ-று) உங

பின்னுமுட்காப்புங்கோயிற் பெரும்புறக்காப்புமேற்கொண்
டுன்னருந்தொழில்செய்வாரையுறுந்தண்டமிழைப்பவேவலிட்
டனைவராற்றிமாயமறிகிலமென்னவையுற்
றென்னிதுநடந்தவாவென்றுசாவியாங்கிருக்கும்வேலை.

(இ-பொ-ரை)

அதன்பிறகும் திருக்கோயிலின் உட்காவலையும் பெரியபுறக்காவலையு மேற்கொண்டு நினைத்தற்கரிய பணிவிடைசெய்யும் வேலைக்காரர்களைத்தண்டிக்க அதனையாற்றாது அவர்கள் கூச்சலிட்டு அழுது இது மாயமாயிருக்கிறது எங்களுக்கொன்றுந் தெரியாது என்றுசொல்ல யாவரும் சந்தேகமடைந்து ஆனாலிது நடந்தது தான் எப்படி யென்று ஆராய்ந்து கொண்டிருக்குமச்சமயத்தில் (எ-று) உச

சிவமுணர்புனிதராஞ்சுதரிசனமறையோர்காலைத்
தவந்யதியினைமுற்றித்தக்கபாதலத்தினின்று

மவனியிற்றோன்றுஞ்சோதியன்னவிநோதநாத
னவமலர்க்கழல்கண்டேத்தநற்றளியகத்துள்வந்தார்.

(இ-பொ-ள)

சச்சிதானந்தசொருபமாகிய சிவத்தையுள்ளவாறே யுணர்ந்
த பரிசுத்தராகிய சுதரிசனரென்னும் பிராமணர் மேன்மைபொ
ருந்திய காலையிற்செய்யவேண்டிய நித்தியகர்மானுஷ்டானங்களை
முடித்துக்கொண்டு பாதாளலோகத்தினின்றும் ஊடுருவிப்பூமியி
ற்றோன்றியருளிய பரஞ்சோதிசொரூபரான அன்னவிநோதமூர்த்
தியினது புதிதான திருவடித்தாமரைகளைத் தெரிசித்துத் துதிக்க
த்திருக்கோயிலுள்ளேவந்தார் (எ-று) ௨௫

வருதலுநடந்தவண்ணங்கேட்டுளம்வருந்திமாழ்கி
யுருகினர்பதைத்துளெய்திநோக்கினருளத்தாசங்கை
பெருகினர்குறிப்பினாற்றம்பெட்டிவெஞ்சனஞ்சோறென்னுங்
கருகிருளிடைநேற்றுற்றகாரணந்தெரியக்கூறி.

(இ-பொ-ள)

அவ்வாறு வரவும் நடந்தசெய்தியைக் கேள்வியுற்று மனம்
நொந்துமயங்கிக்கரைந்தவராகிப் பதைபதைத்துஉள்ளேபோய்ப்
பார்த்தார் உடனே மனதிலே சந்தேகமடைந்தார் குறிப்பினாலே
தம்வீட்டிருந்த பெட்டியும் பதார்த்தங்களும் அன்னமுந்தானிது
என்றறிந்து நேற்றையத்தினத்தில் மிகக்கறுத்த இருள் நிரம்பிய
இராத்திரியில் நடந்த காரணத்தையாவர்க்குந் தெரியும்படி சொ
ல்லி (எ-று) ௨௬

அந்தணர்சிவனென்னுமவனையிங்கழைமினென்றார்
மந்திரக்காவல்பூண்டோன்வந்தெதிர்வணங்கவந்த
தந்திரமொழியென்னத்தளர்ந்துவாய்புலர்ந்துகம்பித்
தித்திரசாலமையவிம்மொழியெனத்தாழ்ந்தானால்.

(இ-பொ-ள.)

பின்னும் அச்சுதரிசனரென்னும் பிராமணர் சிவனென்னு
ம்பெயரையுடைய காவற்காரனையிங்குகூப்பிடுங்களென்று சொன்
னார் உடனேதிருக்கோயிற் காவற்காரனாகிய அச்சிவனென்பவன்
வந்து முன்னே பணிந்து நிற்க அவனைப்பார்த்து இப்போது நடந்
திருக்கிற சங்கதியையுள்ளபடி சொல்லாயென்று கேட்க அவன்

மனஞ்சோர்ந்து வாய்வாடி நடுநடுங்கிச் சுவாமீ இவ்வார்த்தை இந்திரஜாலவித்தைபோலிருக்கிறது என்றுசொல்லி வணங்கினான் (எ-று) உஎ

அங்கவன்முகத்தினோடுமகத்தியலுணர்ந்தியாரு
மிங்கிவன்செயலன்றன்பரிவர்பொருட்டாப்பனூர்நந்
திங்களஞ்சடையார்செய்ததிருவிளையாட்டீதெனனுத்
தங்களிற்றெளிர்தானந்தசாகரத்தமிழ்ந்தினாரால்.

(இ-பொ-ள)

அப்போது அக்காவற்காரனுடைய முகத்தின் தன்மையையும் மனத்தின்தன்மையையும் தெரிந்து யாவரும் ஐயா இங்கே நடந்திருக்கிற இச்செய்தியானது இக்காவற்காரன் செய்கையல்ல மெய்யன்பராகிய இச்சுதரிசனரென்னும் பிராமணோத்தமர் பொருட்டு நமது திருவாப்பனூரிலெழுந்தருளும் சந்திரனைத்தரித்த ஜடாமகுடத்தையுடைய திருவாப்புடையீசா செய்தருளிய திருவிளையாடல்தானிது வென்று தாங்களேதெரிந்து கொண்டு பேரானந்தப்பெருங்கடலில் மூழ்கினார்கள் (எ-று) (ஆல் அசை) உஅ

தஞ்சனேன்பொருட்டிவ்வண்ணந்தம்பிரான்புரிந்ததென்னுக்
கஞ்சனூர்முனிவர்கண்ணீர்க்கடலிடைக்குளித்தார்கோயி
லெஞ்சலிலடியார்கூடியரவொலியெழுப்பியேத்தி
யஞ்சலித்திறும்பூதெய்தியாடினார்பாடினாரால்.

(இ-பொ-ள)

ஒன்றுக்கும் பற்றாத சிறியேன் பொருட்டு இவ்வாறு திருவாப்புடையீசர் செய்ததுதான் இது என்று கஞ்சனூரில் அவதாரஞ் செய்த அப்பிராமணர் இரண்டுகண்களினின்றும் ஒழுகுகின்ற ஜலமாகிய சமுத்திரத்தில் மூழ்கினார் திருக்கோயிலிலுள்ள சிவனடியார்களெல்லாரும் ஹரஹரஎன்று சொல்லிச் சத்தமுண்டாக்கித்துதித்து அஞ்சலிசெய்து ஆச்சரியமடைந்து ஆனந்தக்கூத்தாடினார்கள் பாடினார்கள் (எ-று) (ஆல் அசை) உக

வேறு.

கஞ்சனூரில்வாழந்தணாளர்சேர் கங்குல்வாயநான்வந்துகாவலா

ப், நஞ்சமூர்கிரீயன்செல்காதைதா னம்பியோதுவோர்பம்புகேள்வியோர், நெஞ்சுனேதியானஞ்செய்மெய்ம்மையோர் நிந்நியாதசீர்தங்கிவாழ்வரும், விஞ்சுபாவநாசஞ்செய்திறலான் வெண்பொனீடுவேதண்டமேவுவார்.

(இ-பொ-ள்)

கஞ்சனூரில் அவதரித்து வாழ்ந்த பிராமணராகிய சுதரிசனர் மிக இருண்டு வழிதெரியாமல் மயங்கி நிற்கும்போது காளகண்டத்தையுடைய திருவாப்புடையீசர் அக்கோயிற் காவலாளியைப் போலவந்து அப்பிராமணருக்குத் துணையாய்ப்பின்சென்ற பெருமைபொருந்திய இச்சரிதத்திரத்தை மெய்நம்பிக்கையுடன் சொல்வோர்களும் அதைக்கேட்போர்களும் மனசினாலே தியானிப்பவர்களும் குற்றமற்ற சிறப்புத்தங்கிவாழ்வர் அன்றியும் ஊழ்வினையாலாகிய பாவவினைகளினின்றும் நீங்கி ஆதிமத்தியாந்த ரகிதராகிய ஸ்ரீ சிவபிரான் எழுந்தருளியிருக்கும் திருக்கைலாயமலையைச்சேர்ந்து பேரானந்தத்தோடிருப்பார் (எ-று) ௩௦

சுதரிசனச்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம். சஎச.

---

# அரிச்சந்திரன் தீர்த்தயாத்திரைச்சருக்கம்.

———:o:———

இன்னுமோர்கதையியம்புதுங்கேட்பவர்க்கென்றுந்
துன்னியாங்கெதிர்காலத்தினுறுவினை தாந்து
மன்னுமாப்புகழாயுகஞ் * செல்வமும் வழங்கி
முன்னுநன்கிதருமெனச்சூதனபின்மொழிவான்.

(இ-பொ-ள்)

இன்னும் ஒருதிவ்வியசரிததிரத்தைச் சொல்லுகிறேன் அதை கேட்பவர்களுக்கு எப்போதும் எதிர்காலத்தில் நெருங்கிவரும் ஆகாமியவினைகளை வரவொட்டாது தடுத்து நிலைபெற்றபெரிய கீர்

த்தியும் தீர்க்காயுசும் செல்வமும் ஆகிட இவற்றைக் கொடுத்து யாவருமதிக்கத்தக்க நலமோக்ஷத்தையும் கொடுக்கும் என்று பின் சூதபுராணிகர் சொல்லத்தொடங்கினார் (எ-று) க

பொதியவிழ்மலர்க்கவட்டிலையார்த்தடம்புயத்துக்
கதிரவன்குலக்கான்முளையாமயனமனுச்சந்
ததியெனத்தகுமரசர்களுறைதரச்சரயு
நதிவளத்தினிதமர்தருமயோத்திமா நகாம்.

(இ-பொ-ள)

சூரியகுலத்திலவதரித்த பிளந்த இலையையுடைய முறுக்கவிழ்ந்த திருவாத்திப்பூமாலையைத்தரித்த விசாலமான புஜத்தினையுடையவரும் பிரமனிடத்துண்டாகிய சுவாயம்புமனுச்சந்ததி யாருமிவர்களே யென்று சொல்லத்தகும் அரசர்கள் வசிக்கச்சரயுமாநதிவளப்பத்தினையுடையதாயின்பமுற விளங்குவது அயோத்திமா நகரம் (எ-று) உ

எம்முகந்தொறுஞ் சென்றுசென்றினிதுநோக்குறினு
மம்முகந்தொறுமலர்த்திருமகள்விளையாடுஞ்
செம்முகப்பெரு வாயிலுநியமமுஞ் செறிந்து
பைம்முகப்புவி மாதணிகலனெனப் பதிந்த.

(இ-பொ-ள)

எந்தத்திசையிற் சென்றினிமையாய்ப்பார்த்தாலும் அங்கங்கும் செந்தாமரைமலரில் வீற்றிருக்கும் ஸ்ரீதேவி நின்றானந்தமாய்க்கூத்தாடிக்கொண்டிருக்கும் செவ்வியமுகப்புகளையுடைய பெரியவாயில்களும் தெருக்களும் நெருங்கிப்பசிய இடமகன்ற பூமாதணிந்த ஆபரணம்போலப் பொருந்தியிருப்பது (எ-று) ௩

நெடுநகர்த்தரு நியதி†யின்பெரும்பணை நீட்டிப்
படர்மனைத்தழை பொதுளிநல்லணிமலர் பரப்பித்
தொடருமன்பதைப் புள்ளினறு கர்தரத் துதைந்து
வடுவிலாவண மெனுங்கனிபழுத்தசீர் வளத்த.

(இ-பொ-ள)

பெரிய இவ்வயோத்திமாநகரமாகிய ஒரு விருக்ஷமானது தெருக்களாகிய பெரியகிளைகளை விடுத்து நீட்டிப்பரவிய வீடுகளாகிய

இலைகள் செறியப்பெற்று நல்ல அலங்காரமாகிய புஷ்டங்களைப்பு ஷ்பித்து தொடர்ந்து வருகின்ற மனிதர்களாகிய பக்ஷிகள் உண்ண நெருங்கிக்குற்றமற்ற கடைகளாகிய பழங்கள் பழுத்திருக்கின்ற சிறந்த வளப்பத்தையுடையதாயிருக்கின்றது (எ-று) ச

வேறு.

பாவுநகர்க்கரசனறக் கடவுளருட்கட லுயிர்நன்பயிர்க்குமேக மிருபொருள்வைப்பிடம்பொறையி னுறையுள்சயமகளகோயிலிசை யின்மூர்த்தி, மருவிநிறைகுணசயில ம்நிவுவிளைநிலமிரவி மாயின் பொற்பூண்,கருதுமனுநூற்பொருள் மற்றயலரசர்புனைசிரசேகர மொப்பானேன்.

(இ-பொ-ள)

யாவராலும் புகழப்பெற்ற அவ்வயோத்திமா நகரத்திற்கு இராஜாவானவர் தருமதேவனதனய யொத்தவர் கிருபையிலே சமுத்திரம்போன்றவர் ஆன்மாக்களாகிய நல்ல பயிர்களுக்கு மேகம் போன்றவர் கல்விப்பொருள் செல்வப்பொருள் என்ற இரண்டையும் வைப்பதற்குரிய பெட்டிபோன்றவர் பொறுமையாகிய குணத்திற்கு இருப்பிடமாய்உள்ளவர் விஜய லெக்ஷுமி வீற்றிருக்கும் ஆலயமாயுள்ளவர் கீர்த் தியாகிய மூர்த்திகரமானது பொருந்தி நிறைந்த நற்குணத்திற்கு மலைபோன்றவர் அறிவாகிய நல்லபயிர் விளையும் விளைநிலமாயுள்ளவர் சூரிய குலத்திற்கு அழகிய பொன்னாலாகிய ஆபரணமாயுள்ளவர் யாவரும் மதிக்கத்தக்க மனு நீதிசாஸ்திரத்திற்குரிய அர்த்தமாயிருப்பவர் மற்றைய அரசர்கள் தரிக்கின்ற கிரீடத்தை நிகர்த்தவர் [எ-று] மற்று அசை ரு

தூங்காமையரணுடைமை படையுடைமைதணிவுடைமை தூய்மைகேண்மை,நீங்காமையறிவுடைமைநாணுடைமைபொறைமை புனைமைநெறிச்செலாமை, பூங்காமைமெனகொடுகரு கொடைமடமையிவைதழுவிப் புரவுபூண்டோன்,நீங்காமைவகைப்பயந்தீர்த்தாறகற்றியேற்றிலக்கோல செலுத்தா நின்றேன்.

(இ-பொ-ள)

இராஜதந்திரத்திற் சோர்வில்லாமையும் காவலுடைமையும்

இரதம் கெஜம் துரகம் பதாதி என்னு நால்வகைச்சேனைகளை யுடைமையும் நல்லறிவுடையவனுயிருத்தலும் நாணமுடைமையும் பொறுமையும் இழிந்தமார்க்கத்திற் செல்லாமையும் அழகிய கற்பகச்சோலை மேகம் என்ற இவைகளைப்போலக் கொடுத்தலிலே அறியாமையும் ஆகிய இந்நற்குணங்களையுடையவராய் குடிகளை யிரக்ஷிப்பவர் குற்றமாகிய ஐந்துவிதமான பயத்தையும் தீர்த்து அறுவகைக்குற்றங்களையு நீக்கி சப்த லோகங்களிலும் தமது செங்கோலைச்செலுத்து கின்றவர் (எ-று) கூ

கொடையிலறியாமையாவது தன்னிடத்து முன்னொரு பொருளையிரந்து பெற்றவர்தாமே பின்னரும் வந்து இரப்பினும் அவர்க்கு ஈதற்கண்ணே இவர் முன்னர்ப் பெற்றவரென உணராமையாம.

ஐவகைப்பயமாவன தான், தன்தமர், பகைவர், கள்வர் மிருகம்,ஆகிய இவ்வைந்திடத்தும்,உண்டாகும் அச்சம் என்பதாம், ஆறுகுற்றங்கள் காமம் குரோதம உலோபம் மோகம மதம், மாற்சரியம் என்பதாம்.

## வேறு.

செயிரில்கோசல நாட்டினும்பதியினுஞ் செறிந்து
துயரிலுல்வகைப் படையினுமமைச்சினுந் துளங்குற்
றயர்வில்கற்புடை மனையினுஞ்சேயினு மாகத்
துயிரினும்புகல் சத்தியம்புரபபதொன றுடையோன்.

(இ-பொ-ள)

குற்றமற்ற கோசலநாட்டிற்கும் அதிற்சிறந்த அயோத்திமாநகரத்திற்கும் நெருங்கியுள்ள யானை குதிரை தேர் காலாள் என்ற சதுரங்க சைனியங்களுக்கும் மந்திரித்துவத்திற்கும் கலங்கித்தளர்ச்சியுருத கற்புத்தன்மையையுடைய மனையாளுக்கும் புத்திரனுக்கும் தன்சரீரத்துள்ள ஆத்மாவுக்கும் ஆகிய இவைகட்கெல்லாம் ஒரு ஆபத்துவந்தாலும் சொல்லுகின்ற சத்தியத்திற்குமாத்திரம் யாதொரு ஆபத்தும் வாராமற்காத்தலாகிய ஒப்பற்றசற்குணத்தையுடையவர் (எ-று) எ

இவர்தருந்திருப் பெயரரிச்சந்திர னென்போ

னவனிருந்தர சியற்றுநாளலைகடல் குடித்த
தவனவணடைதலுங்கடைபுரப்பவன்சார்ந்தங்
கவனிகாவலற் குணர்த்தினன்விளாவினு மெழுந்தான்.

(இ-பொ-ரை)

இத்துணைப்பெருஞ் சிறப்பினையுடையவர் பெயர்அரிச்சந்திரனென்பதாம் இவ்வரிச்சந்திர மஹாராஜன சிம்மாசனத்திலிருந்திராச்சிய பரிபாலனஞ்செய்து வருநாளில் ஒருநாள் அலைகளையுடைய சமுத்திரங்களைப்பானஞ்செய்தருளிய தவசிரேஷ்டராகிய அகஸ்தியமஹரிஷியானவர் அங்கே எழுந்தருளிய மாத்திரத்தில் வாயிலில் காவல் செய்துகொண்டிருக்கும் காவலாளியானவன் இராஜனிருக்குமவ்விடத்திற்போய் அம்மஹாராஜாவுக்குத்தவசிரேஷ்டராகியஅகஸ்தியமஹரிஷியானவர் எழுந்தருளிவந்திருக்கிறசங்கதியைத் தெரிவித்தான் அதுகேட்ட அரசன அதிசீக்கிரமாயவ்விடத்தினின்றும் எழுந்திருந்தார். (எ-று) அ

நடந்தருக்கிய மாதியநன்புரோகிதாகொண்
டடைந்திடத்தமிழ் முனிவனைப்பூசனை யாற்றித்
தொடர்ந்தமெய்த்தவந் தீர்த்தநந்தனந்தருச் சூழல்
படர்ந்தபுன்முதல் வினவலுமருளொடும்பரா.

(இ-பொ-ரை)

அர்க்கியமுதலானவைகளைப்புரோகிதர்கள் கொண்டுவரநடந்துவந்துஅகஸ்தியமகா முனிவரைப் பூசனைசெய்து பணிந்து சுவாமீ தொடர்ச்சியாகச்செய்துவரும் உண்மையாகிய தபசும்தீர்த்தமும் திருநந்தனவனமும்விருக்ஷங்கள் நிறைந்த சோலைகளும் படரும் புல்முதலிய யாவும் க்ஷேமந்தானு வென்று வினவவும் அதுகேட்ட அம்மஹரிஷி கிருபையோடும் அரசனைப்பார்த்து. (எ-று) கூ

இனியநாடுநன் குடியும்பங்காறிலொன் றீந்த
துனியில்செம்பொருட்கோசமுமாண்படைத்தொகையுங்
கனியுமென் மொழி மகார்முதல்வினவியுட் சுரவின்
முனியும்வேந்துடன் முகமனன்கிருந்தெதிர் மொழிய.

(இ-பொ-ரை.)

இனியதாகியநாடும் அதிலுள்ள நல்லகுடிகளும் அக்குடிகளீந்த ஆறிலொருகடமையாகிய செவ்வியபொருள நிரப்பிவைத்திருக்கும் பொக்கிஷமும் ஆண்மையுடைய சேனைகளும் கனிவானமெல்லிய வார்த்தைகளையுடைய குழந்தைகளுமாகிய யாவும்க்ஷேமமாவென்று தாமும்விசாரித்து உள்ளேகள்ளமிலலாத அகஸ்தியமகாமுனிவர் அவ்வரிச்சந்திரமஹாராஜாவுடனே நன்றாயிருந்து

பிரியவசனங்களைச்சொல்லியருளவும் (எ-று) ம

இருகைகூப்பிநின்றிற்றைநாள்சாறும்யானிழைத்த
பரவுபூசனைவிரதநற்புண்ணியப்பயன்போற்
றெரிசனங்கொடுத்தெழுந்தருளினையிங்கண்சேர்ந்த
பரிசதென்னவைசெயுங்கருத்தெனக்கெனப்பகர்ந்தான்.

(இ-பொ-ரை)

இரண்டுகைகளையுங் கூப்பி நின்றுகொண்டு சுவாமீ இன்று வரையில் அடியேன் செய்த சிவபூசை விரதாதிகளாகிய நல்ல சிவபுண்ணியங்களின் பிரயோஜனத்தைப்போல அடியேனுக்குத் தெரிசனந் தர்தருளினீர் ஆகலால் இவ்விடத்திற்குத்தேவரீர் எழுந்தருளிவந்த தன்மையென்ன தேவரீர் என்ன திருவாய்மலர்ந்தருளுகிறீரோ அதையே செய்யும் கருத்துடையேன் என்று அரசன் சொன்னார் (எ-று) ௧௧

இனன்குலத்தவகேண்மதியெம்மிருக்கையில்யாங்
கனிதவத்தியானத்திருந்தருளுமக்காலை
நினதுசென்மநாளிராகுமேவவுநடுமபீடை
யுனைவருத்தவுங்கண்டவையுணர்ப்பவீங்குற்றேம்.

(இ-பொ-ரை)

சூரியகுலத்தரசனே கேட்பாயாக நமதாச்சிரமத்தில் நாம் மிகக்கனிந்த மனத்துடன் தியானஞ்செய்துகொண்டிருந்த அப்போது உன்னுடைய ஜன்மநக்ஷத்திரத்தில் இராகுவரவும் அதனால் நீ மிகத்துன்பமடைந்து வருந்தவும் பார்த்து அதைத்தெரிவிப்பதற்காக நாம் இங்கேவந்தோம் (எ-று) ௧௨

திருத்தயாத்திரைநீசெயிற்றீருநற்றினமும்
பொருத்தமுற்றநல்லோரையும்புகுந்ததப்பொழுதே
விருப்பிற்கடிதேகுதியெய்துநின்வேட்கை
விருத்தியேற்புகுந்துயரெனவேகினன்முனிவன்.

(இ-பொ-ரை)

ஆகலால் புண்ணியதீர்த்தங்களிற் சென்று ஸ்நானஞ்செய்தலாகிய தீர்த்தயாத்திரையை நீ செய்தால் அத்துன்பங்களெல்லா

ம் நிவிர்த்தியாகும் அதற்குத்தக்க பொருத்தமான சுபதினமும் சு
பலக்கினமும் இப்போது தான் ஆதலால் சந்தோஷமாய்ச்சீக்கிர
ம் செல்வாய் உன்னெண்ணமெல்லாம் கைகூடும் அப்படிப்போ
காதிருப்பாயேல் துன்பம் வரும் என்று சொல்லி மஹரிஷிபோயி
னர் (எ-று) ௧௩

விரைந்துவேந்தனும்யாத்திரைபோய்வரவிக்கம்
பொருந்துறுதநங்கரிமுகவிமலனைப்பூசித்
தருந்துவித்துயர்ந்தோர்க்குத்தக்கினைமெயாடுமடைகாய்
திருந்துறக்கொடுத்தாசிபெற்றனுச்ஞையிற்சென்றான்.

(இ-பொ-ள.)

பின் துரிதமாய் அரசனும் தீர்த்தயாத்திரைசென்று வருவத
ற்காக யாதொரு இடையூறும் வாரமல் நமது மலரகிதராகிய யா
னைமுகவிநாயக மூர்த்தியைப்பூசித்துப் பெரியோர்களுக்கு ஷட்ர
சைருஜிகளோடுகூடிய திவ்வியாமிர்தமான போஜனஞ்செய்வித்
துத்தக்ஷிணையுடன் தாம்பூலமும் திருத்தமாகக்கொடுத்து அனும
திபெற்றுக்கொண்டு பிரயாணமாயினர் (எ-று) ௧௪

பெருந்தவத்தனிவசிட்டனுமளவில்விப்பிரரும்
பரிந்துமுன்செலநிதியொடுந்தொடர்ந்துபின்படர்ந்து
பொருந்திநீடுகேதாரத்தினறும்புனமேய்ந்தங்
கிருந்தசங்கரற்கண்டடிவணங்கினனேகி.

(இ-பொ-ள)

அப்போதுமிக்க தவசிரேஷ்டரான ஒப்பற்ற தமது குலகுரு
வாகிய வசிட்ட மஹாமுனிவரும் அளவில்லாத பிராமணர்களும்
அன்புடன் முன்னேசெல்லத்தாமும் வேண்டிய திரவியங்களுட
னே அவர்கள் பின்னே தொடர்ந்து சென்று திருக்கேதாரமென்
னும் திவ்விய க்ஷேத்திரத்திற்சென்று அங்கேயுள்ள சிவதீர்த்த
தில்ஸ்நானஞ்செய்து அங்கெழுந்தருளியிருக்கும் பரமசிவனை
தெரிசனஞ்செய்து பாதபத்மங்களில் நமஸ்காரஞ்செய்து அங்
கு நின்றும் போய் (எ-று) ௧௫

வேறு.

மிடைவெதிரிகாச்சிரமந்தனிலடைந்துவேதவியாதனைக்கண்டு

ர்நரநாராயணனைவணங்கிச், தடையில்கோமதிசிந்துகண்டகைச்சரயுசங்கமநீர்ப்பிரயாகையினுமூழ்கிக்காசி, யிடைமணிகர்ணிகையினாடி யாரினுமிக்கசம் விசுவேசனையுமையைத்துண்டிச், கடகளிற்றையுலோலாதித்தனைக்காலவடுகக்கை வுவனமாதவனையெதிர்கண்டுதொழுதங்கண்.

(இ-பொ-ள)

நெருங்கிய வெதிரிகாச்சிரமத்தைச் சேர்ந்து அங்குள்ள வேதவியாசமஹரிஷியைக்கண்டு தெரிசனஞ்செய்து மேன்மைபொருந்தியநரநாராயண மூர்த்தியைப்பணிந்து பின் கோமதை சிந்து கண்டகி சரயுநதிசேர்கின்ற பிரயாகை யென்னும் இப்புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்து காசிக்ஷேத்திரம்போய் அங்குள்ளகங்கையில் மணிகர்ணிகைஎன்றஸ்நானகட்டத்தில்ஸ்நானஞ்செய்து எல்லா மூர்த்திகளிலும் சிரேஷ்டராகிய விசுவேசமூர்த்தியையும் உமாதேவியாகிய விசாலாக்ஷியம்மையையும் மத ஜலமொழியும் துண்டிவிநாயகமூர்த்தியையும் உலோலாதித்தனையும் காலபைரவமூர்த்தியையும் மஹாவிஷ்ணுவையும சந்நிதானத்திற் சென்று வணங்கியவ்விடத்தில் (எ-று) கக

அறுசுவையூண்மறையவரையருத்தினன் பின் கயைவந்தடைந்தியல்பற்குனதோய்ந்துசிராத்த தருப்பணத்தோ, டுறந்திரளோதனபிண்டமுதவிவரநதிபோயுவாக்கலக்குமிடம்படிந்தாயிரங்குடஞ்சுட்டளித்துச், தெறுபவந்தீர்த்தருளசகதாதம்பணிந்தெமபெருமானசிசயிலஞ்சாளத்தி வேங்கடஞ்சென்றிறைஞ்சி, மறைபயிலேகாம்பரத்தெம்பரம்பனைவணங்கிவரதராசனைத்தெரிசித்தேத்தியகமகிழ்ந்தான.

(இ-பொ-ள)

ஷட்வகை ருசிகளோடுகூடிய திவ்வியாமிர்தமான போசனத்தைப்பிராமணர்களுக்கு உண்ணும்படிசெய்து பின் கயாக்ஷேத்திரத்துக்குவந்து சேர்ந்த உத்திரக்ஷேத்திரத்தில் ஸ்நானஞ்செய்து சிராத்ததர்ப்பணத்துடன்பொருந்திய அன்னத்திரளையிலே பிண்டங்கொடுத்து கங்கையானது சென்று சமுத்திரத்திற் சங்கமமாகுமிடத்தில் ஸ்நானஞ்செய்து ஆயிரங்குடங்களைச் சுட்டுக்கொடுத்துப் பாவங்களைப்போக்கும் சகநாதம்என்னும் ஸ்தலத்தில் எழுந்தரு

ளிவிளங்கும் சிவபெருமானை வணங்கி யெமது பரமசிவன் வீற்றி
ருந்தருளும் சீபர்வதம் திருக்காளத்தி திருவேங்கடம் என்னும்
திருப்பதி யிந்தஸ்தலங்களிற் சென்று வணங்கி வேதங்கள் முழங்
கிக்கொண்டிருக்கும் காஞ்சீபுரத்திற் சென்று ஸ்ரீ ஏகாம்பரேசுர
ரை வணங்கி வரதராஜப்பெருமாளையுந் தெரிசனஞ்செய்து ஸ்
தோத்திரமுஞ்செய்து மிக்கசந்தோஷமடைந்தார் (எ-று) ௧௭

அறந்தழைக்குங்காஞ்சிகடந்தம்மைநடம்பரவுமாலங் காடருணை
பழமலைபணிந்துதில்லைப், புறந்தழைக்குந் திருவெல்லை தாழ்ந்து
திருவீதிபுகழ்ந்துதொழுதேழ் நிலைக்கோபுரம்வணங்கி மணிவாய்,
திறந்தழைக்குஞ்சுருதியுபநிடப்பொருளினுருவஞ்சிறந்த திருவம்
பலத்திற்றிகழ்ந்தொருபாற்பச்சை, நிறந்தழைக்குமுமை களிப்ப
வருளிப்பநடஞ்செய் நிமலனடிபழிச்சியுள நெகிழ்ந்துருகி நி
ன்றான்.

(இ-பொ-ள)

தருமந்தழைத்து விளங்குகின்ற காஞ்சிபுரத்தைக்கடந்து கா
ளியானவள் கண்டு வணங்கும்வண்ணம் ஊர்த்ததாண்டவஞ்செய்
தருளிய திருவாலங்காடு திருவண்ணாமலை விருத்தாசலம் என்னு
ம் ஸ்தலங்களிற்சென்று வணங்கிக்கொண்டு சிதம்பரக்ஷேத்திரத்
தின் புறத்தில் மிக்க வளப்பத்துடன் விளங்கும் திருவெல்லையை
க்கண்டவுடன் நமஸ்கரித்து உள்ளேவந்து ஸ்ரீமந்நடராஜமூர்த்தி
திருவுலாவரும் வீதிகளைப்புகழ்ந்து வணங்கி ஏழுநிலைகளையுடைய
கோபுரங்களையும் வணங்கியழகிய திருவாயைத்திறந்தழைக்கின்ற
வேதசிரசாகிய உபநிஷத்துக்களின் உண்மைப்பொருளினது வடி
வமாகச்சிறப்புப் பெற்ற அழகிய கனகசபையின்கண் விளங்கி
யொருபாகத்திற் பச்சை நிறஞ்செழித்துப்பிரகாசிக்கும் சிவகாம
சௌந்தரிகண்டு பேரானந்தமடையவும் திருவருள் பொழியவும்
பஞ்சகிருத்தியத்திருநடனஞ் செய்தருளுகின்ற மலரகிதராகிய
ஸ்ரீ சபாநடேசமூர்த்தியினது திருவடிகளை ஸ்தோத்திரஞ்செய்து
மனங்குழைந்து உருகிநின்றார் (எ-று) ௧௮

அங்கிருந்தகழுமலப் பொற்பதியடைந்து வாஞ்சியங்குடமூக்கி
டைமருதுவேதவனஞ்சாய்க்கா டெங்குநிகழ் திருவாரூர்பெருந்து
றைசீதளிப்புத்தூரிறைஞ்சிச்சேதுவிற்சென்றிருஞ் சிலைக்கோடியி

னிற், சங்கையறநாணவிதிப்படி மூர்த்தியாதித்தனிச் சுடரொயிராம
தாயகனையடிபரவிப், பங்கயப்பூம்புனலாடிக்கோசமங்கையானேப்
பணிந்துதிருக்கானப்பேரூர்தொழுதுபடர்வான்.

(இ-பொ-ளா)

அச்சிதம்பரஸ்தலத்தினின்று அழகிய சீகாழிக்ஷேத்திரத்திற்
குவந்துசேர்ந்து பணிந்தபின் திருவாஞ்சியம் கும்பகோணம் இ
ருவிடைமருதூர் திருமறைக்காடு திருச்சாய்க்காடு எவ்விடத்தும்
பிரபலமாய்விளங்கும் திருவாரூர்திருப்பெருந்துறை திருப்புத்தூ
ர் என்னும் திவ்வியஸ்தலங்கடோறுஞ்சென்று வணங்கிப்பின் இ
ராமேசுரத்திற்குப்போய்ப் பெருமைபொருந்திய தனுஷ்கோடி
தீர்த்தத்தில் விதிவத்தாகஸ்நானஞ்செய்து முதன்மையான ஒப்ப
ற்ற பரஞ்சோதிசொரூபராகிய இராமலிங்கமூர்த்தியின் திருவடி
களில் நமஸ்கரித்துத்துதித்துத்தாமரைகள் மலர்ந்த திவ்வியதீர்த்
தத்தில் ஸ்நானஞ்செய்து பின் திருவுத்தரகோசமங்கையென்னும்
மஹாக்ஷேத்திரத்தில் எழுந்தருளும்சிவபெருமானைவணங்கி யதன்
பின் திருக்கானப்பேரூர் என்னும் புண்ணியஸ்தலத்திற்குவந்து வ
ணங்கி யப்பாற்போவார் (எ-று) கக

ஆதிசிதம்பரந்திருப்பார்க்கரபுரமேனுளினத்திமலர்தரச்செய்பி
திர்முத்திபுரமெனப்பே, ரோதியதெனபூவணத்தினரசர் பிரான
டைந்தங்குற்றமணிகன்னிகையின்னடியுபார்பிதிர்கட், கேதமிலெட்ட
ருப்பணநன்களித்துரியமரபினிரவிபுரிபூசனைகொண்டிருந்த தனி
ப்பொருளைச், சோதியைஞானச்சுடரைச்சுடரொளியையொரு
ற்சுந்தரமின்னனைபுமையைத்தொழுதுருகித்துதித்தான்.

(இ-பொ-ளா)

ஆதிசிதம்பரம் திருப்பார்க்கரபுரம் முன்னுளிலே எனும்பா
னுது புஷ்பமாகமலரச் செய்தபெருமைபொருந்திய பிதிர்முத்திபு
ரம் என்றுசொல்லப்பெற்ற பெயரையுடைய அழகிய திருப்பூவண
ம் என்னும் ஸ்தலங்களில் அரசர்க்கரசனாகிய அரிச்சந்திரமஹா
ராஜன் சென்று அங்கேயுள்ள மணிகர்ணிகையென்னுந் திவ்யதீர்
த்தத்தில் ஸ்நானஞ்செய்து மேலான பிதிர்தேவதைகளுக்குக் குற்
றமற்றதில தர்ப்பணங்களை நன்றாய்ச்செய்து தமக்குரிய குலத்தின்
தலைவராகிய சூரியன்செய்த பூசனை அங்கீகரித்து வீற்றிருந்த

ஒப்பற்றபரம்பொருளாயும் பரஞ்சோதிசொரூபராயும் ஞானசூரியனும் அச்சூரியனது பிரகாசமாயும் விளங்குகின்ற பூவணவிங்கேசுரனையும் வாமபாகத்தில் வீற்றிருந்தருளும் அழகிய மின்னற்கொடிபோன்ற உமாதேவியையும் வணங்கி மனங்கலந்து ஸ்தோத்திரஞ்செய்தான் (எ-று) உ௦

ஆங்ககன்றுபரங் குன்றத்தமர்பவளக்குன்றையலங்கிலே வேற்பவடமணியையடிதொழுதுமதுரைச், தேங்கபழ்பொற்கமலந்தோய்ந்தருட்சித்திக்களிற்றைச் சேயனகருமபையணியாலவாயமுதைப், பாங்குறக்கண்டிரசிதமன்றுடல்தெரிசித்தப்பதிகடந்து வசிட்டனொடும்புனவரொடுமபடர்ந்து, பூங்கதிர்நித்திலஞ்சுருட்டுந் திரைவேகவதிநீர்ப்பொருகரைப்பாவிடவபுரதிருநகர் புக்கனனால்

(இ-பொ-ள)

பின் அங்குநின்று நீங்கித் திருப்பரங்குன்றத்தி லெழுந்தருளும் பவளாசலம் போன்ற ஸ்ரீ பரங்குன்றேசுரனையும் பிரகாசிக்கின்ற தகவுவாய்ந்த வேலாயுதத்தைத்தரித்த மாணிக்கம் போன்ற முருகக்கடவுளையும் திருவடிகளில் நமஸ்கரித்து பின் மதுராபுரிக்கு வந்து அங்குள்ள வாசனைவீசுகின்ற பொற்றாமரை யென்னும் திவ்யதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து கிருபைபொருந்திய சித்திவிநாயகமூர்த்தியையும கரும்புபோன்ற மீனாக்ஷியம்மையையும் அலங்காரமான திருவாலவாயிலெழுந்தருளும் அமிர்தம் போன்ற ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமானையும முறைமையாகத் தெரிசித்து வெள்ளியம்பலத்தில் செய்தருளும் பரமானந்ததாண்டவத்தையும் தெரிசனஞ்செய்து கொண்டு அம்மதுரைமாநகரினின்று நீங்கி வசிஷ்டமஹரிஷியோடும் மற்றைய பிராமணர்களோடும் நடந்து பொலிவாகிய பிரகாசம்பொருந்திய முத்துக்களைச்சுருட்டி யெறிகின்ற அலைகளையுடைய வையையாற்றில் ஜலம் மோதிக்கொண்டிருக்குங்கரையின் பக்கத்திலிருக்கின்ற இடவபுரமென்னும் திவ்யக்ஷேத்திரத்திற் சேர்ந்தார் (எ-று) ஆல் அசை உக

வேறு.

ஞாலநீர்த்திரைப்பசுத்தடங்குடைந்துரோமசன்
கூலநீடியோகமெய் தல்கண்டுகைகுவித்துமுன்
சாலநேரநிற்றபோததவன்விழித்துணர்ந்துநீர்

ஞாலநாதநின்வரத்துநல்வரத்தெனச்சொலா.

(இ-பொ-ள)

சப்திக்கின்ற ஜலத்தையுடைய அலைகள்பொருந்திய இடபதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து உரோமசமஹாரிஷி பந்தீர்த்தக்கரையில் யோக நிஷ்டையிலிருப்பதைப் பார்த்து இரண்டுகைகளையும் கூப்பி யவர்முன்னே நெடுநேரம் நின்று கொண்டிருக்கிறபோது தவசிரேஷ்டராகிய அம்மஹாரிஷியானவர் விழித்துப்பார்த்துச்சமுத்திரஞ்சூழ்ந்த இப்பூமியையாளும் மஹாராஜனே உன்வரத்து நல்லவரத்துத்தான் என்று சொல்லி (எ-று) ௨௨

கண்டுநாளனேகமுண்டுகாணெனப்புகன்றுபின்
மண்டுநீர்த்தரங்கவைவையவாலுகத்தையன்னமாய்ப்
பண்டுகாணுநாதர்பதிக்குள்வைகுமேன்மையார்
விண்டுகூறுவாரிந்நாள்வியப்பதொன்றுகண்டனன்.

(இ-பொ-ள)

நாம் உன்மைப்பார்த்து அனேக காலமாச்சுது என்று சொல்லிப்பின்னர் முற்காலத்தில் நெருங்கிய நீர்த்திரைகளையுடையவையையாற்றிலுள்ள வெண்மணலைச் சாதமாகச்செய்த அன்னவிநோதமூர்த்தி யிவ்விடபுரத்தில் வீற்றிருக்கும் மேன்மையையார் தான் இவ்வளவென்று வாய்விட்டுச் சொல்வார் ஒருவருமில்லை இஃதிப்படியிருக்க இக்காலத்தில் யாவரும்மிக ஆச்சரியமடையக்கூடிய ஓர் அதிசயத்தைப்பார்த்தேன் (எ-று) ௨௩

என்சொல்கேனெனப்பணிந்திலங்குசெங்கைவேலினான்
றன்செவிற்றுதித்துநின்றுசாற்றெறுநதேனுமேன்
முன்சொலத்தகுந்தபாவிமொழிகனத்தபோதனை
னின்சொலிற்புகழ்ந்துமன்னவீதுகேளெனச்சொல்வான். ௨௪

(இ-பொ-ள)

அந்த அதிசயத்தை நான் என்னசொல்வேன் என்றுசொல்லி விளங்குகின்ற வேலாயுதத்தைததரித்த செவ்வியகையினையுடைய அரிச்சந்திர மஹாராஜன நமஸ்காரஞ்செய்து தான் ஸ்தோத்திரஞ்செய்து நின்று கொண்டு சுவாமீ அது சொல்லக்கூடாததல்லை

யதாயினும் அடியேன் முன் சொல்லலாம் ஆதலால் தயைசெய்து திருவாய்செய்தருளவேண்டுமென்று பிரார்த்திக்கத் தபசிரேஷ்டராகிய அம்மஹரிஷியின் சொல்லாற்புகழ்ந்து ஏ மஹாராஜனே இதனைக் கேட்டாயாக என்று சொல்லத் தொடங்கினர் (எ-று) உச

தலையெனச்சொலிந்தமாதலத்தளாளொர்தையல்பின்
கலையெனத்தரும்பெயர்குடத்திமாக்கன்றுளா,
ளிலையெனச்சொலாதபானெயெனறும்ற்றுண் வாழ்க்கையாள்
விலையெனக்கொடாதமோர்விளார்தளிக்குமேன்மையாள்.

(இ-பொ-ரை)

புண்ணியஸ்தலங்கள் எவற்றிற்கும் முதன்மையாகச் சொல்லும் இவ்விடபுரத்தில் உள்ளவளாகிய ஓர் ஸ்ரீ பிங்கலையென்னும் பெயரையுடைய இடைச்சிமாடுகளும் கன்றுகளும் விசேஷமாக உள்ள வள் எப்போதும் பால் நெய் இவைகளை யில்லையென்று சொல்லாது விற்று உண்ணுகிற வாழ்வை யுடையவள் மோர் மாத்திரம் கேட்பவர்க்கெல்லாம் விலையில்லாமலே சீக்கிரமாய்க் கொடுக்கும் மேன்மையுள்ளவள் (எ-று) உரு

இழுதநாறுமேனியாளளித்தசேயெம்மீசனைத்
தொழுதுணேசமெய்தவந்தசுந்தரப்பெயரினன்
பழுதில்கன்றினங்களாயர்பாலரோடுமேய்க்குநாட்
பொழுதுதேர்கிலாதகாலமாரிதான்புகுந்ததால்.

(இ-பொ-ரை.)

நெய்மணங்கமழுஞ் சரீரத்தையுடைய அப்பிங்கலையென்னும் இடைச்சிபெற்றபிள்ளையானவன் நமது சிவபெருமானை வணங்கி உள்ளே அன்புபொருந்திய சுந்தரமென்னும் பெயரினையுடையவன் அவன் குற்றமற்ற மாடுகன்றுகளின் கூட்டங்களை மற்றைய இடைப்பிள்ளைகளோடு மேய்த்துக்கொண்டு வருங்காலததில் காலத்தை நன்றாக இவ்வளவென்றறியக்கூடாத காலமாகிய மழைக்காலம் வந்தது (எ-று) ஆல் அசை உசா

புடையுடுத்தசிறுகரோகிமழைபொழிந்தபோதெல்லாம்

படவிடைக்கனுடலொடுக்கிநிற்பனங்கோர்பகன்மனத்
திடையெடுத்தவட்கையாவிளாத்தவாய்மகாரொடு
மடைதிருத்தியோர்குளம்வகுத்துநீர்மறித்தனன்.

(இ-பொ-ளை)

பக்கத்திற்றன்னைச்சூழ்ந்த சிறுபிள்ளைகளோடு மழைபெய்
தகாலத்திலெல்லாம் தட்டியினிடத்தில் தன்சரீரத்தை யொடு
க்கிக்கொண்டுநிற்பான் இவ்வாறுநிகழுநாளிலே யொருநாள் மன
திலுண்டான ஆசைப்பெருக்கத்தால் மற்றைய இடைப்பிள்ளைக
ளோடுமடைகோலி யொருகுளமுண்டாக்கி யதிலே ஜலத்தை
திரப்பினுர்கள் (எ-று) , உஎ

கோட்டிநீர்நிறைந்தபின்குறித்தபிள்ளைமைவிளை
யாட்டினலோர்குட்டடிக்குளமதுநன்னிலஞ்சமைத்
தோட்டிவந்தகனைறவிட்டுழக்கிவெண்ணைபோற்குழைத்
திட்டுசேறுசெய்துநாற்றெடுத்துவந்துநட்டரோ.

(இ-பொ-ளை)

இவ்வாறு மடைகோலிஜலம் நிரப்பியபின்னர் சிறுபருவத்தி
ற்குத்தக்கவிளையாட்டினல் அழகியஅரிகட்டுகளைக் கடாக்களினு
ல்துவைப்பிக்கின்ற ஓர்குட்டடியவ்வளவு நன்செய்உண்டாக்கி
மேய்ப்பதற்காக ஓட்டிக்கொண்டுவந்த கன்றுக்குட்டிகளை அவ்வ
யலில்விட்டுக்கலக்கி வெண்ணெயைப்போலக் குழைவாகச்சே
டையாக்கிநாற்றுமுடிகளையெடுத்துவந்து அதில்நட்டு (எ-று)
அரோ அசை உஅ

இந்நிலத்திலிதுவிளைந்ததென்னிலந்தவையைநீர்
பொனனுமுத்துமுங்கொழித்தபூந்திலாககலாக்கனே
கன்னிபக்கநின்றகிலகட்பிரானறனக்கெனப்
பன்னிநித்தலும்புகுந்துபாதுகாப்பதாயினுன்.

(இ-பொ-ளை)

இந்தநிலத்திலே நட்டஇந்த நெற்பயிர் நன்றாய்விளைந்ததே
ல் இவ்வையையாற்று நீர்அடித்துக்கொண்டுவரும் பொன்முத்து
இவைகளைக்கொழித்து ஒதுக்கும்பொலிவாகிய துலைகள்மே
தகின்ற கலையினிடமாக இளமைபொருந்திய உமாதேவியாகிய
குரவங்கமழ்குழலம்மையிருக்கும் திருவாப்புடையீசருக்கே ய
மெனறுசொல்லித் தினந்தோறும் போய் காத்துக் கொண்டுவ
தான் (எ-று) உகூ

திறந்துவிட்டுநீ ரினஞ்செலுத்துபோதுசிறுகுளம்
உறந்துவிட்டதஃதறிந்த மாசிலான் சுரந்தபால்
கறந்துவிட்டுமம்மருங்கு கன்றுமேய்த்துநாடொறு
மறந்துவிட்டிடாதுமேல்வளர்த்துநலபயிர்செய்தான்

(இ-பொ-ள்)

மடையைத்திறந்துவிட்டுத் தண்ணீரைத் தினமும் பாய்ச்சிக் கொண்டுவரும்போது அந்தச்சிறிய குளமானது வற்றிப்போய்விட்டது அதுதெரிந்து அவ்விடைப்பிள்ளையானவன் குற்றமில்லாதபசுவின் மடியிற்சுரந்திருக்கிற பாலைக்கறந்து அந்நெற்பயிருக்கு விட்டும் அந்தப்பக்கத்திலேயே மாடுகன்றுகளை மேய்த்தும் நாடோறும் மறவாமல் நல்லஅந்நெற்பயிரைவிர்த்திசெய்தான்,எ-று ௯0

பால்பிடித்தமுற்றிநேர்றலைபழுத்தபக்குவத்
தால்பிடித்திருந்தறஞ்சொலண்ணல்செங்கைமுத்தலை,
வேல்பிடித்தகாலினுன்விரும்பிமேய்தல்கண்டுநன்
கோல்பிடித்தகையனண்டர்கோன்மகிழ்ச்சிகூர்ந்தரோ.

(இ-பொ-ள்)

பின்னெற்கள்பால்பிடித்து நன்றாய்முதிர்ந்து அதின்தலைகள் சிவந்தநல்லபக்குவகாலத்திலே கல்லாலவிருக்ஷத்தினிழலில் வீற்றிருந்து தருமத்தைத்திருவாய் மலர்ந்தருளிய மூன்று சிரசுகளையுடைய சூலாயுதத்தைத்தரித்த திருவாப்புடையீசராகிய செவ்விய சையையே காலாகவுடைய பகவானதுவிரும்பியப் பயிரை மேய்ந்துகொண்டிருக்க அதைப்பார்த்த கையிற்கோலையுடைய அவ்விடையர் குலதிலகனுனசுந்தரம் என்பவன்மனமகிழ்ச்சிகொண்டு.(எ-று) அரோ அசை ௯க

வேறு

சால்பாயவெருண்டுவயற்கயல்பாமநுரைபாய்ந்துகடைவாய் தோ
றும்
பல்பாயக்கதிர்மேவவாப்புடையானயனநீர்பாய்ந்துபாயச்,
சால்பாயவுவகைமனத்தலைப்பாயவாவுருவந்தனைக்கொண்டெங்கே
(ரன்
சேல்பாய்மைவிழிபாகனுப்புடையானுகர்வதெனத்தெளிந்தான்ம
ன்னே

(இ-பொ-ளா)

சேற்கண்டைபோலும் மைதீட்டியகண்களையுடைய ஞாவங்கமழ் குழலம்மையை வாமபாகத்திலுடையதிருவாப்புடையீசர்பசுவடிவங்கொண்டுவந்து காலைவயலிலேலவைக்கவும் அதிலுள்ளகபல்மற்சங்கள் யாவும்பயந்து தள்ளிக்குதிக்கவும் கடைவாயெல்லாம் நுரைகள்செறிந்து பால்வழியவும் அந்நெற்கதிர்களைத்தின்ன அத்திருவாப்புடையீசராகிய பசுவினதுகண்களினின்று ஆனந்தக்கண்ணீர்பெருகிப்பாய அதனால்மேன்மையான சந்தோஷமானது மனதிலுண்டாக திருவாப்புடையீசர் தானிவ்வாறுவந்து தின்னுகிறுறென்று அவ்விடையன் தெரிந்துகொண்டான் எ-று மன்னுஅசை கஉ

ஆச்செயல்கண்டணியாப்பனூருடையான் மகிழ்ந்துவிரைந்தண்டர்கோன்றன்
மெய்ச்செயல்பாண்டியற்குணர்த்தியமைச்சுரிமையவர்க்களிப்பவே வண்டுமென்னு
விச்சையிற்சொற்பனஞ்சாதித்திரந்தனர்யாதொன்றேனுமீந்தோர் வேண்டின்
மூச்சகமுமளிப்பனிந்தமூர்த்திவரப்பெருங்கருணைமூர்த்திவேந்தே

(இ-பொ-ளா)

பசுவடிவங்கொண்டுவந்த அத்திருவாப்புடையீசர் அவ்விடையன் உள்ளக்கருத்தைத்தெரிந்து திருவுள்ளமகிழ்ந்து விரைவாய் அவனுடைய செய்கைகளையெல்லாம் அக்காலத்திலரசு செய்த பாண்டியமஹாராஜாவுக்குத்தெரியச்செய்து பின் அவனுக்கு மந்திரித்துவத்தைக் கொடுக்கவேண்டுமென்று விருப்பத்தோடும் அம்மஹாராஜாவின் சொற்பனத்திற்சாதித்து யாசித்தார். ஏ அரிச்சந்திரமஹாராஜனே விசேஷமான திருவருளையேதிருமேனியாகவுடைய இந்தக்கடவுள் ஏதேனுங் கொடுத்தவர்கள் வேண்டினால் மூவுலகங்களையுங்கொடுப்பார். (எ-று) கங

ஆகலினீயாயிரத்தெட்டகமறையோர்க்கித்தலத்தளமைத்தியெனுண்
மூதிரையானுக்குமெனவுரோமசன்மந்திரத்திருவாய்மூடுமுனர்
நீதகலிம்முனியுரைத்தபடியெமக்குளுவகைதரச்செய்ந்நீயென்னுச்
சோதிகொள்வானகக்கழித்தொருமொழி வேத்திருசெவியிற்றாங்கிற்றன்றே

(இ-பொ-ள)

ஆதலினால் நீ பிராமணர்களுக்கு இந்தஸ்தலத்தில் ஆயிரத்தெட்டுவீடுகளமைப்பாயானல் திருவாதிரை நக்ஷத்திரத்திற்றரிய திருவாப்புடையீசர் திருவுள்ளமகிழ்வாரென்றுசொல்லி உரோமசமஹரிஷியானவர் தமதுவேதகானஞ்செய்யுமழகியவாயை மூடுமுன்னமே குற்றமற்ற இவ்வுரோமசமஹரிஷி சொல்லியவாறே நமக்குத்திருவுள்ளத்தில் சந்தோஷமுண்டாக நீ செய்வாயென்று பிரகாசத்தையுடைய ஆகாயத்தினை வயிற்றைக் கிழித்துக்கொண்டெழுந்தவாக்கானது அவ்விராசனது இரண்டுகாதுகளிலும் நிரம்பக்கேட்டது. (எ-று) அன்றே அசை. ௬௪

சிந்தையிடஞ்சுருங்கமலர்பெருங்களிப்பால் சிவன்கோயிற் சென்றுசூழ்ந்து
வந்துபணிந்தன்னவினோதனைக் குரவங்கமழ்குழலைவழுத்திமீண்டு
முந்துவசிட்டனையுமுரோமசனையுங்கேட்டுரியசுபமுகூர்த்தம் வைத்துத்
தந்திரநூற்படியிருநான்கடுத்தவாயிரங்கிருகஞ்சமைத்தான்மன்னே

(இ-பொ-ள)

உடனே அரிச்சந்திரமஹாராஜன் மனதினிடம் சுருங்கிச்சிறிதாகத்தோன்றிய பெருங்களிப்பினால் அச்சிவாலயத்திற்சென்று பிரதக்ஷிணஞ்செய்து நமஸ்கரித்து ஸ்ரீ அன்னவினோதமூர்த்தியும் குரவங்கமழ்குழலம்மையையும் ஸ்தோத்திரஞ்செய்து திரும்பி முதன்மையான குருவாகிய வசிஷ்டமஹாரிஷியையும் உரோமசமஹாரிஷியையுங்கேட்டு உரிய சுபமுகூர்த்தஞ்செய்து சிற்பசாஸ்திரப்படி ஆயிரத்தெட்டுவீடுகள்செய்துமுடித்தார் (எ-று) மன்னே அசை ௬௫

இலவணமுற்சுவைப்பொருளுமுரலுலக்கையில்லுறைகலிந்தனத்தோ
டலர்தருவெண்சாலிவல்சிகறிக்கினியகாய்வருக்கமறுவைபொற்பூண்
குலவியவெண்கலமாதிபாத்திரமாவினையின்ன குறித்து வெவ்வே
றிலவிலகந்தொறுமமைத்தந்தணர்கையினீரொடு மளித்தானொருசொல்வேந்தன்

(இ-பொ-ரை)

உப்புமுதலாகிய சுவையுள்ளவஸ்துக்களும் உரலும் உலக்கையும் குடைகல் விறகுடனே வெண்ணிறமான சம்பாநெல்லும் அரிசியும் பதார்த்தங்களுக்கு இனியதானகாய்வகைகளும் வஸ்திரங்களும் பொன்மயமான ஆபரணங்களும் பிரகாசமானவெண்கலப்பாத்திரங்களும் பசுநிரைகளுமாகிய இவைகளையெல்லாம் குறிப்பாகநியமித்து வேறுவேறாகக்கெடுதலில்லாத ஒவ்வொருவீடுகளிலும் பொருந்தவைத்துப் பிராமணர்கள்கையில் ஜலத்துடனே தத்தஞ்செய்துகொடுத்தார். சந்தியந்தவறாத அரிச்சந்திரமஹாராஜன்.(எ-று) கூகூ

இருபிறப்பினோர்க்கருளாயிரத்தொடிருநான்குபங்கிலிருபங்கென் (று
மொருபிறப்புமிலிக்குதவிப்பிராகாரங்கோபுரங்கண்மெயர்ந்ததீர்த்த (க்
கரையிருக்குமண்டபஞ்செய்தளவிலணிபாடைபொளிகளுலத்தந் (து
புரையறுக்கும் புனிற்றுவீரைஞ்ஞூறுதிரிசூலம் போகட்டீந்தான.

(இ-பொ-ரை.)

பிராமணர்களுக்குக்கொடுத்த ஆயிரத்தெட்டுப்பங்கிலே இரண்டுபாகத்தைமாத்திரம் எப்போதும் ஒருபிறப்புமில்லாதவராகிய ஸ்ரீமத்திருவாப்புடையீசருக்குக்கொடுத்துத்திருக்கோயிற்பிரகாரங்களுங்கோபுரங்களுங் கட்டுவித்து மேன்மைபொருந்திய இடப தீர்த்தக்கரையில் சந்தியாமண்டபங்களுஞ் செய்து அளவில்லாத ஆபரணங்களும் வஸ்திரங்களும் பிரகாசம்பொருந்தக்கொடுத்துக் குற்றங்களைப்போக்குகின்ற இளங்கன்றுள்ள ஆயிரம் பசுக்களை மூன்று சிரசுகளையுடைய சூலக்குறிபொறித்துவிட்டார எ-று கூஎ

பின்னராப்புடைய பிரான் மலர்க்குரவங்கமழ்நழலெலம் பிராட்டி பாதந், தன்னையாதாரத்திறைஞ்சிவசிட்டனெனுமேயோத்திநகர்சார்ந்துதந்து, வென்னுமோரவுணனுடறடிந்தசுடுசரவேந்தனிருந்தானப்பாற், றுன்னியோங்கசத்தியதோடத்தினுருதாசியற்பிச்சுவர்க்கஞ் சேர்ந்தான்.

(இ-பொ-ள)

அதன் பின்னர் திருவாப்புடையீசர் திருவடியையும் குரவங்கமழ்குழலம்மை திருவடியையும் மெய்யன்புடன் வணங்கி விடைபெற்றுக்கொண்டு வசிஷ்டமஹாரிஷியுடனேதமது அயோத்திமாநகரையடைந்து துந்துவென்னும் பெயருடைய ஓரசுரனதுசரீரத்தைக்கொன்ற கொடியபாணத்தையுடைய அவ்வரிச்சந்திர மஹாராஜன்சுகமாயிருந்தார் பின்எப்போதும் சத்தியவானாகவே யிருந்து இராச்சியபரிபாலனஞ் செய்து சுவர்க்க லோகத்தையடைந்தார். (எ-று) ௬அ

பொற்றகடுநிரைத்தனையபூங் கொன்றைவனத்தமலன் புகழ்மை
கேட்கப்,பெற்றிடுநும்மால்யானும்பவித்திரமானேனென்றுபேசி
மோன, முற்றிருந்தசூதபவு ராணிகனையாப்பனூ ருடையானை
கக்,கற்றமுனிக்கணம் பூசித் தருள்பெற்றானந்தமதிற் கலந்தார்மன்னோ,

(இ-பொ-ள)

பொன்மயமானதகடுகளையே நிரை நிரையாகவைத்தாற்போன்ற புஷ்பங்களையுடைய கொன்றைவனத்தெழுந்தருளி யிருக்கின்ற மலரகிதராகிய திருவாப்புடையீசரது திவ்வசரித்திரங்களைக் கேட்கப்பெற்ற உங்களால் யானும் பரிசுத்தனாயினேன் என்றுதிருவாய்மலர்ந்து பின்மௌனமாகவிருந்த சூதபுராணிகரைத் திருவாப்பனூரில் வீற்றிருந்தருளும் திருவாப்புடையீசராக வேமதித்துச் சாஸ்திரங்களைக் கற்றுணர்ந்த நைமிசாரண்ணிய மஹரிஷிகள் பூசைசெய்து அவரது கிருபையைப்பெற்றுப் பேரானந்தப்பெருவாழ்வையடைந்தார்கள் (எ-று) மன்னோஅசை ௬க

வேறு.

ஈசனிடபபுரமான்மியமீதுபரமசிவனாலயம்
வீசநதிபுனிதமாமிடமேவிவினவுமவர்பான்மன
நேசமுறவுரைசெய்வோர்தினநீடுசெவியினுகர்வோர்வினை
மாசகமுவுவர்பராபரன்வாசமலரடியுள்வாழ்வரால்

(இ-பொ-ரை)

எப்பொருட்கு மிறைவராகிய இடபபுரேசர் வீற்றிருந்தரு ளும் இடபபுரசரிதமாகிய இதை அப்பரமசிவ னெழுந்தருளி யிருக்கும் ஆலயத்திலும் அலைகளைவீசுகின்ற புண்ணியநதிக்கரை யிலும் பரிசுத்தமான திருமடமுதலான இடங்களிலும் சேர்ந்து விருப்பத்துடன கேட்பவர்களிடத்தில் உள்ளன்புடன்சொல்வோர் களும் அதைக்காதுகுளிரக்கேட்பவர்களும் பாபவினைகளினின் றுநீங்கித்திருவாப்புடையீசரது வாசனைபொருந்திய திருவடித்தா மரையையடைந்துசுகமாய்வாழ்ந்திருப்பார் எ-று)ஆல் அசை சு0

## வேறு

தெய்வமறையவாவிளங்கச் சிவசமயமனுவேந்தன் செங்கோ லோங்கப், பெய்வளங்கூர்மழைபொழிகமன்னுயிர்க்கின்பமபொ லிகபெரியோர்வாழ்க, மெய்வளாநந்திருவாப்பனூ நுடையபரமர் திருமேனி திண்டுஞ், சைவர்குலம்பெருக வரன்றளிபுதுக்குமன்பர் சூழாந்தழைகமாதோ.

(இ-பொ-ரை.)

தெய்வத்தன்மை பொருந்திய வேதாத்தியயனஞ்செய்யும் பி ராமணர்கள் நன்றாய்விளங்கக்கடவர்கள் மனுநீதிதர்மசாஸ்திர ப்பிரகாரம் அரசியற்றும சைவசமயராஜாக்களது செங்கோன் முறை மேன்மேலும விர்த்தியாகக்கடவது மழைபெய்கின்றவளா ப்பம்பொருந்திய மேகங்கள் தவறாது மாதமும் மாரி பெய்யக்கட வன நிலைபெறற ஆன்மாக்களுக்கெல்லாம் சுகம்பெருகக்கடவ து சுற்றறிந்த பெரியோர்கள் யாவரும் நன்றாக வாழ்ந்திருக்கக் கடவர்கள் சத்தியவான்களான நமதுதிருவாப்பனூரில் வீற்றிரு ந்தருளும் திருவாப்புடையீசரது திருமேனியைபபரிசிக்கின்ற ஆ திசைவர்குலமானது அபிவிர்த்தியாகக்கடவது இடபபுரேசர் வீ ற்றிருந்தருளும் ஆலயத்தைச் சீர்ணோத்தாரணஞ் செய்கின்ற அ டியார்கூட்டங்கள நன்றாய் வாழ்ந்திருக்கக்கடவாகள் (எ-று) சுக மாதோ அசை

அரிச்சந்திரன் தீர்த்தயாத்திரைச்சருக்கமுற்றிற்று.

காப்புள்பட ஆ திரு விருத்தம், ருகரு

## திருவாப்பனூர்ப்புரர்ணம்.

முற்றிற்று

